# விக்கிரமனின் சிறுகதைக் கலை

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்கான
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**க. லெட்சுமி**

(பதிவு எண்: 1267)



நெறியாளர்

**முனைவர். சு. இராசாராம்**










**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசிய தர மதிப்பீட்டுக் குழுவின் 'ஏ' மறுதர மதிப்புப் பெற்றது)

காரைக்குடி-630 003.

தமிழ்நாடு, இந்தியா.

**ஆகஸ்ட் - 2012**

**முனைவர் சு.இராசாராம்** எம்.ஏ.(தமிழ்),எம்.ஏ.(மொழியியல்),எம்.பில்.,பி.எட்.,பிஎச்.டி.,

பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி - 630 003.

நாள் : 27.08.2012

# நெறியாளர் சான்றிதழ்

**"விக்கிரமனின் சிறுகதைக் கலை"** என்னும் தலைப்பில் திருமதி க.லெட்சுமி அவர்கள் பகுதிநேர முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(சு.இராசாராம்)**

நெறியாளர்

முனைவர் சு. இராசாராம்
பேராசிரியர் - தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக் கழகம்
காரைக்குடி - 3.

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்.
காரைக்குடி-630 003

**க.லெட்சுமி** எம்.ஏ.,எம்.எட்.,எம்.பில்.,
முனைவர்பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்),
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 27.08.2012

# ஆய்வாளர் உறுதிமொழி

**"விக்கிரமனின் சிறுகதைக் கலை"** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இந்த ஆய்வு, எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(க.லெட்சுமி)**
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் சு.இராசாராம்** எம்.ஏ.(தமிழ்),எம்.ஏ.(மொழியியல்),எம்.பில்.,பி.எட்.,பிஎச்.டி.,
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.



# நன்றியுரை


'விக்கிரமனின் சிறுகதைக் கலை' என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், தமிழ்த்துறைக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக் காலத்தில் எனது படிப்பிற்கான நிர்வாக அலுவல்களைத் திறம்படச் செய்து கொடுத்த தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மு.பாண்டி அவர்களுக்கு எனது நன்றி.

ஆய்விற்குத் தக்கதோர் வழிகாட்டியாக, தொடக்கத்திலிருந்து முடிவு வரை அறிவுரைகள் கூறி ஆய்வேடு செம்மையாக அமையப் பல்லாற்றானும் நல்லுதவி புரிந்து ஆற்றுப்படுத்திய ஆய்வு நெறியாளர் முனைவர் க.இராசாராம் அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வில் அவ்வப்போது ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்திசெய்த முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்காலத்தில் ஊக்கம் வழங்கி, ஆய்வு செம்மையுற உறுதுணையாய் அமைந்த அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் கே.கண்ணாத்தாள் உதவிப் பேராசிரியர், முனைவர் சி.பரமேஸ்வரி ஆகியோருக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தந்து உதவிய மைய நூலகர், நூலக அலுவலர்கள், அழகப்பா பல்கலைக்கழக அலுவலர்கள், அழகப்பா

அரசு கலைக்கல்லூரி நூலக அலுவலர்கள் அனைவருக்கும் என் நன்றி உரித்தாகுக.

என் உயர்கல்விப் படிப்பிற்கு வித்திட்டு, தூண்டுகோலாயிருந்த என் தந்தை திரு.அழ.கணபதி அவர்களுக்கும், எனது படிப்பில் எவ்வித இடையூறும் ஏற்படாவண்ணம் எனக்குப் பல உதவிகளைச் செய்து பக்கபலமாய் இருந்த என் கணவர் திரு.வயி.இலக்குவன் அவர்களுக்கும், எனது ஆய்வில் எவ்வித இடர்ப்பாடும் ஏற்படாமல் என் குழந்தைகளைக் கவனித்த எனது தாய்க்கும், இவ்வாய்விற்கு இடைஞ்சல் ஏற்படுத்தாத எனது மகன்கள் விக்னேஷ், விஷ்வந்த் ஆகிய இருவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்ஆய்வேட்டைச் செம்மையாகவும், நேர்த்தியாகவும் கணினியில் அச்சாக்கம் செய்த காரைக்குடி மகேஷ் கணினியக உரிமையாளர் திரு.சுப.சுரேஷ் அவர்களுக்கும், ஆய்வேட்டை நூல்கட்டு செய்த அச்சகத்தார்க்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*நன்றியுடன்*
**க.லெட்சுமி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரையாசிரியர் |
| கட். | - | கட்டுரை |
| கு.எ. | - | குறள் எண் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| நூ.எ. | - | நூற்பா எண் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| ப.ஆ.இ. | - | பதிப்பு ஆண்டு இல்லை |
| பா. | - | பாடல் |
| பா.மொ.எண். | - | பாடல் மொத்த எண் |
| பேரா. | - | பேராசிரியர் |
| மேலது | - | மேலே குறிப்பிடப்பட்டது |
| மொ.பெ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| வ.எண். | - | வரிசை எண் |
| வி.கு. | - | விளக்கக் குறிப்புரை |
| P. | - | Page |
| PP. | - | Pages |

# பொருளடக்கம்

# முன்னுரை

இருபதாம் நூற்றாண்டு இலக்கிய வகைகளுள் ஒன்றான சிறுகதை பல்வேறு கருத்துக்களைத் தாங்கிப் பூத்துக்குலுங்குகின்றது. பல்வேறு இளம் எழுத்தாளர்கள் தோன்றி, தங்கள் எண்ணங்களையும், சிந்தனைகளையும் சிறுகதைகளாக உலகிற்குப் படைத்தளித்து வருகின்றனர். தமிழரின் இக்கால வாழ்க்கை, விரைவும் நெருக்கடியும் நிறைந்ததாய் உள்ளது. காப்பியம், புதினம் போன்ற பெரிய இலக்கியங்களை நிதானமாகப் படிப்பதற்கு மக்களுக்குப் போதிய நேரம் கிடைப்பதில்லை. மேலும் வார இதழ்களும், நாள் இதழ்களும் சிறுகதைகள் பலவற்றை வெளியிடுகின்றன.

சிறுகதைகள் எல்லாம் மக்களின் அன்றாட வாழ்க்கையை ஒட்டியனவாய் உள்ளமையால் அவற்றின்கண் அவர்தம் உள்ளங்கள் பெரிதும் ஈர்க்கப்படுகின்றன. சிறுகதைக்குரிய மற்றொரு கூறு முரண் ஆகும். பொதுவாக இது நன்மைக்கும், தீமைக்கும் ஏற்படும் மோதலிலிருந்து தோன்றுவதாகும். ஒருவர் உள்ளத்தில் தோன்றும் நன்மை உணர்விற்கும், தீமை உணர்விற்கும் ஏற்படும் போராட்டத்தையும் இது குறிக்கும். அவ்வகையில் அமைந்த சிறுகதைகளை எழுதிய ‘சிறுகதைச் சேக்கிழார்’ கலைமாமணி விக்கிரமனின் படைப்புத்திறனை விளக்குவதாக இவ்ஆய்வு அமைகிறது.

## ஆய்வுத் தலைப்பு

விக்கிரமனின் சிறுகதைகளை ஆயும் முகத்தான் ‘விக்கிரமனின் சிறுகதைக் கலை’ என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வுக் கருதுகோள்

சிறுகதைகள் காலத்தின் பிரதிபலிப்பாக அமைவன. சுவையான ஒரு நிகழ்ச்சி, சூழ்நிலை அமைப்பு, கவர்ச்சியான ஒரு காட்சி, ஒரு சிறு அனுபவம்,

வாழ்க்கையில் பெற்ற ஒரு பெற்றி, வாழ்வியல் முரண்பாடுகள், குடும்பம் மற்றும் அதில் ஏற்படும் சிக்கல்கள், தீர்வுகள் ஏதேனும் ஒன்று, ஒரு சிறுகதையின் அடி நாதமாக அமைக்கப்படுகிறது. படைப்பாளனின் மனதைக் கவர்ந்த சில நினைவுகளைத் தனது படைப்புகளில் அவன் படைக்கிறான். எல்லாச் சிறுகதைகளின் அடிப்படையும் சமூகத்தைச் சார்ந்துதான் அமைகிறது. அதற்குக் காரணம் படைப்பாளனும் சமூகத்தின் ஓர் அங்கம் என்பதேயாகும்.

விக்கிரமன் சிறுகதைகளின் கதைப்பொருள், கருப்பொருள் சார்ந்த பின்புலங்களைக் கண்டறிவதும், அவற்றின் வடிவம், தன்மை, போக்கு, வளர்ச்சி நிலைகளை விளக்குவதும், இச்சிறுகதைகளின் மூலம் ஆசிரியர் சமுதாயத்திற்குக் கூறும் கருத்துக்களை ஆய்வதும் இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு நோக்கம்

இன்றைய காலகட்டத்தில் சிறுகதைகள் ஒவ்வொரு மனிதரின் வாழ்விலும் நடக்கும் நிகழ்வுகளையும், சமுதாயச் சீர்கேடுகளையும், காதல் உணர்வுகளையும் உயிரோட்டம் போல வெளிக்கொணர்ந்து கொண்டிருக்கின்றன. அவ்வகையில் விக்கிரமன் சிறுகதைகளின் கதைப்பொருள், கதைக்கரு, பாத்திரப்படைப்பு, சமுதாயச் சிந்தனைகள், பெண்ணியச் சிந்தனைகள், கலைத்திறன்கள் ஆகியவற்றை ஆய்ந்து விளக்குவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு முன்னோடிகள்

சிறுகதைகளைக் கால அடிப்படையிலோ அல்லது ஒரு குறிப்பிட்ட எழுத்தாளர் அடிப்படையிலோ ஆய்வு செய்வது பொதுவான போக்காகும். விக்கிரமன் புதினம், சிறுகதை, கட்டுரை எனப் பல வகையான இலக்கியப்

படைப்புகளைப் படைத்துள்ளார். அவ்வகையில் அவருடைய படைப்புகளை வகைமை அடிப்படையில் பாகுபடுத்தி முனைவர் கே.கண்ணாத்தாள் அவர்கள் விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்கள் என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழகத்தில் 2004 ஆம் ஆண்டு ஆய்வேடு அளித்துள்ளார். விக்கிரமன் படைப்புகளை ஆய்வு செய்வதில் இதுவே ஆய்வு முன்னோடியாக அமைகிறது.

## ஆய்வு எல்லை

இவ்வாய்வின் ஆய்வு எல்லையாக விக்கிரமனின் அறுபதாண்டுக் கதைகளின் தொகுப்பாக வெளிவந்துள்ள எழுபது சிறுகதைகள் அமைகின்றன.

## சான்றாதாரங்கள்

'விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம்' இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரமாக அமைகின்றது. ஆய்வுப் பொருண்மையோடு தொடர்புடைய திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், கலைக்களஞ்சியங்கள், இதழ்கள், ஆய்வுக் கோவைகள், ஆய்வேடுகள், ஆங்கில நூல்கள் போன்றவை துணைமைச் சான்றதாரங்களாய் அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

விக்கிரமனின் சிறுகதைகளில் கதையையும், அதன் பொருளையும் பிரித்துக் காண்பதால் பகுப்பாய்வு அணுகுமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது. உத்திகள் மற்றும் மொழிநடையை விளக்கிக் கூறுமிடத்து விளக்கவியல் அணுகுமுறை கையாளப் பெற்றுள்ளது. விக்கிரமனின் சமுதாயச் சிந்தனைகளை ஆய்வதற்குச் சமுதாயவியல் அணுகுமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது. பெண்ணியச் சிந்தனைகளை விளக்குவதற்குப் பெண்ணிய அணுகுமுறை பின்பற்றப்பட்டுள்ளது.

## ஆய்வுப் பகுப்பு

'விக்கிரமனின் சிறுகதைக் கலை' என்னும் இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டமைந்துள்ளது. அவையாவன,

1. கதைப்பொருளும் கருவும்
2. விக்கிரமனின் சிறுகதைகளில் பாத்திரப் படைப்பு
3. சமுதாயச் சிந்தனைகள்
4. பெண்ணியச் சிந்தனைகள்
5. கலைத்திறன்கள்

என்பனவாம்.

## இயல் விளக்கங்கள்

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வுக் கருதுகோள், ஆய்வு நோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பு, இயல் விளக்கங்கள் என்பவை இடம்பெறுகின்றன.

"கதைப்பொருளும் கருவும்" என்ற முதலாவது இயலில் சிறுகதையின் தோற்றம், அதன் விளக்கம், கதைக்கரு விளக்கம், விக்கிரமன் சிறுகதைகளில் கதைக்கரு, காதல், உண்மைக்காதல், நிறைவேறும் காதல், ஊடல்தீர்க்கும் காதல், போலிக்காதல், காதலுக்கு எதிர்ப்பு, காதலில் இடையூறு, குடும்பம், சந்தேகம், குடும்பத்தில் குழப்பம், பொருளாதாரச் சிக்கல், பெருந்தன்மை, தன்னம்பிக்கை, குழந்தை இயல்பைக்காட்டும் கதைகள், நட்பை வலியுறுத்தும் கதைகள், வறுமைப்புனைவுக் கதைகள், மனிதநேயக் கதைகள், பகுத்தறிவுச் சிந்தனைக் கதைகள் என்பன விளக்கப்பட்டுள்ளன.

"விக்கிரமனின் சிறுகதைகளில் பாத்திரப் படைப்பு" என்ற இரண்டாவது இயலில் பாத்திரப் படைப்பு, அதன் வகைப்பாடு, ஆண் முதன்மைப்பாத்திரங்கள், தியாக வாழ்க்கை, மறவா நட்பு, நட்பிற்கு முக்கியத்துவம் கொடுத்தல், அஞ்சாத காதல், சமுதாயக் கொல்லி, சமுதாய நண்பன், குறிக்கோளுடன் செயல்படல், பிறர் குழந்தையைத் தன் குழந்தையாய் வளர்த்துக் காத்தல், அஃறிணை உயிர்களிடத்தும் அன்புகாட்டடல், தங்கையின் மீதுள்ள அன்பு, அன்பினால் வெல்லல், நேர்மையுடன் செயல்படல், அன்பிற்காகப் போராடல், பயனுள்ள வகையில் செயல்படுதல், மனிதநேயம், சிந்தித்துச் செயல்படல், மதிப்பைவிட்டுக் கொடுக்காதிருத்தல், கற்பின் திண்மை, பொருளாதாரச் சிக்கல், சபலப்புத்தி, இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்தல், சிறுபிள்ளையின் அறியாமை, சகிப்புத்தன்மை, பழமையைப் போற்றுதல், குடும்ப கௌரவத்திற்காக எதையும் செய்யும் இயல்பு, காதலுக்காக எதையும் செய்யத் துடிக்கும் மனப்பாங்கு, நம்பிக்கையுடன் செயல்படுதல், மொழிப்பற்று, துணிந்து செயல்படல், உறவுக்கு மதிப்பளித்தல், தவறுசெய்வதற்கு அஞ்சுதல், பெண்தலைமைப் பாத்திரங்கள், கணவன்மாரைப் பிரியாதிருத்தலை விரும்புதல், கௌரவத்தை விட்டுக்கொடுக்காதிருத்தல், தாய்மையுணர்வு, தனித்துவாழும் எண்ணப்போக்கு, பாதுகாப்புணர்வு, பிறர் துன்பத்துக்கு வருந்துதல், வறுமையிலும் சொத்தைக் காத்தல், விருந்தினரை வரவேற்றல், தவறை உணர்ந்து திருந்துதல், அன்பு, துணிவு மனப்பான்மை ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

துணைமைப்பாத்திரங்களின் பண்புகளாக கல்வி, மனிதநேயம், காதலுக்குத் துணை, தாய்மைப் பண்பினை ஏற்றல், தொழிலில் மேன்மை, மறக்க இயலாத உணர்வுகள், பணத்தின் இன்றியமையாமை, தாய்மை

உணர்வு போன்றவை அமைந்துள்ள பாங்கு விளக்கப்பட்டுள்ளன. எதிர்த் தலைமைப் பாத்திரங்களின் இயல்புகளாக பிறன்மனைவியை அடைய எண்ணுதல், பழிவாங்கத் திட்டமிடல் என்பன ஆண் பாத்திரங்களுக்குரியனவாகவும், அறிவுரையை ஏற்காமை, வெறுப்புணர்வு போன்றவை பெண்பாத்திரங்களுக் குரியனவாகவும் காணப்படுவது ஆராயப்பட்டுள்ளன. சார்புப் பாத்திரங்களாகத் திகழ்பவர்கள் ஊதியம் பெறல், உரிமை கொள்ளல், அன்பால் அரவணைத்தல், உழைப்பில் உதவி ஆகிய பண்புகளுடன் படைக்கப்பட்டுள்ளமை விளக்கப்பட்டுள்ளன.

"சமுதாயச் சிந்தனைகள்" என்ற மூன்றாவது இயலில் சமுதாயமும், வாழ்வும், காதல், குடும்பம், தனிக் குடும்பச் சிக்கல்கள், பாலியல் சிக்கல்கள், நட்பு, மனிதநேயம், மூடநம்பிக்கை, சாதியச் சிக்கல்கள், நாட்டுப்பற்று, உழைப்பு என்ற கருத்துக்களின் அடிப்படையில் பாத்திரங்களின் செயல்பாடுகளும் அவற்றின் மூலம் சமுதாயத்திற்குக் கூறப்படும் கருத்துகளும் விளக்கப்பட்டுள்ளன.

"பெண்ணியச் சிந்தனைகள்" என்ற நான்காவது இயலில் பெண்ணியம் பற்றிய விளக்கம், பெண்ணியச்சிந்தனை, பெண்ணியத்தின் தோற்றமும் வளர்ச்சியும், இந்தியப் பெண்ணிய வரலாறு, தேசியப் பெண்கள் குழு, எழுபதுகளில் பெண்ணியம், எண்பதுகளில் பெண்ணியம், பெண்ணியத்தின் வகை, பெண்ணடிமை, பெண்விடுதலை, பெண்ணியப் பாகுபாடு, பெண்படைப்பாளர் பார்வையில் பெண்ணியம், பெண்ணுரிமை, பெண்ணிய நோக்கில் விக்கிரமன் சிறுகதைகள் ஆகிய கருத்துக்கள் விவரிக்கப்பட்டுள்ளன. விக்கிரமன் சிறுகதைகளில் பெண்ணுரிமைச் சிந்தனைகள், பெண் சுதந்திரம், சமுதாயத்தில் பெண்களின் மதிப்பு, பெண்கள்

எதிர்கொள்ளும் பாலியல் சிக்கல்கள் போன்றவை அடிப்படையிலான செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

"கலைத்திறன்கள்" என்ற ஐந்தாவது இயலில் கதையின் தொடக்கம், அதன் வகைகளான உரையாடல் தொடக்கம், அறிமுகத் தொடக்கம், நிகழ்ச்சித் தொடக்கம், வருணனைத் தொடக்கம், காட்சி வருணனைத் தொடக்கம் பாத்திர வருணனைத் தொடக்கம், சூழல் தொடக்கம், அலுவலகச் சூழல் தொடக்கம், குடும்பச் சூழல் தொடக்கம், இயற்கைச் சூழல் தொடக்கம், ஆர்வத் தொடக்கம், நேரடித் தொடக்கம் என்பனவும், கதைமுடிவு, முடிவின் தன்மையும் வகையும், தொடக்க இயைபு முடிவு, தொடக்கமுரண்முடிவு, சிக்கல் தீர்வு முடிவு, சூழ்ச்சிமுடிவு, சிந்தனையைத் தூண்டும் முடிவு என்பனவும் விளக்கப்பட்டுள்ளன.

விக்கிரமன் சிறுகதைத் தலைப்புகளைப் பாத்திரப் பெயர்களைச் சுட்டும் தலைப்புகள், ஆண்பாத்திரப் பெயர்கள், பெண்பாத்திரப் பெயர்கள், அடைமொழி தாங்கிய பெயர்கள், வாக்கியத்தொடர் தலைப்புகள், பொருளை உணர்த்தும் தலைப்புகள், உத்தியைச் சுட்டும் தலைப்புகள், குறியீட்டுத் தலைப்புகள் அடிப்படையில் வகைப்படுத்தி, ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

மொழிநடையில் எளிய நடை, வருணனை நடை, உவமைநடை, வினா-விடை நடை, ஆங்கிலக் கலப்பு நடை என்பனவும் உத்திகளில் பின்னோக்கு உத்தி, நனவோடை உத்தி, கடித உத்தி என்பனவும் விக்கிரமன் சிறுகதைகளில் இடம்பெற்றுள்ள பாங்கு கண்டறியப்பட்டுள்ளன.

ஆய்வில்கண்ட முடிவுகள் முடிவுரையில் இடம்பெற்றுள்ளன. ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

இவ்வாய்விற்கு உட்பட்ட விக்கிரமனின் சிறுகதைகள், அவை வெளிவந்த ஆண்டு மற்றும் ஒவ்வொரு சிறுகதையிலும் இடம்பெற்றுள்ள ஆண், பெண் பாத்திரங்களின் அட்டவணைகளும், விக்கிரமன் தன் விவரக் குறிப்புகளும் பின்னிணைப்பாக அமைக்கப் பெற்றுள்ளன.





இயல் – 1

# கதைப்பொருளும் கருவும்

இருபதாம் நூற்றாண்டு இலக்கிய வகைகளுள் ஒன்றான சிறுகதை பல்வேறு பரிமாணங்களில் வளர்ச்சிபெற்றுள்ளது. பல்வேறு எழுத்தாளர்கள் தோன்றி, தங்கள் எண்ணங்களையும், சிந்தனைகளையும் சிறுகதைகளாக உலகிற்குப் படைத்தளித்துள்ளனர். அவ்வகையில் விக்கிரமன் 18.10.1942 முதல் சிறுகதைகளை எழுதத் தொடங்கி நூற்றைம்பதிற்கும் மேற்பட்ட கதைகளைப் படைத்தளித்துள்ளார்.

1942 முதல் 2002 வரை அவர் படைத்த சிறுகதைகளில் எழுபது கதைகள் மட்டும் தேர்ந்தெடுத்து பொன்விழாச் சிறுகதைத் தொகுப்பாக ஒரே நூலில் வெளிவந்துள்ளன. இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள கதைகளின் பொருளையும் கருவையும் ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## தமிழில் சிறுகதையின் தோற்றம்

வ.வே.சு. ஐயரே தமிழ்ச் சிறுகதையின் தந்தை எனப் போற்றப்படுபவர். ஆனால் அவர் காலத்திற்கு முன்னரே சிறிய அளவிலான கதைகள் எழுதப்பட்டு வந்தன. கி.பி.18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வீரமாமுனிவர் அக்காலத்திலிருந்த மடாதிபதிகளின் இழிநிலையை எடுத்துக்காட்டும் வகையில் எழுதிய ‘பரமார்த்த குருகதை’ என்பது சான்றாக அமைகிறது.

## சிறுகதையின் விளக்கம்

சிறிய அளவில் அமைந்த கதையே சிறுகதையாகும். இப்படி ஒரு வரையறையைச் சிறுகதைக்குச் சொல்ல முடிந்தாலும் ‘அளவு’ என்பதில் ஆசிரியர்களிடையே வேறுபாடு இருக்கிறது. ஒரு பக்கம் அல்லது இரு பக்க அளவில் அமைந்த சிறுகதையும் உண்டு. மிகப் பெரிய சிறுகதையும் உண்டு.

வெவ்வேறு ஆசிரியர் எழுதும் சிறுகதையின் அளவு வேறுபடினும் சிறுகதைக்கென்றே அமைந்த சில தன்மைகளும் கட்டுக் கோப்புகளும் தோன்றிவிட்டன.

"ஒரு சிறுகதை என்பது எளிமை சான்ற ஒரு படைப்பாக இருக்கின்றது அல்லது இருத்தல் வேண்டும். ஏதாவது ஒரு சிறிய தெளிவான பயனை மட்டும் விளைவிக்க அது முயலுகின்றது. எடுத்த எடுப்பிலேயே பயில்வோரின் கவனத்தை ஈர்த்துப் பிடித்தல் வேண்டும். நெகிழ்ச்சியின்றி இயங்கி உச்சநிலை முடியும்வரை வாசகரின் முழுக் கவனத்தையும் ஒருமுகப்படுத்தி மேன்மேலும் ஆழமாக ஊன்றச் செய்யவேண்டும்"[1] என்பர் ஹெச்.ஜி.வெல்ஸ்.

ஹெச்.இ.பேட்ஸ் என்பவர், "எழுதும் ஆசிரியர் எண்ணித் துணியும் வண்ணம் சிறுகதை எவ்வாறு வேண்டுமானாலும் அமையலாம்"[2] என்கின்றார். சிறுகதையின் தொடக்கம் படிப்பவர்களைக் கவர்ந்திழுக்கக் கூடியதாகவும், கதையின் கருத்துக்கு ஓர் அறிமுகவுரையாகவும் இருக்கவேண்டும். சிறுகதையின் முடிவு படிப்பவன் ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைந்திருக்க வேண்டும். சிறுகதைகளின் வாயிலாக அவற்றைத் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கு ஏராளமான உண்மைகள் அவற்றில் கிடைக்கும்.

"சிறுகதை என்பது குதிரைப் பந்தயம் போல தொடக்கமும், முடிவும் வேகமாக அமையவேண்டும்"[3] என்பர் ஜெட்சுவிக். "வாழ்க்கையின் ஒரு குறுக்குவெட்டை, கலைத்திறனும் சொல்நயமும் கொண்டதாகச் சித்திரித்தால் அதுவே சிறுகதையாகிறது"[4] என்று குறிப்பிடுவர் சி.சு.செல்லப்பா.

எச்.ஜி.வெல்ஸ் "சுமார் அரைமணிநேரத்தில் படித்து உணரத்தக்கதாகச் சிறுகதை அமையவேண்டும்"[5] என்று மொழிவர். "முன்னதாகச் செய்துகொண்ட திட்ட வார்ப்புகளை மீறுகிறாற்போல் ஒரு வார்த்தைகூட நேரடியாகவோ, மறைமுகமாகவோ சிறுகதையில் பயன்படல் கூடாது"[6] என்பர் ஆலன்போ.

**சிறுகதையின் குறிக்கோள்**

இயற்கை வாழ்வின் ஒரு கூற்றை, யாரேனும் ஒருவரின் பண்பை அல்லது செயலை ஏதேனும் ஒன்றன் இயக்கத்தை அல்லது செயல்பாட்டை எங்கோ ஒரு மூலையில் மறைந்து கிடக்கும் ஓர் இரகசியத்தைக் கலைச்சுவை சிறிதும் குன்றாவண்ணம் வெளிப்படுத்துவதே சிறுகதையின் குறிக்கோள் ஆகும்.

அறப்பண்பு, நீதிபோதனை, தத்துவ விளக்கம், சிந்தனைப் புரட்சி, சமுதாயச் சீர்திருத்தம் முதலியனவும் சிறுகதைக்குரிய குறிக்கோளாக அமையும். இவை அனைத்தும் சிறுகதை, கலைத்திறன்களோடு வெளிப்படவேண்டும் என்பதை நன்குணர்த்தும்.

சிறுகதையை மூன்று வகையாகப் பிரித்துள்ளார் ஸ்டீவன்சன். "முதல் வகையைக் கருவால் வந்த கதை என்றும், இரண்டாம் வகையைக் குணச்சித்திரத்தால் வந்த கதை என்றும், மூன்றாம் வகையை உணர்ச்சிப் பதிவால் வந்த கதை என்றும் சொல்லலாம்"[7] என்பர்.

**கதைக்கரு - விளக்கம்**

கருவானது கதையின் முழுப் பொருளாகும். முரண், எதிர்பார்ப்பு நிலை ஆகியவை தவிர ஒவ்வொரு சிறுகதையும் கருவினைக் கொண்டிருத்தல் வேண்டும். கருவே கதையின் கருத்து அல்லது செயல் நோக்கத்தைத்

தருகின்றது. அதோடு கதைமாந்தரின் எப்பண்புக்கூறுகள் வலியுறுத்தப்பெறல் வேண்டும் என்பதையும் உறுதிசெய்கிறது.

கதையில் எத்தகைய ஆக்கப்பொருட்கூறு பயன்படுத்தப்பட வேண்டும் என்பதையும் எந்தக் கருத்தை வழங்கவேண்டும் என்பதையும் எடுத்துக்காட்டுவது கருவேயாகும். எந்தக் குறிப்பிட்ட நேரத்தில் கதையின்கண் கருத்தை ஈர்க்கவேண்டும் என்பதையும் முடிவுசெய்வதற்குக் கருவே ஆசிரியரை நெறிப்படுத்துகிறது. உண்மையில் அது கதையின் வாயிலாகப் படிப்போர்க்கு ஆசிரியரால் உணர்த்தப்பெறும் வாழ்க்கைப் படிப்பினை அல்லது பேருண்மையாகும்.

மனித வாழ்வையும், அதன் சூழல்களையும் ஒவ்வொரு கோணத்திலிருந்தும், உற்றுப்பார்த்து, தம் கதைகளுக்குரிய கருவினைக் கதையாசிரியர்கள் கையாளுகின்றனர். கருப்பொருள் கதைத் தன்மையின் நிலைத்த தன்மைக்கு உறுதுணையாகிறது. சிறுகதை வெற்றிக்கு அடிப்படையாக அமைவது கருப்பொருளாகும். "எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம் என்று கூறுவதுபோல புனைகதை இலக்கியத்திற்குக் கருப்பொருள் முக்கியமானதாகும்."[8]

உண்மைக் காதலின் வெற்றி, தாயன்பின் புனிதத்தன்மை, நாட்டுப்பற்று, துன்பநிலையிலும் மனந்தளராமை, ஒரு கொள்கையின் பொருட்டுத் துறவுகொள்ளுதல், சமயம் அளிக்கும் ஆன்ம அமைதி, தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்தல், விடாமுயற்சியினால் வெற்றிபெறுதல், இன்னோரன்னவை மரபாகக் கொள்ளப்பெற்றுவரும் கருக்களாகும். ஆசிரியர் அவற்றை எளிதாக உணர்ச்சிமயமான கதைகளாக உருவாக்கிப் படிப்போர் நெஞ்சங்களைக் கவரும்படி செய்கிறார்.

## விக்கிரமன் சிறுகதைகளில் கதைக்கரு

சிறுகதைக் கூறுகளுள் முக்கியமாக இடம்பெறவேண்டியது கதைக்கருவாகும். இக்கதைக்கருவைத் தாங்கி எழுதும் ஒவ்வொரு கதையும் நீண்டநாள் மனதில் ஆழப் பதிந்து நிலைத்து நிற்கும்.

சில கதைகள் வாழ்க்கையின் சிக்கலை எடுத்துப்பேசும். சில கதைகள் வெறும் நிகழ்ச்சிக் கோர்வையாய் அமையும். மனிதர்களின் முகங்கள் அமைப்பால் ஒன்றுபட்டிருந்தாலும், சாயலால் மாறுபடுவதுபோல, சிறுகதைகள் கதை என்ற வகையில் ஒன்றாக இருந்தாலும், கைவண்ணத்தால் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாய் விளங்குகின்றன.

கதைக்கருவைச் சரியாகத் தேர்வுசெய்வது, அதைக் கலைநயம் சிதையாமல் வாசகரிடம் சென்றுசேர்ப்பது என்ற நிலையில் சிறுகதையின் சாதனை அமைகிறது. இவ்வகையில் விக்கிரமன் பல்வேறு சிறுகதைகளிலும் கதைக்கருவை நிலைக்களனாகக் கொண்டு கதைகளை வடித்துள்ளார்.

விக்கிரமனின் சிறுகதைகளில் கற்பனைப் புனைவுகளைவிட உள்ளது கூறலே சுவைபயக்கும் என்ற அடிப்படையில் வாழ்வியல் நிகழ்ச்சிகளையே கதைகளாகப் படைத்தளித்துள்ளார். ஆய்வுக்குட்பட்ட இவரது கதைகளில் காதல், குடும்பம், குழந்தைகளின் மனஇயல்பு, நட்பு, வறுமை, மனித நேயம், பகுத்தறிவுச் சிந்தனை சார்ந்த கூறுகள் கதைக்கருவாக உள்ளன.

### காதல்

உணர்வு என்ற அடிப்படையில் காதல் மிகவும் மென்மையானது ; நுட்பமானது; வியத்தகு ஆற்றல்களையும், செயல்களையும் உள்ளடக்கியது. அதிலும் நேரிய தூய காதல் வயப்பட்ட உள்ளங்கள் ஒன்றுக்கொன்று தமக்குள் ஒன்றுவது புனிதமானது. சமுதாயத் தோற்றத்துக்கு

அடிப்படையான இவ்வுணர்வு தூய்மையாக இருப்பின் அச்சமுதாயம் நேரிய சமுதாயம் ஆகும்.

ஆணும் பெண்ணுமாகக் கூடி வாழும் வாழ்விற்கு அடிப்படையாய் இருப்பது காதலும் காமமுமேயாகும். எல்லாக் காலத்து இலக்கியங்களிலும் எல்லா நாட்டு இலக்கியங்களிலும் இவ்விரண்டும் தொடர்ந்து பேசப்பட்டு வந்துள்ளன. மனித இனம் மட்டுமின்றிப் பிற எல்லா உயிர்களும் உயிர்வாழ்வதற்குத் தேவைகளை எதிர்பார்த்து வாழவேண்டியிருப்பது பொதுவான ஒன்றாகும். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே மென்மையான இணைப்பை ஏற்படுத்தி வாழ்விற்கும், வளமைக்கும் அடிப்படையாகக் காதல் அமைகிறது. "இன்பம், துன்பம், ஏக்கம், எதிர்பார்ப்பு, அவலம் போன்ற மொத்த உருவமாகக் காதல் அமைகிறது."[9] காதல் மனித மனங்களுக்கு மட்டுமின்றி எல்லா உயிர்களுக்கும் அடிமனஉணர்வாகக் காணப்படுகிறது. இத்தகைய காதல் உணர்வைக் கருப்பொருளாகக் கொண்ட விக்கிரமனின் சிறுகதைகளைப் பொருண்மை அடிப்படையில் பின்வருமாறு பாகுபடுத்த இயலும். அவையாவன,

1. உண்மைக்காதல்
2. நிறைவேறும் காதல்
3. ஊடல் நீக்கும் காதல்
4. போலிக்காதல்
5. காதலுக்கு எதிர்ப்பு
6. காதலில் இடையூறு

என்பனவாகும்.

**உண்மைக்காதல்**

பல குடும்பங்கள் ஒன்றுசேர்ந்தது ஒரு சமூகம். குடும்பத்தில் ஏதேனும் ஒரு காரியம் அல்லது நிகழ்ச்சி நடப்பதற்குச் சமூகமே எதிர்ப்புத் தெரிவிக்கும்போது பல துன்பங்களுக்கிடையில் அந்நிகழ்ச்சி நிறைவேறுகிறது. சில நேரம் நிறைவேறாது போகிறது.

விக்கிரமனின் சிறுகதைகளில் சமூகத்தால் பல இடையூறுகள் ஏற்படினும் உண்மைக்காதல் வெற்றிபெறும் என்பதற்கு எடுத்துக்காட்டாக 'பொல்லாத மனசு' கதை இடம்பெற்றுள்ளது. சின்னக்கவுண்டர் - பழனியம்மாள் ஆகிய இருவருடைய காதலைப் பஞ்சாயத்தார் பொருளாதாரம், சாதி என்பனவற்றைக் காரணம்காட்டி எச்சரித்தும் இருவரும் பிரிந்துசெல்லாது எதையும் சாதிக்கும் மனப்பக்குவத்தோடு காதலில் வெற்றிபெற்று இறுதியில் ஒன்றுசேரும் உண்மைக்காதலை விக்கிரமன் சமுதாயத்திற்குக் காட்டியுள்ளார். இதனை, "சாமி... இந்தப் பொல்லாத மனசு இன்னும் என்னென்ன திட்டமிட்டிருக்கு தெரியுமா.. கை சரியான பிறகு ஊருக்குப் போகப்போவதில்லை. திருத்தணி போய் முருகன் சந்நிதியிலே நாங்கள் கடவுள் சாட்சியாக தம்பதியாகிடப் போறோம்"[10] என்று பழனியம்மாள் கூறுவது விளக்கும்.

'இன்பத்தின்விலை' என்ற சிறுகதையில் தையற்காரனான வேதாச்சலம் வீட்டு வேலைக்காரியான மரகதத்தைக் காதலிக்கிறான். காதல் பரிசாக விலையுயர்ந்த ரவிக்கையைத் தைத்துக் கொடுக்கிறான். மறுநாள் அந்தச் சட்டையைப் போட்டுக்கொண்டு வீட்டுவேலைக்குச் செல்ல அதேபோல் துணி, முதலாளி அம்மாவுடையது காணாமல் தேடும்போது மரகதத்தின் மீது திருட்டுப்பழி விழுகிறது. காவல்துறையினரால் விசாரணை நடைபெற்றுக்கொண்டிருக்கும்போது பக்கத்து வீட்டிற்கு மாறிப்போன

முதலாளியம்மாவின் சட்டை கிடைக்கவே வேதாச்சலத்திடம் மன்னிப்புக் கோருகின்றனர்.

உண்மைக் காதலில் ஏழையும் அதிகவிலையில் பரிசு கொடுக்க முடியும் என்ற கருவை விளக்குவதாக இக்கதையை ஆசிரியர் படைத்துள்ளார். இதனை, "மஞ்சள் கயிறு கழுத்தில் விளங்க, கால்மெட்டிகள் கலகலவென ஒலிக்க அதே ஸில்க் ரவிக்கையைப் போட்டுக்கொண்டு இடுப்பில் குடத்துடன் வரும் மரகத்தின் புன்முறுவலுக்காக அந்த இன்பத்துக்காக வேதாச்சலம் என்ன விலை கொடுத்தாலும் தகும் அல்லவா?"[11] என்பது விளக்கும்.

ஓர் ஆணை மூன்று பெண்கள் விரும்பினாலும் உண்மையாகக் காதலிப்பவளே இறுதிவரை உறுதியாக இருக்கிறாள் என்பதைக் கருவாகக் கொண்டு 'கற்பெனும் கனல்' என்னும் சிறுகதை திகழ்கிறது.

**நிறைவேறும் காதல்**

இன்றைய உலகில் காதல்வயப்படாத மனிதர்களே இல்லை. அப்படிப்பட்ட சூழலில் காதலன் தாம் நினைத்தவளையே கரம்பிடித்து, அவளைக் கடைசிவரை வாழ்க்கைத் துணையாக ஆக்கிக்கொள்வது இன்றியமையாததாகும்.

'செவ்வந்திப்பூ சிங்காரி' என்ற கதையில் இதனைக் கருவாக விளக்குவர். சிங்காரி பிழைப்பு முடித்து இரயிலில் வரும்போது தன்னை அரிசி கொண்டுசென்றதற்காகப் பிடித்துவைத்திருந்த காவலரிடம், நான்தான் அரிசி கொண்டுவந்தேன். அவள்தான் என் மனைவி என்று சுந்தரமூர்த்தி தன்மீது பழியைப் போட்டுக்கொண்டு அவளை விடுவித்ததிலிருந்து சுந்தரமூர்த்தி மீது சிங்காரிக்குக் காதல் மலர்ந்தது. எதையும் தந்தையிடம்

வெளிக்காட்டாது வாழ்ந்த அவளுக்கு அவள் மனதில் இடம்பெற்ற சுந்தரமூர்த்தியே தன் தந்தை தனக்குப் பார்த்திருக்கும் மாப்பிள்ளை எனத் தெரியவரும்போது, அவள் காதல், நிறைவேறும் காதலாகிறது. இதனை "சிங்காரிக்கு மிகவும் வியப்பாக இருந்தது என்னவென்றால், நிச்சயம் செய்திருந்த கணவர் முன்பே அவள் இதயத்தில் வரித்திருந்த, தனக்காகக் குற்றத்தை ஏற்க முன்வந்த சுந்தரமூர்த்தியே என்பதுதான்"[13] என்பது புலப்படுத்தும்.

சீதா, கல்யாணி ஆகிய இருவரும் புறத்தோற்றத்தில் அழகானவர்கள். சாந்தா மனஅழகி. குமாரை மூவரும் விரும்புகின்றனர். குமாரோ வாழ்க்கைப்படியில் முன்னேற வேண்டும் என்ற எண்ணம் கொண்டவன். சீதாவும், கல்யாணியும் காதலால் குமாரைக் கவர முயன்றனர், முடியவில்லை. குமார் வடநாடு சென்றான். இருவரும் வேறுவேறு கணவரை அடைந்தனர். சாந்தாவோ குமாரை நினைத்துக்கொண்டே கடைசிவரை இருந்தாள். நெருப்பில் வெளிவந்த தூய தங்கமாய் ஆனாள். இறுதியில் குமார் சாந்தாவைச் சந்திக்கும் வேளையில் உன்னுடைய அக அழகு இப்பொழுதுதான் எனக்குப் புரிந்தது. "உறுதி இருந்தால் கற்பு எனப்படுவது கனலையும் வெல்லும்" என்ற நீ தீயையும் வென்றுவிட்டாய். நான் உன்னை ஏற்றுக்கொள்வதற்காகத்தான் மீண்டும் இங்கு வந்திருக்கிறேன்"[13] என்று கூறிச் சாந்தாவைத் திருமணம் செய்துகொள்கின்றான்.

**ஊடல் நீக்கும் காதல்**

'குழலோசை' கதையில் குமாரவேலு குழலூதுபவனாகவும், மல்லிகா நடனமாடுபவளாகவும் திகழ்கின்றனர். அதே சமயத்தில் காதலர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். ஒரு சமயம் மல்லிகா நடனமாடும்பொழுது குமாரவேலு தாளம் தப்பிக் குழலூதியதால் ஆத்திரமடைந்து

கொடுஞ்சொற்களால் அவனைப் பேசி விலகிச் செல்கிறாள். காலப்போக்கில் மல்லிகாவிற்குப் பணம் சேரச்சேர அவள் நினைவு வேறுபட்டு ஆடம்பரப்பேச்சு அதிகமாயிற்று. அது குமாரவேலுவிற்குப் பிடிக்கவில்லை. ஊரைவிட்டே செல்கிறான். உண்மைக் காதலால் ஊடல் கொண்ட மல்லிகா அவனை ஊர்ஊராகத் தேடி அவனைக் காணும்போது குமாரவேலு, "ஆடம்பரம் அகப்புனிதத்தை வளர்க்காது. உன்னை ஏற்பதில் எனக்கோ ஆண்டவனுக்கோ தடையேனிருக்கும்?"[14] என்பதிலிருந்து ஊடல் நீங்கி ஒன்றுபட எண்ணும் அவனது உள்ளத்தினை அறியமுடிகிறது.

**போலிக்காதல்**

விக்கிரமனின் 'ஜாங்கிரி' என்ற கதையில் போலிக்காதல் கதைக்கருவாக அமைந்துள்ளது. தங்கராசு சோதனைச் சாவடிச் சாலையில் கண்டிப்புடன் பணிபுரிகிறவன். அந்தச் சாவடி வழியாக அடிக்கடி செல்லும் அன்னம் தங்கராசுவை மயக்குகிறாள். காதலால் உன் கண்கள் மறைக்கப்படுகின்றன எனத் தங்கராசுவைச் சாவடிக் கிழவன் எச்சரித்தும் அவன் கேட்கவில்லை.

தங்கராசு மனதை அன்னம் கொள்ளையடித்தாலும், அவனை ஒருநாளும் அவள் நெருங்கவிடவில்லை. மலைவீரன் லாரி அடிக்கடி அச்சாவடியைக் கடந்துசென்றது. அவ்வேளையில் அன்னம் தங்கராசுவுடன் பேசுவதுபோல் போலியான காதல்நாடகம் நடத்தினாள்.

ஒருநாள் அதிகாரிகள் மலைவீரன் லாரிமீது சந்தேகம்கொண்டு தங்கராசுவிடம் சரியாகப் பரிசோதிக்கச் சொல்லிக் கட்டளையிடுகின்றனர். அன்னம் ஜாங்கிரி கொண்டுவந்து தங்கராசுவிற்குக் கொடுத்துப் பேசிச்செல்லும்போது அதே ஜாங்கிரியை லாரி ஓட்டுநரும் சாவடிக்

கிழவனுக்குக் கொடுத்ததில் அவன் மனதில் நெருடல் ஏற்படுகிறது. அந்த லாரியைச் சோதிக்காமல் விடுவதில்லை என மடக்கிப்பிடிக்க முயலும்போது அவள் தடுக்கிறாள். அதேநேரம் மழையும் பெய்கிறது. விளக்கும் அணைகிறது. அன்னம் அந்த லாரியில் ஏறித் தப்பித்துவிடுகிறாள்.

"மச்சான் கொஞ்சம் பொறுங்க... உம்... உம் என்று சொல்லிக்கொண்டே 'அடடா... மறந்துட்டேனே. இந்தாங்க சந்தையிலேருந்து உங்களுக்கு ஒண்ணு வாங்கிவந்திருக்கிறேன்...' என்று சொல்லிக்கொண்டே கூடைமீதிருந்த பொட்டலத்தை எடுத்துக் கொடுத்தாள். தங்கராசு அதைப் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அன்னம் மணலில் கால் அழுந்த நடந்துசென்று மறைந்தாள்"[15] என்பதிலிருந்து அவள் நடத்திய காதல் நாடகம் புலனாகிறது.

## காதலுக்கு எதிர்ப்பு

பெரும்பாலான குடும்பங்களில் காதலுக்குப் பெற்றோர்கள் எதிர்ப்புத்தான் தெரிவிக்கின்றனர். விக்கிரமன் சிறுகதைகளிலும் பெற்றோரின் எதிர்ப்பும் சண்டைகளும் இடம்பெற்றுள்ளன. இவரது 'புத்துயிர்' என்ற கதையில் கதாநாயகனே கதைகூறும் பாங்கில் அமைக்கப்பட்டுள்ளது. ரகுராமனுக்கும், தங்கத்திற்கும் காதல் ஏற்படுகிறது. ரகுராமன் வீட்டில் காதலைச் சொல்கிறான். அவன் தந்தையோ கோபிக்காது தங்கத்தின் அப்பாவிடம் முறையாகப் பெண்கேட்கச் சொல்கிறார். அவர் சாதிப்பாகுபாடு பற்றிக் கூறி, தங்கத்தின் காதலை மறுத்து வேறுஒரு பொறியியல் வல்லுநருக்குத் திருமணம் முடித்துவைப்பதாகக் கதை அமைகிறது.

"சமூக சீர்த்திருத்தவாதியென்று என் அப்பாவுக்குப் பெயர். சாதி இந்துக்களுக்குள் உபபிரிவினர் ஒருவருக்கொருவர் கலியாணம் செய்துகொள்ளச் சம்மதிக்கமாட்டார்கள். அவர் மட்டும் விதிவிலக்கா? அப்பாவிடம் துணிந்து என் விருப்பத்தைக்கூற, விளைவு, மறுநாளே பள்ளிக்கூடத்திலிருந்து நிறுத்தப்பட்டேன். அடுக்களையை விட்டு அகலக்கூடாதென்ற தடை உத்தரவு பலமாயிருந்தது"[16] என்பதிலிருந்து காதலுக்கான எதிர்ப்பு புலப்படுகிறது.

'விஷக்கத்தி' என்ற கதையில் பாசத்திற்குரிய மகள் பொற்கொடி முத்துவேலைக் காதலித்தாள். இது பிடிக்காத தந்தை "ஆ பொற்கொடியா? பதினேழு வருடமாகப் பச்சைக்குழந்தையென்று கண்ணிமைபோல் நான் வளர்த்துவந்த பொற்கொடிக்கா இவ்வளவு துணிச்சல்"[17] என்று பல்லை நறநறவெனக் கடித்துக்கொண்டார் என்பதிலிருந்து தந்தையின் எதிர்ப்பு விளங்கும்.

**காதலில் இடையூறு**

உலகில் உள்ள எந்தப் பொருளின்மீதும் ஒருவர் ஆசை கொள்ளலாம். முடிந்தால் அதை விலைகொடுத்து வாங்கலாம். ஆனால் ஒரு காதலனை நினைத்திருக்கும் காதலி மீது இன்னொருவன் கொள்ளும் ஒருதலைக் காதலையும் அதனால் ஏற்படும் இன்னல்களையும் 'சந்திரமதி பொன்னையா' என்ற சிறுகதை மூலம் விக்கிரமன் காட்டியுள்ளார்.

சந்திரமதி வேடத்தில் பொன்னையாவின் நடிப்பைப் பார்த்து அனைவரும் வியப்பர். நாடகத்தில் நடிக்கும் தேவானைக்குப் பொன்னையா மீது காதல். இடையில் கண்ணப்பன் தேவானை மீது காதல் கொண்டு பொன்னையாவைத் தீர்த்துக்கட்ட எண்ணி அவனைக் காரிலிருந்து

தள்ளிவிடுகிறான். பொன்னையா கால்முறிவோடு உயிர்பிழைக்கிறான். பொன்னையாவிற்குச் சிகிச்சையளிக்க, தேவானை அவனுடனேயே தங்கிவிடுகிறாள். இது அவர்களின் காதலுக்கு உரமாக அமைகிறது. அதைக் கண்ட கண்ணப்பன் மேலும் வெறுப்புற்று "பொன்னையாவை இன்னும் இப்படியே நீடிக்க விடக்கூடாது. தான் விரும்பும் கனி தேவானைக்கனியை அந்தக்கிளி - சே, பருந்து கொத்திக்கொண்டு போய்விடும் - விடக்கூடாது என்று எண்ணியது அவன் மனம்"[18] என்பதிலிருந்து காதலில் கண்ணப்பனின் இடையூறு விளங்கும்.

'அரசனூர் பாலம்' என்ற சிறுகதையும் காதலுக்கான இடையூறைக் கருவாகக் கொண்டதாகும். பூங்காவனத்துக்கும் வேலாயுதத்திற்கும் காதல் ஏற்படுகிறது. தாய் தந்தையரை இழந்த பூங்காவனம் சொந்தக்காரரான சிங்காரத்தின் பாதுகாப்பில் வளர்ந்துவருகிறாள். அவனோ அவளை அரிசி கடத்தும் தொழிலில் கட்டாயப்படுத்தி ஈடுபடச்செய்கிறான். வீட்டில் நடக்கும் துன்பநிகழ்ச்சியையும் அவள் செய்யும் கடத்தல் தொழிலையும் வேலாயுதத்திடம் தெரிவிக்கிறாள். இருவரும் ஊரைவிட்டு யாருக்கும் தெரியாமல் ஓடிவிடுவது என முடிவெடுத்தனர்.

இதையறிந்த சிங்காரவேலு தான் வளர்க்கும் பெண் இன்னொருவனுடன் ஓடுவதா? எனத் திட்டம்தீட்டி வேலாயுதத்திற்குப் பூங்காவனம் எழுதுவதுபோல் கடிதம் எழுதி அவனிடம் கொடுத்து மனதை மாற்றிவிடுகிறான்.

"அன்பு மிகுந்தவர்க்கு, அவசரம், அவசரமாக இதை எழுதுகிறேன். நான் முன்பே முடிவுசெய்திருந்தபடி நாளைய தினம் என்னால் கிளம்பமுடியாது. நாளை மட்டுமல்ல என்றுமே முடியாது. இந்தக் கடிதத்தை

நீங்கள் படித்துக்கொண்டிருக்கும்போது நான் ரயிலேறி எங்கள் ஊருக்குச் சென்றுகொண்டிருப்பேன். என்னை மறந்துவிடுங்கள் பூங்காவனம்"[19] என்ற கடிதத்திலிருந்து பூங்காவனத்தின் காதலுக்குச் சிங்காரவேலு செய்த இடையூறு நன்கு புலப்படும்.

**குடும்பம்**

ஒரே கூரையால் பாதுகாக்கப்பட்ட இதயங்களின் இணைப்பு ஒரு குடும்பமாகும். அன்பு, பரிவு, பாதுகாப்புணர்வு, ஒன்றுபட்டு வாழ்வது, சகிப்புத்தன்மை ஆகியவற்றின் உறைவிடம் குடும்பம். பல்வேறு குடும்பங்கள் ஒன்றுசேர்ந்தது ஒரு சமுதாயம். கணவன், மனைவி குழந்தைகள் ஆகியோர் ஒன்றுசேர்ந்து வாழ்வது குடும்பமாகும். இதில் சிறிய குடும்பம், பெரியகுடும்பம் என இரு பிரிவுகள் உண்டு.

மனிதன், இறைவனின் ஒப்பற்ற படைப்பு. மனிதனுக்குள் உள்ள அரும்பெரும் திறமைகளெல்லாம் நன்கு உணர்ந்து உலகுக்குப் பயன்பட வேண்டுமானால் மனிதனுக்கு அதற்கு வேண்டிய நல்ல சூழ்நிலை இருக்கவேண்டும். அத்தகு சிறந்த சூழ்நிலையைக் குடும்பங்கள் தான் கொடுக்கமுடியும். "குடும்பத்தை நன்கு நடத்தவேண்டிய அறிவு, திறமை, மனப்பான்மை ஆகியவற்றைக் கொடுக்கக்கூடிய கல்வியை அளித்தால் அவர்கள் குடும்பம் சிறப்பாக அமையும்"[20] என்பார் க.குழந்தைவேல்.

இல்வாழ்க்கை என்பது குடும்ப வாழ்க்கை; இல்வாழ்வான், இல்லாள் என்பவர் குடும்பத்தில் நடத்துநர், ஆளுநர் ஆவார். இவர்களின் கூட்டுப் பொறுப்பில் இல்வாழ்க்கையாகிய குடும்பம் திகழும். நன்மக்கட்பேறு குடும்பத்தில் நிறைவுப்பகுதி. குடும்பம் கூட்டாட்டுத் தத்துவத்தில் கொடிகட்டிப் பறக்கும் கம்பம்.

"சமுதாய வாழ்க்கைக்கு அடிப்படையாக இருப்பது குடும்பமே. குடும்பங்கள் திருந்தினால் நாடு திருந்தும். நல்ல குடும்பம் பல்கலைக்கழகம், பலரும் சேர்ந்து வாழும் குடும்பத்தில் அன்பும், விட்டுக்கொடுக்கும் மனமும் இல்லையெனில் குழப்பமே மிஞ்சும்"[21] என்பர். "குடும்பங்கள் என்றாலே தங்களுக்குள் உறவுகள் உடைய ஒரு நிறுவனம் அல்லது அமைப்பு என்பது தெளிவு. இன்றைய கணவனும், மனைவியும் அவர்கள் குழந்தைகளும் அடங்கிய மிகச்சிறிய குடும்பம் என்ற அமைப்பு, ஓர் ஆணும், பெண்ணும் தங்கள் காம இச்சைகளை அனுபவிப்பதும், ஒருவருக்கொருவர் துணையாக இருப்பதும், பெறும் குழந்தைகளை வளர்ப்பதுமான செயலாற்றல்களுக்கே அவசியமான கருவியாக இருக்கிறது"[22] என்பர் சோ.இலக்குமித்திரன்.

சமுதாய அமைப்பில் ஒருவனும், ஒருத்தியுமாய்க் கூடி மனைவியும் மக்கட்பேறுமாக வாழுகின்ற வாழ்க்கை குறிப்பிடத்தக்க முறையில் சிறப்பாகப் பேசப்படுகிறது. இதனை, "பண்பாட்டு வளர்ச்சியின் சிகரம் ஒற்றுமையான குடும்பம்"[23] என்பர் கு.சின்னச்சாமி. "குடும்பம் என்ற வண்டியின் இரு சக்கரங்களாக அமைந்த கணவனும், மனைவியும், ஒத்த சிந்தனையும், பரிவும், காதலும் விட்டுக்கொடுக்கும் மனைப்பண்பும் பெற்று விளங்கினால் வாழ்க்கையில் ஏற்படும் முரண்பாடுகளைத் தவிர்க்கலாம்"[24] எனக் குடும்பம் செயல்பட வேண்டிய விதத்தைச் சுட்டுவர். ஆனால் மாறிவருகின்ற சமுதாயப் பொருளாதார அமைப்பில் பாரம்பரியமான குடும்ப அமைப்பு, கணவன் மனைவி என்ற உறவு போன்றவை புரட்சிக்கற்களால் உருக்குலைந்து போய்விடுகிறது.

விக்கிரமனின் சிறுகதைகளில் குடும்பத்தில் சந்தேகம், குழப்பம், பொருளாதாரச் சிக்கல், நிம்மதியின்மை என்பனவும் குடும்பத்தில்

பெண்களின் பெருந்தன்மை, தன்னம்பிக்கை, மகிழ்ச்சி என்பனவும் கருப்பொருள்களாக உள்ளன.

### சந்தேகம்

குடும்பம் என்பது நம்பிக்கையின் அடித்தளமாக அமையவேண்டும். சந்தேகம் என்பது ஏற்பட்டுவிட்டால் அது வாழ்க்கை முழுவதும் தொடர்ந்துவரும் போராட்டமாகிவிடும். அதனால் பல இன்னல்கள் ஏற்பட வாய்ப்புள்ளது என்பதை விக்கிரமனின் ‘சத்தியமான சத்தியம்’ என்ற கதை உணர்த்தும்.

இருதய நோயாளியான தன் மகன் கந்தநாதன் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டால் உயிரே பிரிந்துவிடுவதற்கு வாய்ப்புண்டு என்பதைக் கந்தநாதனுக்குத் தெரிவிக்காமல் தன் மருமகள் தேவகியிடம் மட்டும் கூறிக் கட்டுப்பாடோடு இருக்கவேண்டுமெனச் சத்தியம் வாங்கிக்கொள்கிறாள் மரகதம்.

கணவரின் உயிருக்காகத் தன்னைக் கட்டுப்படுத்திப் பல நிலைகளிலும் தன்னை அவரிடமிருந்து தவிர்த்து, சத்தியத்தைக் காப்பாற்றிவரும் வேளையில் கந்தநாதன் வெளியில் சென்று வேறொரு பெண்ணுடன் உறவுகொண்டதால் அவர் உயிர்துறக்கும் நிலை ஏற்படுகிறது. இதனையறியாத மாமியார், மருமகள் மீது சந்தேகம் கொள்கிறாள். இதனை “அடிப்பாவி தேவகி! மோசம் செய்துவிட்டாயே, குடி கெடுத்துவிட்டாயே. உன் மாங்கல்யத்தை நீயே அழித்துக்கொண்டு விட்டாயே. என் மகனை விழுங்கிவிட்டாயே, சத்தியம் செய்தாயே, பொய்ச்சத்தியம் செய்தாயே”[25] என்ற மரகதம் கூற்று விளக்கும். இறுதியில் வெறிபிடித்தவள்போல் கூவிய தேவகி கந்தநாதன் மார்பில் சாய்ந்து உயிர் விடுகிறாள்.

எந்தவொரு உண்மைநிலையையும் அறியாது காதலால் கேட்பதையறிந்தோ, பிறர் கூறுவதைக் கேட்டோ பிறர் மீது பழிபோடுவதாலும், சந்தேகத்தால் பிறர் மீது பழிகூறுவதாலும் தவறுசெய்யாதவர்கள் உயிர்விடும் நிலைகூட ஏற்படும் என்பதைக் கருவாகக் கொண்டு இக்கதையை விக்கிரமன் படைத்துள்ளார்.

## குடும்பத்தில் குழப்பம்

பல நபர்கள் சேர்ந்து வாழும் குடும்பத்தில் குழப்பமும், கூச்சலும் ஏற்படுவது தவிர்க்க இயலாதது. இத்தகைய குழப்பத்தை விக்கிரமன் கதைக்கருவாகக் கொண்டுள்ளார். 'விளையாட்டுக் கல்யாணம்' என்னும் சிறுகதை அவ்வகையில் அமைந்ததாகும். கந்தன், முருகன் ஆகிய இருவரும் ஒரு சிறுமியோடு விளையாடிய விளையாட்டு, பிறகு அவர்களது வாழ்க்கையிலும் ஏற்பட்டு, பெரிய குழப்பத்தை ஏற்படுத்திவிட்டது. சின்னாயி முருகனைத் தன் கணவனாக அடைகிறாள். முருகன் பிழைப்புத்தேடி வெளிநாடு சென்றபோது அங்கு இறந்துபோனதாகச் செய்தி வரவே அதனை உண்மையென நம்பி, சில மாதங்களிலேயே கந்தனுக்கு அவள் இரண்டாம்தாரமாக வாழ்க்கைப்படுகிறாள். இறந்துபோகாமல் உயிரோடு ஊர்திரும்பும் முருகன், சின்னாயியும், கந்தனும் கணவன் மனைவியாக வாழ்வதைக்கண்டு மனம் குழம்பி நீரில் மூழ்கித் தன்னையே மாய்த்துக்கொள்கிறான். "ஏ அஞ்சலையாறே ; காத்தாயி தேவியே! முன்பு விளையாட்டுக் கல்யாணத்தில் இருவரை சின்னாயி மணவாளனாக அடைந்தாள். இந்த வாழ்க்கை விளையாட்டிலும் இருவரோடு வாழ்க்கை நடத்துகிறாள். முதலில் என்னுடன் பிறகு இவனுடன். இது என்ன உலகமா? இருள் சூழ்ந்த நரகமா?"[26] என்பதிலிருந்து முருகனின் குழப்பம் விளங்கும்.

குடும்பத்தில் ஒருவனுக்கு ஒருத்தியாக வாழ்ந்த தன் மனைவி பிறன் ஒருவனுடன் வாழ்கிறாள் எனக் காணும் நிலையில் இனி உயிர்வாழ்தல் இழுக்கு என்று தன்னை மாய்த்துக்கொள்ளும் கருவினை இக்கதை விளக்குகிறது. குடும்பத்தில் ஏற்பட்ட குழப்பம் இந்நிலைக்குக் காரணமாக அமைகிறது.

· இசையாய் வாழும் பாஸ்கரனுக்கு இசைந்த துணையாய்த் தன்னை இணைத்துக்கொள்ள விரும்பும் கோலக்கிளி பாரிஜாதம். நாகத்தையும், இசையால் லாவகமாக அடக்கிவிடக்கூடிய பாஸ்கரனையும் தண்ணீரில் மூழ்கடித்த நிலை அவளுக்குப் பெரும் குழப்பத்தை ஏற்படுத்துகிறது. தன் வாழ்க்கையே கேள்விக்குறியாய்ப் போனதை நினைத்துப் பேயடித்தவள் போல வாழும் நிலை கருப்பொருளாக அமைகிறது.

"மனிதன் மாறுகிறானோ, இல்லையோ காலம் ஒரு நிலையில் இருப்பதில்லை. மாறிக்கொண்டே ஓடிக்கொண்டே இருக்கிறது"[27] என்று கூறுவதால் குடும்பத்திலும் குழப்பமும், நிம்மதியும் மாறிமாறி வரும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது.

'மாற்றாந்தாய்' என்ற சிறுகதையிலும் தன் குழந்தைகளின் எதிர்காலம் நல்லபடியாக அமையவேண்டும் என்பதற்காக முதல் மனைவியை இழந்த நாராயணன் மறுமணம் செய்துகொண்டு குடும்பம் நடத்தும் வேளையில் அவன் மகள் தீபாவால் பெரும் குழப்பம் ஏற்படுகிறது. இதற்கெல்லாம் பக்கத்துவீட்டுப் பாட்டியின் மொழிகளே தூண்டலாக அமைகின்றன. தீபா சின்னம்மாவின்மீது வெறுப்புக்கொண்டு வீட்டில் நிம்மதியற்ற நிலையில் வாழ்கிறாள். "நாராயணன் வந்தவுடன் யார்பக்கம் சமாதானம் செய்வது என்று தோன்றாமல் திகைத்தான். அவனுக்குத் தெரியும், ஹேமாவைப்

போன்ற மாற்றாந் தாய்கள் உலகத்தில் வெகு சொற்பம் தான் என்று. வருடங்கள் நான்கு, ஐந்து என்று ஓடின. வயதாக ஆக விபரம் தெரிந்த சீதா, திருந்துவாள் என்று எதிர்பார்த்து வீணாகிவிட்டது"[28] என்னும் நாராயணன் மனவோட்டத்தில் அவருடைய மனக்குழப்பமும் உலக இயல்புக்கு மாறாக நற்பண்பினளாகத் தன் இரண்டாவது மனைவி இருந்தாலும் அவளைக் கொடுமைக் குணமுடையவளாக மற்றவர்கள் எண்ணுவதும் அதுவே குடும்பத்தின் குழப்பத்திற்கு அடிப்படையாக அமைவதும் புலப்படும்.

தங்கள் குடும்பத்தில் நிம்மதி இருந்தாலும் பிறர் பேச்சைக் கேட்டுப் பல்வேறு குழப்பத்தையும், நிம்மதியின்மையையும் ஏற்படுத்திய தீபா, பாட்டி போன்ற பெண்களை விக்கிரமன் இச்சிறுகதையில் காட்டியுள்ளார்.

**பொருளாதாரச் சிக்கல்**

இன்றைய காலகட்டத்தில் வாழ்க்கைக்கு அடிப்படையானது பொருளாதாரம். குடும்பத்தில் பொருளாதாரம் பற்றாக்குறையாகும்போது பல்வேறு இன்னல்களுக்கு ஆட்படும் நிலை ஏற்படுகிறது. பணம் இல்லாதவர்களைப் பிணம் என்றே கூறுவர். பணத்தைச் சம்பாதிப்பதற்கு எவ்வளவோ துன்பங்களையும், சவால்களையும் எதிர்நோக்க வேண்டியிருக்கிறது. இத்தகைய பொருளாதாரச் சிக்கலை விக்கிரமன் கதைக்கருவாகக் கொண்டு சிறுகதைகள் படைத்துள்ளார்.

'நேர்மைக்குப் பரிசு' என்ற கதையில் ஆட்டோ ஓட்டும் சோமுவின் குடும்பத்தில் ஏற்படும் பண நெருக்கடி நிலையைக் காட்டியுள்ளார். மகப்பேறு வலியால் துடிக்கும் தன் மனைவியின் மருத்துவ வசதிக்குக்கூட, பணம் இல்லாது அலைந்து திரிகிறான் சோமு. இதனை, "வேண்டியவர்கள் என்கிற எல்லோரிடமும் கைமாற்று வாங்கியாகிவிட்டது. சே! இது என்ன பிழைப்பு? என்று பலவிதமான சிந்தனையில் ஆழ்ந்தான்"[29] என்பது விளக்கும்.

சோமுவின் ஆட்டோவில் சவாரி செய்தவர் விட்டுச் சென்ற பணத்தை எடுத்துக்கொள்ளும் எண்ணம் இல்லாது காவல்துறையில் ஒப்படைத்ததால் அவன் நேர்மையைப் பாராட்டிப் பரிசாகக் கொடுத்த பணத்தைக் கொண்டு தன் மனைவிக்கு மகப்பேறு பார்க்கும் வாய்ப்பு ஏற்படுகிறது.

'தினை விதைத்தால் தினைவிளையும் என்றபடி நல்லவனுக்கு நல்லதே நடக்கும்' என்ற நம்பிக்கைக்கேற்ப, பொருளாதார நெருக்கடி ஏற்பட்டாலும் தன் எண்ணத்தைத் தீய வழியில் செல்லவிடாது நேர்மையாய் நடந்துகொண்ட சோமுவையும், அதனால் அவனைத் தேடிவரும் பொருளையும் விக்கிரமன் அழகாக எடுத்துக்காட்டியுள்ளார்.

'ஓ' சிறுகதையில் ஒரு தாய் வறுமையான சூழலிலும் தன் மகளைக் கைரேகை நிபுணருக்குத் திருமணம் செய்துகொடுக்கிறாள். அவர் ஒரு பிள்ளையையும் கொடுத்துவிட்டு அவர்களை விட்டுவிட்டுச் செல்கிறான். எதிர்பாராத சூழலில் மகள் கண்பார்வையை இழக்க, மகனைத் துணையாகக் கொண்டு பிச்சை எடுக்கிறாள்.

அப்போது "துட்டு எவ்ளோமா சேர்ந்தது? மகன் கேட்டான். நீ ஜங்சன்லே ரொட்டி வாங்கிக்க எனக்கு ஒரு டீ வாங்கிக்கொடு போதும். 'அப்படி வாணாம்மா, நாம் ரெண்டு பேருமே டீ சாப்பிடுவோம் இல்லைன்னாலும் அடுத்த பெட்டிலே பாடினா காசுகிடைக்காதா?"[30] என்ற மகனின் பேச்சிலிருந்து பொருளாதார நெருக்கடியால் சாப்பாட்டிற்கே வழியில்லாமல் தாயும் மகனும் படும் பாட்டை இக்கதை மூலம் வெளிக்காட்டியுள்ளார்.

மாதச் சம்பளம் வாங்கும் ஒரு நடுத்தர வர்க்கத்து மனிதனின் பொருளாதார நெருக்கடி நிலையை 'நிம்மதி' கதையில் விக்கிரமன்

எடுத்துக்காட்டியுள்ளார். பொருளாதாரப் பற்றாக்குறை ஏற்படும்போது தன் குழந்தை, மனைவி போன்றோரிடம் வெறுப்பைக்காட்டி, நிம்மதியற்ற சூழல் உருவாவதை இக்கதை உணர்த்துகிறது.

நரசிம்மன் வேலைக்குச் சென்றுவிட்டு இரவில் வீட்டிற்கு வந்தான். வீட்டில் விளக்கு எரியவில்லை. தனக்கிருந்த பசியாலும் ஆத்திரத்தாலும் "மூதேவி பிடித்துவிட்டதா? நாள் முழுவதும் நானும் உழைக்கிறேன் என்று கூறுகின்றாயே உன் இலட்சணம் இதுதானா என்று கூவினான். அப்போது மீனா பதில் பேசவில்லை. விளக்கை ஆட்டிப்பார்த்தாள். எண்ணெய் இல்லை கைவிளக்கான சிம்னி விளக்குத்தான் ஆபத்துதவி. அதைக் கொளுத்தினாள். மண்ணென்ணெய்ப் புட்டியை எடுத்துப் பார்த்தாள். ஒரு துளிகூட இல்லை"[31] என்பதிலிருந்து குடும்பத்தில் ஏற்படும் பொருளாதார நெருக்கடி விளங்கும்.

**பெருந்தன்மை**

கூட்டுக்குடும்பத்தில் உள்ள பெண்கள் பொறுமையுடனும் உறுதியுடனும், தன்னம்பிக்கையுடனும் திகழ்ந்தால் குடும்பம் மேலும் சிறப்படையும். அதிலும் பெண்கள் எல்லா உறுப்பினர்களுடனும் நல்ல குணத்தோடும், விட்டுக்கொடுக்கும் பண்போடும் இருக்கும்போது அங்கே அவர்களின் பெருந்தன்மை மேலோங்கி நிற்கிறது. இத்தகைய கதைக்கருவை 'ஒருநாள் நிம்மதி' என்ற சிறுகதை காட்டும். வேதா தன் கணவரோடு ஒருநாள் விடுமுறையைக் கழிக்க வெளியில் செல்கின்றாள். பேருந்தில் செல்லும்போது தன் பணப்பையை வீட்டில் விட்டுவந்ததாக வேதாவின் கணவர் கூற அடுத்த பேருந்து நிறுத்தத்தில் இறங்கிப் பணப்பையை எடுக்க வீட்டிற்கு வருகின்றனர். அப்போது அவர்கள் வீட்டு வாசலில் அவரின் அத்தை தன் குழந்தைகளோடு நிற்பதைக்கண்டு மனம் நோகாமல் "நன்றாயிருக்கிறது. நம்

நிம்மதியும் மண்ணாங்கட்டியும். ஒரு நிமிடம் தாமதித்து வந்திருந்தால் அத்தை எத்தனை கலவரப்பட்டிருப்பாள்? கடைக்குப்போய் காய்கறி வாங்கிவாருங்கள்... நான் அடுப்பை மூட்டுகிறேன்"[32] என்று வேதா கூறுவதிலிருந்து அவளுடைய பெருந்தன்மையும் அன்பும் புலப்படும்.

'தர்மமூர்த்தியின் தயவு' என்ற கதையும் பெருந்தன்மையைக் கருவாகக் கொண்டதாகும். கபாலியின் மீது வெறுப்புக் கொண்டு அவன் கடையையே எடுக்கச் சொல்லி அவனது வாழ்வில் பல துன்பங்களை ஏற்படுத்தினாலும் தர்மமூர்த்தியின் பெயரையே தான் தொடங்கிய புதிய பழக்கடைக்கு 'அருள்மிகு தர்மமூர்த்தி கனிரசக்கடை' என்று பெயர் சூட்டியது கபாலியின் பெருந்தன்மையை உணர்த்தும்.

'புவனாவுக்காக என்னும் கதையும் பெருந்தன்மையைக் கருவாகக் கொண்டதாகும். சோமு தன் அக்காள் மகள் புவனாவைத் திருமணம் செய்துகொள்வதற்காகப் பொருள் திரட்ட வெளியூர் செல்கிறான். அவன் ஊர் திரும்புவதற்குள் பல்வேறு குடும்பச் சூழல் காரணமாகப் புவனா ஒரு குதிரை வண்டிக்காரரின் மனைவியாகிறாள். ஊர் திரும்பிய சோமு அவளுக்கான பெரும்பொருளுடன் அவளைத் தேடிக் கண்டுபிடிக்கிறான்.

புவனாவின் வீட்டிற்குச் சென்று நிலைமையை அறிகிறான். அவள் குழந்தைக்காகத் தான் கொண்டுவந்த பெரும்பொருளையும் அவள் வீட்டிலேயே வைத்துவிட்டுச் செல்லும் சோமுவின் பெருந்தன்மையை "நான் திரும்பி வரவில்லை, கையுடன் கொண்டுவந்திருந்த தோல் பையை அங்கேயே வைத்துவிட்டு வந்துவிட்டேன். அது புவனாவுக்காக அவள் குழந்தையின் எதிர்காலத்திற்காக என் சேமிப்பில் பெரும்பகுதி அதில் இருந்தது"[33] என்பது விளக்கும்.

## தன்னம்பிக்கை

தனி மனிதன் மீது சமுதாயம் செலுத்தும் ஆதிக்கங்களை எதிர்க்க அவர்கள் கையில் எடுக்கும் ஓர் ஆயுதம் நம்பிக்கை. இக்கருவை மையப்படுத்தி விக்கிரமன் சிறுகதைகளை எழுதியுள்ளார். நம்பிக்கை வேண்டும் என்பதையும் வலியுறுத்தியுள்ளார். வாழ்வுச் சூழல் கண்டு சலிப்படையும் நேரங்களில் கைதூக்கிவிடுவதாகவும் எப்படியும் முயன்று வாழ்ந்து பார்ப்போம் என்ற நம்பிக்கையை ஊட்டுவதாகவுமான கதைக்கருக்கள் படைக்கப்பட்டுள்ளன.

'கஸ்தூரியின் கடிதம்' கதையில் கிராமத்து மக்களின் வேலைக்கு ஏற்ற சம்பளம் வழங்கும் போராட்டத்தில், கஸ்தூரி மிகவும் தன்னம்பிக்கையோடு செயல்பட்டு ஏழைகளின் துயர்துடைக்க எண்ணும் நிலையைக் காட்டுகிறார் விக்கிரமன். "வயலிலே கதிர்கள் தலைசாய்ந்துவிட்டன. அறுவடைக்கு இன்னும் ஊர்க்குடியானவர்கள் செல்லவில்லை. ஊரே கலவரப்பட்டுக் கிடக்கின்றது. பண்ணையார் எல்லாம் என் தந்தைகூட இந்த கஸ்தூரியால்தான் இவ்வளவும் என்கிறார்கள். நான் என்ன திருடவும் கொள்ளையடிக்கவுமா தூண்டுகிறேன்? நீங்களே சொல்லுங்கள் அக்கா! உலகமே சம்பளஉயர்வு, பஞ்சப்படி கேட்கும்போது குடியானவர்கள் கேட்பதில் என்ன தப்பு?"[34] என்று ஆணித்தரமாகக் கூறுவதிலிருந்து கஸ்தூரியின் தன்னம்பிக்கையும் மன உறுதியும் புலப்படும்.

'செல்லி சிரித்தாள்' கதையில் தேய்ந்துபோன நிலையில் இருக்கும் ஒரே வீட்டை விற்றுக் கடனை அடைத்து, காசுபண்ணலாமா என்று செல்லியின் கணவர் இராமன் யோசிக்கிறான். அதற்குப் பலர் தூபம் போடுகிறார்கள். சுய லாபநோக்கத்தோடு செல்லியை வளைத்துப்போட

சினிமா தயாரிக்கலாம் என்று அபத்தமான ஆசையைக்காட்டுகிறார் கணவர். செல்லி எல்லாவற்றிற்கும் சிரித்தே மழுப்புகிறாள்.

கடைசியில் இராமன் 'இவளை என்ன கேட்பது?' என்று முடிவெடுத்து வீட்டை விற்க முன்பணம் வாங்கும்போது செல்லி சிரித்தாள். "அப்படியா? இந்த வீட்டை விற்க அவருக்கு உரிமை இல்லை. இந்த வீடு என்னுடையது, என் பெயரில் உள்ளது. நான்தான் உரிமையாளர். இவருடைய அப்பா, என் மாமனார் இறப்பதற்கு முன்பு எழுதிய உயிலைப் பாருங்கள் என்று தகரப்பெட்டியிலிருந்து பத்திரம் ஒன்றை எடுத்து வீசினாள்"[35] என்னும் கதை நிகழ்வும் செல்லியின் கூற்றும் இதனை நன்கு உணர்த்தும்.

'பாதுகாப்பு வளையம்' கதையில் தேவகுஞ்சரி என்னும் அழகு மங்கையை அடைய யோகானந்த சுவாமியும், மனோதத்துவ நிபுணர் நகுலதேவனும் முதலாளியின் மகன் மனோகரசாமியும் ஒருவரோடொருவர் போட்டிபோடுகின்றனர். அவர்கள் ஒவ்வொருவரின் எண்ணத்தையும் நன்கறிந்த தேவகுஞ்சரி தன் தந்தையும் இறந்துவிட்டதால் பாதுகாப்புக் கருதி தன்னம்பிக்கையோடு அறுபது வயதைக் கடந்த தலைமைக் காவலர் பீம்சிங்கை மணப்பது என முடிவெடுத்து, பிறரிடமிருந்து தப்பித்துக் கொள்கிறாள். இதனை "என்ன திகைக்கிறீர்கள்? இன்னும் சிறிது நேரத்தில் என்ன விபரீதம் நேருமோ? மூன்று முதலைகளும் எனக்காக மோதிக்கொள்ளும். நான் முடிவு செய்துவிட்டேன். எனக்குப் பாதுகாப்பு வளையம் நீங்கள்தான். என் கழுத்தில் அந்த வளையத்தை அணிவித்து, பாதுகாப்பாக வாழ்நாள் முழுமையும் இருங்கள்"[36] என்னும் தேவகுஞ்சரி கூற்று இதனைக் காட்டும்.

‘பாதுகாப்பு வளையம்’ என்னும் சிறுகதையில் தேவகுஞ்சரி அறுபது வயது முதிர்ந்த பீம்சிங் என்பவரைத் திருமணம் செய்துகொள்வதாக அமைந்துள்ளது. இக்காலத்தில் பெண்கள் வேலைக்குச் செல்வதன் மூலம் பொருளாதார நிலையில் தன்னிறைவடைந்து தனித்துச் செயல்படமுடியும். ஆனால் விக்கிரமன் ஒரு பெண்ணுக்குத் திருமணம்தான் பாதுகாப்பு என்று கருதி வயது முதிர்ந்த ஒருவரைத் திருமணம் செய்துகொள்வதாகப் படைத்திருப்பது இன்றைய காலத்திற்குப் பொருந்துவதாக இல்லை.

**குடும்பத்தில் மகிழ்ச்சி**

ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்கவேண்டியது மகிழ்ச்சி. ஒருவரது வாழ்வில் மகிழ்ச்சியில்லையேல் அது வெறுமையைத் தோற்றுவிக்கும். குடும்பத்தில் பணத்தால் மகிழ்ச்சி, குழந்தைச் செல்வங்களால் மகிழ்ச்சி, நிம்மதியால் மகிழ்ச்சி, நல்நிகழ்ச்சிகளால் மகிழ்ச்சி என்று பலவகைகளில் மகிழ்ச்சி ஏற்படுகிறது. இத்தகைய மகிழ்ச்சி நிறைந்த குடும்பங்களை விக்கிரமன் தம் சிறுகதைகளில் படைத்துள்ளார்.

‘கண்ணன் மீண்டும் வருகிறான்’ என்ற கதையில் தமிழ்நாட்டுக் குடும்பங்களின் தாம்பத்ய வாழ்வில் தாய்மையடைந்த பெண்மையின் உள்ளத் தூய்மையையும், உணர்வின் இயல்பையும், பிள்ளையிடம் காட்டும் பாச உணர்வையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

சீதாவின் மகன் சுரேஷ் சீராட்டி, பாராட்டி வளர்க்கப்படுகிறான். எதிர்பாராத விதமாக அவன் சிறு நோயால் இறந்துவிடவே தாயும் தகப்பனும் மனம் துவண்டு வாழ்வை மகிழ்ச்சியின்றிக் கழித்து வருகின்றனர். நாட்கள் பல கழிய, புதிய கண்ணன் சீதாவின் வயிற்றில் உதயமாகிறான். அதைக் கேள்விப்பட்டதும் வீடே மகிழ்ச்சிவெள்ளத்தில் மூழ்குகிறது.

“மகாதேவன் நிமிர்ந்து உட்கார்ந்தான். அவன் கண்களில் ஒளி பொங்கியது. என்ன சொல்கிறாய் சீதா? வயிற்றில் வளரும் குழந்தைக்காகவாவது நாம் துக்கத்தை மறக்கவேண்டாமா? மகாதேவன் சீதாவை அப்படியே தாவி அணைத்துக்கொண்டான். அவன் பரபரப்புடன் எங்கோ ஓடினான். சிறிது நேரம் கழித்து அவன் வரும்போது அவன் கையில் 'அகர்வால் அல்வா' பெட்டி இருந்தது”[37] என்பதிலிருந்து அவர்களின் மகிழ்ச்சி புலப்படும்.

'மாற்றாந்தாய்' கதையிலும் தன் தாய் இறந்தபின் அந்த இடத்திற்கு இன்னொரு பெண் தனக்குத் தாயாய் வருவதை விரும்பாத சீதா, வெறுப்பைக் காட்டுகிறாள். அவள் தந்தையையும் சித்தியையும் மனம்நோகச் செய்து குடும்பத்தில் நிம்மதியின்மையை ஏற்படுத்துகிறாள். இறுதியில் திருமணம் செய்துகொண்டு சென்றபின் தன் சித்தியின் அன்பை நினைத்து மனம் நெகிழ்ந்து தன் சித்தியை 'அம்மா' என்று அழைக்கும் மகிழ்ச்சியான குடும்பச் சூழலைக் காட்டுகிறார். “அம்மா... சின்னம்மா...! என்று சீதா கூவிக்கொண்டே ஓடியதைக் கேட்ட நாராயணனின் மலராத முகம் திடீரென மலர்ந்தது. 'சீதா' என்று அழைத்தவன் உடனே விம்மிவிட்டான். சீதா, ஹேமாவின் மார்பிலே முகத்தைப் புதைத்துக்கொண்டு கதறினாள். என்னை மன்னித்துவிடு. அம்மா! மன்னித்துவிடு ஏதோ தவறான ஓர் எண்ணத்தை என் உள்ளத்தில் பதித்துக்கொண்டு மாற்றாந்தாய் கொடுமைப்படுத்துபவள் எனத் தவறாக எண்ணி உன் இதயத்தைப் புண்படுத்தினேன்”[38] என்பதிலிருந்து மாற்றாந்தாய் என்றாலே கொடுமைப்படுத்துபவள், கொடுமைக்காரி என்ற பொதுக் கருத்தையும், அவர்களும் பிற பெண்களைப்போல இரக்கம்காட்டுபவர்கள்தான் என்பதையும் இக்கதைமூலமாகக் காட்டுகிறார்.

பணம் வந்தபோது சாதாரண வாழ்க்கை வாழ்ந்த சாந்தலெட்சுமி எந்தச் சூழலிலும் தன் மகன்மீது தாய்ப்பாசம் குறையாமல் நடந்துகொள்கிறாள். மருமகள் விமலாவால் அவள் மகன் பிரிந்து மாமனார் வீட்டில் வாழும் சூழலில் குடும்பத்தில் பிரச்சினைகள் ஏற்படுகின்றன. அந்நிலையிலும் சாந்தலெட்சுமி பொறுமையுடன் வாழ்கிறாள்.

மகனுக்குச் சோதனையான நேரம் வந்தபோது அவனைக் கண்கலங்கவிடாது தான் சேமித்த பணத்தைச் சரியான நேரத்தில் கொடுத்து உதவுகிறாள். தன் மகனின் துயர்துடைத்து மகிழ்ச்சியடைய வைக்கிறாள். மாமியாரின் பெருந்தன்மையைக் கண்டு "அம்மா என்னை மன்னியுங்கள். அவரை எங்கும் போகச்சொல்லாதீர்கள். இப்போதுதான் எனக்கும், உங்கள் அருமை, முழுமையும் தெரியவந்தது. ஒரு கணம் யோசித்தேன். கணவர் என் பக்கம் என்ற தைரியத்தில் உங்களை அலட்சியப்படுத்தினேன். நீங்களோ தியாகம் செய்து பணம் சேர்த்து மகனின் மறுவாழ்வுக்கு அளிக்கிறீர்கள். நீங்கள் சாதாரணத் தாயல்லர், தெய்வத்தாய்"[39] என்று கண்ணீர் மல்க மனம் உருகிக் கூறும் மருமகளின் கூற்று 'தெய்வத்தாய்' சிறுகதையில் இடம்பெற்றுள்ளது.

கடைசிக்காலம்வரை வைத்துக் காப்பாற்றவேண்டிய மகன் தன்னைவிட்டுப் பிரிந்து சென்றாலும் அவன் கண்ணில் கண்ணீர்வரச் சம்மதிக்காத தாயின் உள்ளத்தையும் ஒன்றாய்ச் சேர்ந்து வாழும்போது குடும்பத்தில் ஏற்படும் மகிழ்வையும் இக்கதை காட்டும்.

**குழந்தை இயல்பைக் காட்டும் கதைகள்**

ஒவ்வொரு குடும்பத்தின் சாராம்சமே குழந்தைகள்தான். பிள்ளையில்லா வீடு பேய்வீடு என்பார்கள். வாழ்வின் அர்த்தமே இந்தக்

குழந்தைகள்தான். இன்று எத்தனையோ குழந்தைகள், குடும்ப வறுமையின் காரணமாக வேலைக்குச் செல்லும் நிலைமையைக் காணமுடிகிறது. குழந்தைகள் அவர்கள் வாழும் சமூகத்தைப் பொறுத்து நல்லவர்களாகவும், தீயவர்களாகவும் மாறுகின்றனர்.

ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது என்ற பழமொழிக்கேற்ப சிறுவயதில் நல்வழியில் செல்பவர்கள் பெரியவர்களாக மாறும்போது சான்றோர்களாக வருவார்கள் என்பது திண்ணம். இத்தகைய குழந்தைகளை அடிப்படையாக வைத்து விக்கிரமன் பிஞ்சுநெஞ்சம், குழந்தைரகு, நந்து, பூச்சாண்டி ஆகிய சிறுகதைகளைக் குழந்தைகளின் மன இயல்பை உணர்த்தும் நோக்கில் படைத்துள்ளார்.

'பிஞ்சு நெஞ்சம்' கதையில் பள்ளிவிடும் ஒரு மாலை நேரத்தில் ஆயாவின் பிடியினின்றும் நழுவி - சற்றும் எதிர்பாராமல் சாலையின் குறுக்கே பாய்ந்துவிட்ட ஐந்துவயது சிறுமியைத் தனது முழுத் திறமையையும் உபயோகித்து, காரோட்டி பொன்னுச்சாமி காப்பாற்றினார். இருப்பினும் குழந்தை கொண்டுவந்த கார்ப்பொம்மை சக்கரத்தினடியில் சிக்கி உருக்குலைந்தது. அதனால் அக்குழந்தை விடாமல் அழுதது. பொன்னுச்சாமி அக்குழந்தையின் அழுகைக்கான காரணம் உணர்ந்து அதேபோல் புதிய பொம்மை ஒன்றை வாங்கி அக்குழந்தையிடம் கொடுத்தார். அதனால் குழந்தையின் முகம் பூவாய் மலர்ந்தது.

குழந்தைகள் ஒருசில நேரங்களில் எதற்காக அடம்பிடிக்கிறார்கள் என்பதே தெரியாது. அவர்கள் நினைத்ததைச் சாதிக்கும் குணத்தை இக்கதை கருவாகக் கொண்டுள்ளது. குழந்தையின் எண்ணத்தை அறியும் திறமை பெற்றோர்க்கும், மற்றவர்க்கும் வேண்டும் என்பதையும், குழந்தை

வைத்திருக்கும் பொருள் உடையும் வேளையில் அதேபோல் மற்றொரு பொருளை வாங்கிக் கொடுத்தால் மகிழ்ச்சியடையும் குழந்தைகளின் மனநிலையையும் இக்கதை உணர்த்துகிறது. குழந்தைகளின் மன உணர்வை, "பாட்டி என் பாப்பாதான் காலம்பற செத்துப்போச்சே. வேறே பாப்பா வேணும்? என்று மறுபடியும் அழத்தொடங்கியது. பொன்னுச்சாமி அந்தப் பொம்மையை நீட்டினான். தயக்கத்துடனும் அதே சமயம் மலர்ந்த முகத்துடனும் பெற்ற அந்தக் குழந்தையின் பிஞ்சு நெஞ்சத்திலே புதைந்திருக்கும் இன்ப உணர்ச்சி அவனுக்கு விளங்காமல் போகவில்லை"[40] என்பது விளக்கும்.

குழந்தைகளின் சுட்டித்தனத்தையும் அக்குணத்தால் ஓர் உயிர் பலியாவது தடுக்கப்படுவதையும் 'குழந்தை ரகு' என்ற கதை கருவாகக் கொண்டுள்ளது. குழந்தை ரகுவின் சுட்டித்தனத்தைப் பொறுத்துக் கொள்ளமுடியாத அண்டை வீட்டுக்காரர்கள் வீட்டைக் காலிசெய்யும்படி ஏசுகிறார்கள். தாயோ பொறுமையோடு தன் குழந்தையின் சுட்டித்தனத்தை நினைத்து வருந்துகிறாள்.

ஒருநாள் காய்ச்சலில் விழுந்த பக்கத்துவீட்டுக்காரரின் மருந்துப்பாட்டிலைக் குழந்தை உடைத்துவிட, தாய் பதறுகிறாள். ஆனால் இறுதியில் அக்குழந்தை உடைத்த மருந்து மருத்துவரால் மாற்றிக்கொடுக்கப்பட்டது என்றும், அதைக் குடித்திருந்தால் அவரின் உயிருக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கும் என்றும் மருத்துவர் கூறும்போது, தெய்வம் குழந்தைவழியாக வந்து காப்பாற்றிவிட்டதாக அனைவரும் ரகுவைப் பாராட்டுகிறார்கள். குழந்தையும் தெய்வமும் ஒன்று என்னும் கரு இதில் புலப்படுகிறது.

"ரகு மருந்தைக் கொட்டியிராவிட்டால் அதை நாங்கள் கொடுத்திருப்போமல்லவா? உங்கள் குழந்தை தெய்வம்போல் காப்பாற்றினான். நீங்கள் வீட்டைக் காலிசெய்யவேண்டாம். நான் பெற்ற குழந்தை விஷமக்காரனாக இருந்தால் நான் என்ன செய்வேன். அதுபோல் எண்ணிக்கொள்கிறேன்"[41] என்பதிலிருந்து குழந்தையின் சுட்டித்தனம் விளங்கும்.

குழந்தைகள் தாயன்பைப் பெறுவதற்கு ஏங்குவர். 'நந்து' கதையில் தாயை இழந்து சித்தியின் பிடியில் வாழும் ரகு சித்தியின் கொடுமையால் சிக்கித் தவித்து நண்பன் பரசுவுடன் வீட்டில் யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் வெளிக்கிளம்புகின்றனர். கையில் இருந்த பணம் தீர்ந்துவிடவே சாப்பாட்டிற்கு வழியில்லாதுபோக நந்து, சித்தியின் அன்பை நினைத்து மீண்டும் வீட்டிற்கே திரும்பிவிடுகிறான்.

இதனை "என்னதான் சித்தி கொடுமைப்படுத்தினாலும் வேளைக்கு, வயிற்றுக்கு சோறு கிடைத்துவந்ததே! படுக்கை, தலையணை, போர்வை, குளிக்க வெந்நீர், சோப்பு, எண்ணெய் எல்லாம் குறையாமல் கிடைக்கும்"[42] என்பதிலிருந்து நந்து சித்தியின்மீது கொண்ட அன்பின் தன்மை புலனாகிறது.

எப்போதும் அடிக்கடி பார்த்துப் பழக்கப்பட்ட முகங்களிலிருந்து சற்று வித்தியாசமான சூழலில் கோரமான உருவத்தைப் பார்க்கும் போது குழந்தைகளுக்கு ஒரு பயஉணர்வு தோன்றும். அதனால் அவர்கள் அமைதியாக அடங்கிவிடுகின்றனர். இத்தகைய மன இயல்பை உணர்த்தும் கதையாக 'பூச்சாண்டி' சிறுகதை இடம்பெற்றுள்ளது.

"ஏ பாப்பா... பிடிச்சுண்டு போயிடட்டுமா? என்றான் பூச்சாண்டி. கம்பார்ட்மெண்டில் இருந்தவர்களுக்கே அவனைப் பார்த்தால் ஓர் அருவை

ஏற்பட்டது தெரிந்தது. அம்மு மறுபடியும் ஒருமுறை அவனைப் பார்த்தாள். அம்மு அழுகையை சட்டென்று நிறுத்திவிட்டாள்"[43] என்பதிலிருந்து பயத்தால் அமைதி அடைவது குழந்தைகளின் இயல்பாகப் படைக்கப் பட்டுள்ளமை விளங்கும்.

## நட்பை வலியுறுத்தும் கதைகள்

இருவர் மனமும் ஒரு தன்மைப்படுதல் நட்பாகும். ஒரு தன்மைப்பட்ட நண்பர்கள் அந்த நட்பில் குற்றம் காணும்பொழுது அதனைக் குற்றமாகக் கொள்ளமாட்டார்கள். தம் நண்பர்க்கு ஒரு துன்பம் வந்தபொழுது அதனைத் தமக்கு வந்ததாகவே கருதுவார்கள். அவர்களுக்கு வந்த துன்பத்தை அப்பொழுதே சென்று போக்குவார்கள், உதவி செய்வார்கள்.

ஒருவன் நல்ல, உறுதியான நண்பன் என்பதை, அவன் தன்னுடைய நண்பனுக்குச் செய்யும் உதவியினால் அறிய இயலும். ஒரு நண்பனை இழப்பதைவிட இந்த உலகத்தில் துன்பமானது வேறு ஒன்றும் இல்லை. தமது வாழ்வில் பிறரிடம் நட்புக் கொள்வோரிடம் இது நினைவில் இருக்க வேண்டும். இத்தகைய உயர்ந்த குணமான நட்பை அடிப்படையாகக் கொண்டு 'நண்பா மறந்துவிட்டாயா?, தங்க வளையல், பட்டாபிராமன் புனர் ஜன்மம் ஆகிய சிறுகதைகளை விக்கிரமன் படைத்துள்ளார்.

நட்பு என்பது உயர்ந்த உள்ளத்துப் பண்பிற்கு அடையாளமாகும். அது தடம்புரளும் போது அதனால் பாதிக்கப்பட்ட சங்கரன் என்ற நண்பனின் உள்ளம் படும் உணர்ச்சி நிறைந்த எண்ணங்களை 'நண்பா மறந்துவிட்டாயா? என்ற கதையில் உணர்த்துவர் விக்கிரமன். உயிர் நண்பனாக சங்கரனால் நேசிக்கப்பட்ட மனோகரன் ஐ.சி.எஸ். தேர்வில் தேறி மாவட்ட ஆட்சித்தலைவராகிறார். அதனால் அறியாததுபோல சங்கரனை உதறித் தள்ளுகிற மனமாறுதல் மனோகரனுக்கு ஏற்படுகிறது.

“ஒரு உருவம் பரட்டைத் தலையுடன் - கிழிந்த உடையுடன் - கும்பலில் நெருக்கி அருகில் சென்று... ‘மிஸ்டர், மனோஹர்... குட்ஈவினிங் நீ வருவதைக் குறித்து மிகவும் சந்தோசம் என்றது. அதைச் செவியுற்ற மனோஹர், “டாம்... நான்சென்ஸ்! யார் உன்னை இங்கே விட்டது? அந்நோன்பர்ஸன், கெட்அவே என்றான்”[44] என்பதிலிருந்து விளங்கும்.

‘உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு’ என்ற குறளுக்கேற்ப நட்பின் இலக்கணத்துக்கு உரமேற்றி வாழ்க்கையின் மேன்மைக்கு அடிகோலும் அற்புதப் பண்பு, நட்பு, சாதி, மதம், மொழி, செழுமை, ஏழைமை போன்ற அனைத்துத் தடைகளையும் உடைத்தெறியும் வல்லமை கொண்ட நட்பின் வீரியத்தை இரு தோழிகளின் வாயிலாக ‘தங்க வளையல்’ கதையில் எடுத்துணர்த்தியுள்ளார் விக்கிரமன்.

“மஞ்சுளாவின் கண்கள் கலங்கின. சாவித்ரியைத் தாயைப்போல் அணைத்துக்கொண்டு உனக்கு வரும் துன்பம் எனக்கு வந்ததுபோல, நாளை காலையில் இருப்புப் பரிசோதனை என்றால் காலையில் ஒன்பது மணிக்கே அந்தப் பொருள் இருக்கவேண்டும். என் அப்பாவுக்கு அப்படி ஓர் இக்கட்டுவந்தபோது உன் தந்தை வீடுதேடி வந்து கதவைத்தட்டி பணம் கொடுத்துச் சென்றது நினைவில் இருக்கிறது. இன்று கோலாகலமான கல்யாணம் நடக்கிறது என்றால் உன் அப்பா இட்ட பிச்சை. இதோ குவிந்திருக்கும் பரிசுப்பொருளைப் பார் என்று கூறி திடீரென எழுந்து பீரோவில் இருந்த ஒரு சோடி தங்க வளையல்களை எடுத்துக் கொடுத்தாள்”[45] என்பதிலிருந்து உயர்ந்த நட்பின் ஆழமும், ஆபத்துக் காலத்தில் உதவும் மனப்பாங்கும் நண்பர்களுக்கு உண்டு என்ற திடமான கருத்தைக் காணமுடிகிறது.

இதுபோன்ற நட்பு, என்றும் அழிவேயில்லாத சிறந்த நட்பாகும். இத்தகைய நண்பர்களை உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றவேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

உயர்ந்த நட்பை நகமும் சதையும் என்றும் ஒருயிர் ஈருடல் என்றும் உவமை மூலம் விளக்குவர். இந்த அடிப்டையில் 'பட்டாபிராமன் புனர்ஜன்மம்' என்ற கதை படைக்கப்பட்டுள்ளது. நண்பனைப் பொறுத்தவரை பட்டாபி சாகவில்லை, வாழ்கிறான், வாழவேண்டும் என்பது அவன் எண்ணம். உயர்ந்த நட்பையும் நண்பனின் உணர்வுகளையும் உள்ளங்கை நெல்லிக்கனியாக இக்கதையில் காட்டியுள்ளார்.

பெற்ற தாயின் வார்த்தைகளைப் புறக்கணித்துத் தன்னைக் காதலித்தவளைத் திருமணம் செய்துகொள்ள இயலாநிலையில் பட்டாபிராமன் மரணமடைந்தான். அவன் இறந்த பிறகும் அவன் நினைவிலே வாழும் நண்பனுக்கு மறைவினால் ஏற்பட்ட அதிர்ச்சியின் பிரமையே உருவமாக வந்து "ஆம் நண்பா! நான் இறந்ததாகவே இருக்கட்டும், என் சபதம் நிறைவேறியதாகவே இருக்கட்டும் நாளைக் காலை நான் கல்கத்தாவுக்கு விமானத்தில் போகிறேன். அங்கு போய் ஜானகியைச் சந்திப்பேன் பயப்படாதே! உன்னை மறக்கமாட்டேன் போய் வருகிறேன்!"[46] என்று கூறிச் சென்றது என்பதன்மூலம் இறந்த நண்பனின் நட்பை மறக்கமுடியாமல் தவிக்கும் மனிதமனத்தையும் நட்பின் உயர்வையும் விக்கிரமன் காட்டியுள்ளார்.

**வறுமைப் புனைவுக் கதைகள்**

இயலாதார்க்கும், முயலாதார்க்கும் இல்லாதார்க்கும் தனக்குத் தானே சூட்டிய பெயர்தான் வறுமை. எளியவரை வலியார் அடிப்பதால் தனக்கு

உண்டான துன்பத்தையும், பெட்டிமேல் பெட்டிவைத்து வட்டிமேல் வட்டி கொள்ளும் மக்கள், பட்டினி கிடப்பாரைப் பார்க்கவும் மாட்டார்கள்; பழங்கஞ்சி வழங்கவும் மாட்டார்கள்.

மழை இல்லையென்றால் செழுமையான நிலமும் பாலையாகும். அதுபோல் அறிவுத்திறம் படைத்திருந்தும் உழைக்க உயிர் இருந்தும் உரிமையும், வாய்ப்பும் வழங்கப்படாமல் ஒருவருக்கு மட்டுமே வழங்கப்பட்டு மற்றவர்கள் ஒதுக்கப்படும்போது உருவாகும் வர்க்கமே வறுமை.

வாய்ப்பும், வசதியும் வழியும் வழங்கப்பட்டு இருந்தும் சோம்பல் என்ற போர்வைக்குள் நுழைந்து இருப்பதையெல்லாம் இழந்துவிட்டு வாழ வழியின்றி வழிதேடி நிற்கும் விழிகள்தான் வறுமை. அது அதிகார வர்க்கத்தால் உருவானது. உரிமைகள் மறுக்கப்பட்ட சூழலில் உருவானது. சமூகத்தால் ஒதுக்கப்பட்ட சமஉரிமை இல்லாத சமத்துவத்தை எதிர்நோக்கிக் காலமெல்லாம் கண்ணீரில் கலங்கி நிற்கும் கருவிழிகளே வறுமை.

உரிமையும், சமத்துவமும் வழங்கப்பட்டு அதிகாரக்குவிப்பு அகற்றப்பட்டு அதிகாரப் பகிர்வும், உரிமைப் பகிர்வும் சரியாக வழங்கப்பட்டால் ஒடுங்கிய முகம் நீங்கி வளர்ச்சிபெறும்; சமத்துவமும் தழைத்தோங்கும். இத்தகைய வறுமையினால் எத்தனையோ குடும்பங்கள் பசியால் பட்டினியால் வாடிநிற்கின்றன.

குழந்தைகளைப் பொருளாதாரக் குறைவால் பள்ளிப்படிப்புக்கு அனுப்பமுடியாமல் குழந்தைத் தொழிலாளர்களாக்குகின்றனர். வறுமையால் எத்தனையோ உயிரிழப்புக்களும் ஏற்படுகின்றன. திருட்டு, பிச்சையெடுத்தல், கொலை போன்ற தீய செயல்கள் நடப்பதற்கு வறுமை அடித்தளமாகிறது.

இத்தகைய வறுமையைக் கருப்பொருளாகக் கொண்டு விக்கிரமன் நீலரிப்பன், வாணக்காரன், கௌரவம், பிழைத்த இதயம், குலதனம் ஆகிய கதைகளைப் படைத்துள்ளார்.

'நீலரிப்பன்' கதையில் கால்கடுக்க அச்சகத்தில் நின்று ஒவ்வோர் எழுத்தாய்க் கோத்து அச்சிற்கு அழகுசேர்க்கும் அச்சகர் கேசவன். நாள் முழுவதும் அவனுக்கே உழைத்து ஞாயிற்றுக்கிழமைக்காகக் காத்திருக்கும் மனைவி பார்வதி. அத்தான் பெரிய உத்யோகத்தைப் பட்டணத்தில் பார்ப்பதாய் எண்ணிவந்திருக்கும் மைத்துனி பரிமளம். இந்த மூன்று கதாபாத்திரங்களோடு வறுமையை எடுத்துக்காட்டும் கதையை விக்கிரமன் படைத்துள்ளார்.

மைத்துனி பரிமளம் பட்டணத்தில் உள்ள அக்கா வீட்டிற்கு வந்திருக்கும் வேளையில் ஒருநாள் ஞாயிறு ஊர்சுற்றிப் பார்க்கக் கிளம்புகின்றனர். மைத்துனியோ கடையில் இருந்த நீலரிப்பன் வேண்டும் என அக்காவிடம் கூற, அவள் கணவரிடம் கூற, அவன் கையில் காசு இல்லாத நிலையில் தடுமாறுகிறான். "மைத்துனி விரும்பிக்கேட்ட ஒரு ரிப்பனைக்கூட வாங்கித்தரத் தன்னால் முடியவில்லையே, என்ன நினைப்பாள் அவள். அத்தானிடம் துட்டு இருந்தாலும் வாங்கித்தருவதற்கு மனமில்லை என்றுதான் எண்ணுவாள். சேச்சே... நம்மிடம் காசு பணம் இருக்கிறதா என்ன? நம் வருத்தம் யாருக்குத் தெரியும்? ஒரு காலணா வேர்க்கடலைக்குக்கூட இல்லாமே நடந்துதானே போனோம்...? அது தெரிந்திருக்காதா?"[47] என்று கேசவனின் மனம் அவனை வாட்டி வதைத்தது.

அவ்வறுமையிலும் தங்கள் கௌரவத்தைக் காப்பாற்ற, கேசவனுக்குத் தெரியாமல் மனைவியும், மனைவிக்குத் தெரியாமல் கேசவனும்

நீலரிப்பனைப் பரிமளத்துக்கு வாங்கிவந்ததிலிருந்து வறுமையாக இருந்தாலும் மரியாதை காக்கப்படவேண்டும் என்பதைக் கருவாகக் கொண்டு விக்கிரமன் இக்கதையைப் படைத்துள்ளார்.

விநாயகம் படிப்பறிவு அதிகமில்லாதவன். வறுமையின் காரணமாக வாணக்காரன் என்ற பெயருடன் கோயிலில் வெடி போடும் வேலையைச் செய்து பிழைத்து வருகிறான். அவனுக்கு ஒரு மகனும், மனைவியும் உள்ளனர். அவனிடம் தகாத நட்புக்கொண்ட தர்மலிங்கம் குடிபோதைக்கு விநாயகத்தை ஆட்படுத்துகிறான். அவன் தொழிலில் நேர்மை குறைகிறது. மனைவி கண்டிக்கிறாள். திருந்தாத விநாயகம் தான் குடிபோதைக்கு ஆளாகித் தன்மகனை வெடிபோடச் செய்துவிட்டு மயங்கிக் கிடக்கிறான். வெடி வெடிக்காமல் கிடப்பதைப் பார்க்க அருகில் செல்லும்போது வெடி வெடித்து மகன் இறந்துபோகிறான்.

'வாணக்காரன்' கதையில் வறுமையின் காரணமாக ஆபத்தான தொழில்செய்து குடும்பத்தைக் காக்க வந்த விநாயகம், தீய பழக்கமான குடிபோதையால் தன் பிள்ளையையே இழக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டமை கருவாக அமைந்துள்ளது.

'கௌரவம்' கதையில் முப்பது ரூபாய் சம்பளத்தில் நான்கு குழந்தைகளையும் மனைவியையும் பராமரிக்க வேண்டிய கட்டாயத்தில் வாழும் கேசவன் ஒன்றும் மகிழ்ச்சியாக இல்லை. ஓவியப்படிப்பு முடித்திருந்தும் சரியான வேலை கிடைக்கவில்லை. பெயர்ப்பலகைகள் எழுதவும், அலங்கார வேலைகளுக்குமாகச் சிலர் வேலை கொடுத்தனர். இதனால் குடும்பத்தில் வறுமை ஏற்பட்டு, சண்டை உண்டானது.

வறுமையிலும் கௌரவத்தை விட்டுக்கொடுக்காத கேசவன் சிறுசிறு வேலையைக்கூடச் செய்து, பிழைப்பை ஓட்டுகிறான். தன் தொழிலையே தெய்வமாக மதித்து, கௌரவத்தை விடாது உழைத்த கேசவனுக்கு அடுத்தடுத்து வேலைவாய்ப்புகள் வரக் குடும்பம் மகிழ்ச்சியில் திளைக்கிறது.

"என்னங்க உக்கார்ந்துட்டீங்க? நம்மள மதிச்சு எத்தனையோ பேர் வந்திருக்கிறாங்க. உங்க பெருமை இன்னிக்குத்தான் ஒசந்தது. அவங்க வீடுகளுக்குப்போய்ட்டு வந்து நம்ம வீட்டிலேயும் கலசம் எழுதணும்"[48] என்பதிலிருந்து அவர்களின் வறுமை நீங்கியது புலப்படுகிறது.

குடும்பத்தில் வறுமை தாண்டவமாடினாலும் தன் கௌரவத்தை விடக்கூடாது என்பதைக் கருவாகக் கொண்டு இக்கதை படைக்கப்பட்டுள்ளது.

போதிய வருமானம் இன்றி அல்லாடிக்கொண்டிருந்த ஓர் அச்சுத்தொழிலாளி கேசவன் தன் குழந்தையின் மருத்துவச் செலவுக்கு வழியில்லாத நிலையில், பள்ளிக்குச் சென்றுகொண்டிருந்த சிறுமி ஒருத்தியின் காதில் மின்னிய தொங்கட்டான்களைக் கழற்றி, அதை நகைக்கடையில் கொடுக்கத் திட்டமிட்டான்.

அதேநேரத்தில் ஓர் அச்சகத்தில் அவசர வேலை இருப்பதாகக் கூறிய தன் நண்பனின் அழைப்பை ஏற்றுச் சென்று 'இனி நகையை விற்காமல் அன்று கிடைக்கும் கூலியைக் கொண்டே மருத்துவம் செய்துகொள்ளலாம் என்றெண்ணி மருத்துவரிடம் தன் குழந்தையை அழைத்துச் சென்றபோது, அங்கே அந்த மருத்துவரின் குழந்தை அணிந்திருந்த நகையைத் திருடிய உண்மை தெரிகிறது.

உடனே தன் தவறை மருத்துவரிடம் விளக்கிக்கூறி, நகையை அவரிடம் ஒப்படைத்து மன்னிப்புக் கேட்கிறான். தவிர்க்க இயலாத

சூழ்நிலையில் தவறுசெய்துவிட்டுப் பின்னர் மனச்சாட்சிக்கு மதிப்புக் கொடுத்து, திருடிய நகையைத் திருப்பிக் கொடுத்த கேசவனின் நேர்மை 'பிழைத்த இதயம்' கதையின் கருவாக அமைந்துள்ளது. வறுமையான சூழலிலும் நேர்மை குறையாத நிலையை இக்கதை உணர்த்துகிறது.

"என் குழந்தைக்கு உயிர் கொடுத்தவரே... உங்கள் குழந்தைக்குத் தீங்கு செய்துவிட்டேன். இதோ இந்தாருங்கள் குழந்தையின் தொங்கட்டான்கள். என் குழந்தையின் உயிரைக் காப்பாற்ற உங்கள் குழந்தையைப் பொய்கூறி அழைத்துச்சென்று இவற்றைக் கழற்றினேன். என்னை மன்னியுங்கள் டாக்டர்"[49] என்பதால் வறுமை திருடத் தூண்டும் அளவுக்குக் கொடுமையானது என்பது புலனாகும்.

வறுமையும் பொருளாதார நெருக்கடியும் இல்லாமல் இருக்கும் பலரும் பல தொழில்கள் மூலம் வருமானம் ஈட்டி, குடும்பத்தைக் காக்கின்றனர். அத்தகைய தொழிலாளி ஐஸ் வியாபாரம் செய்துவரும் பாலகிருஷ்ண லாலா. தினமும் இத்தொழில் மூலம் வருமானம் ஈட்டுகிறார். அதற்கு உதவியாக ஓசை எழுப்பும் மணியை ஒருநாள் மகன் தொலைத்துவிடுகிறான். அதனால் வியாபாரம் தடைப்பட நானூறு ரூபாய் நட்டம் ஏற்படுகிறது. பிறகு வேறொரு மணியைப் பொருத்தித் தொடர்ந்து தன் வியாபாரத்தை நடத்துகிறான். இதனை 'குலதனம்' என்னும் சிறுகதை உணர்த்துகிறது.

தொழிலில் நேர்மையும், காலம்தவறாமையும், இருப்பதைக் கொண்டு வாழும் மனப்பக்குவமும் ஒருவரிடம் அமைந்தால் அவர் வாழ்வில் வறுமை இன்றி வாழலாம் என்ற மையக்கருத்தை இக்கதை விளக்குகிறது.

## மனிதநேயக் கதைகள்

மனிதன், மனிதநேயத்தோடு வாழவேண்டும். ஒவ்வொருவரும் மனிதநேய உணர்வுடன் செயல்பட்டால் பிறருக்குத் துன்பம் ஏற்படாது. ஒவ்வொருவருக்கும் நன்மை செய்யாவிட்டாலும் தீமை செய்யாது இருப்பதே மனிதநேயம் ஆகும். இத்தகைய மனிதநேயத்தை அடிப்படையாகக் கொண்டு 'கந்தப்பன் காளை' 'மனித நேயம்' என்னும் சிறுகதைகள் படைக்கப்பட்டுள்ளன.

'கந்தப்பன் காளை' கதையில் காளை மாட்டின் மூலம் கந்தப்பனுக்கு வாழ்க்கைத் துணைவி கிடைக்கிறாள். அந்தக் காளைமாட்டைச் செல்லமாக வளர்த்துவருவதோடு மனைவியுடன் மகிழ்ச்சியாக வாழ்க்கை நடத்தினான் கந்தப்பன். இந்நிலையில் அவன் வீட்டுக் குடிசையில் பிடித்த தீ, காளை கட்டியிருந்த கொட்டகையில் பற்றி எரிந்தது. வாயில்லா ஜீவனாகிய காளைமாடு ஒன்றும் செய்ய இயலாது தவிக்கிறது. கந்தப்பன் தன் உயிரை நினையாது காளையைக் காப்பாற்றுகிறான். இதனை, "கந்தப்பன் தீயினுள் பாய்ந்தான். 'கந்தப்பா, கந்தப்பா' என்று ஏகக் கூக்குரல். குடிசையின் முற்றத்தில் ஏகப்புகை. கண்ணே தெரியவில்லை. வினாடிக்கு வினாடி தீ அதிகமாகிக்கொண்டே வந்துவிட்டது. கந்தப்பன் காளையின் இருப்பிடத்தைப் பிடித்துவிட்டான். அப்பொழுதிருந்த வேகத்தில் பலமாகத் தும்பை இழுத்தறுத்து காளையையும் இழுத்துக்கொண்டு வெளியே வந்துவிட்டான்"[50] என்பது உணர்த்தும். ஐந்தறிவுடைய விலங்கினமாக இருந்தாலும் அக்காளையைத் தன் உயிரையே பணயம்வைத்துக் காப்பாற்றிய கந்தப்பனின் மனிதநேய உணர்வு இதில் கருவாக அமைந்துள்ளது.

'மனிதநேயம்' கதையில் கருணாகரன் தன் வீட்டில் வளர்ந்த பூனைக்குட்டிகள் மீது வெறுப்புக்கொண்டு வேலையாளிடம் வெளியே

கொண்டு சென்று விடுமாறு கூறுகிறார். வேலைக்காரனான மூர்த்தி அதைத் தன் வீட்டிற்கு எடுத்துச்சென்று வளர்த்துவருகிறார். மறுநாள் பெய்த பெருமழையில் பூனைக்குட்டிகள் என்ன ஆனதோ என்று கருணாகரன் மனம் பதறுகிறது. வேலைக்கார மூர்த்தியிடம் விசாரிக்கிறார். பூனைக்குட்டிகளைப் பத்திரமாக வளர்த்துவருவதாக மூர்த்தி கூறுகிறார். அதனால் கருணாகரன் மனம் மகிழ்ச்சியடைந்து, மூர்த்திக்குப் பரிசளிக்கிறார். கருணாகரன் முதலில் பூனைக்குட்டிகள் மீது வெறுப்புக் கொண்டாலும் பிறகு மனிதநேயத்துடன் செயல்படுகிறார். மூர்த்தி வசதி குறைந்தவனாக இருந்தாலும் மனிதநேயத்தில் உயர்ந்து நிற்கிறான். இதனை, "மூர்த்தி மகத்தான நன்மைசெய்துவிட்டாய், என்று கூறி உள்ளே சென்று தனக்கு முதல்நாள் விழாவில் அணிவித்த சால்வையை எடுத்துவந்து மூர்த்திக்குப் போர்த்தி 'நீதான் மனிதநேயம்மிக்க மாமனிதன்' என்று கூறி அன்புடன் அணைத்து இந்த விருதும், மாலையும் சால்வையும் உனக்குத்தான் என்றார்"[51] என்பது விளக்கும்.

## பகுத்தறிவுச் சிந்தனைக் கதைகள்

மக்களின் முன்னேற்றத்தை முடமாக்கும் சிந்தனைகளுள் மூடநம்பிக்கையும் ஒன்று. எவ்வளவுதான் பகுத்தறிவுச் சிந்தனைப் புயல்வீசினாலும், மக்கள் நெஞ்சில் காலங்காலமாக ஊறி நிலைபெற்றுவிட்ட சில மூடநம்பிக்கைகளை மாற்ற முடிவதில்லை. மதத்தின் பெயராலும், கடவுளின் பெயராலும் பலவகையான மூடநம்பிக்கைகள் சமுதாயத்தில் உருவாயின. இம்மூடநம்பிக்கைகளைப் போக்கும் பகுத்தறிவுச் சிந்தனையைக் கருவாகக் கொண்டு விக்கிரமன் சிறுகதைகள் படைத்துள்ளார்.

மூடநம்பிக்கையின் அடிப்படையில் சமுதாய மக்களின் சிந்தனை, வாழ்க்கையை அவலமாக்கிவிடுகிறது என்ற கருவினை மையமாகக் கொண்டு 'மலைவீடு' கதை விளங்குகிறது.

செவ்வாய் தோசம் உள்ள ஒரு பெண் காதல் தோல்வியில் தற்கொலை செய்துகொள்கிறாள். அவள் ஆவி அவ்வீட்டில் இரவில் உலாவருவது போன்ற கற்பனை. எனினும் வீட்டில் உள்ளவர்களால் செவ்வாய்தோசம் என்ற மூடநம்பிக்கைக் கொள்கையால் உயிரையே இழக்கும் நிலை உருவாகிறது. மேலும் 'பேய், பிசாசு' என்ற மூடநம்பிக்கையால் நிம்மதி இழக்கும் நிலையையும் அறியமுடிகிறது. இதனை, "வரவர அந்தப் பாட்டின் ஓசை அருகிலிருந்து கேட்பது போலிருந்தது. படார் என்று காற்றில் ஜன்னல் கதவு சாத்திக்கொண்டது. பாட்டின் ஒலி நின்றுவிட்டது. யாரோ அறையில் நடமாடும் ஓசை கேட்டது. என் இதயமே நின்றுவிட்டது போன்ற உணர்ச்சி அடைந்தேன். காலடி ஓசை என்னருகே கேட்டது. 'ஓ'வென்று கத்தலாமென எண்ணினேன். நெஞ்சு வறண்டுபோனதால் அப்படிச் செய்யமுடியவில்லை"[52] என்பது விளக்கும்.

## தொகுப்புரை

விக்கிரமன் சிறுகதைகளில் காதல், குடும்பம், குழந்தைகளின் மன இயல்பு, நட்பு, வறுமை, மனிதநேயம், பகுத்தறிவு சார்ந்த கூறுகள் கதைக்கருவாக அமைந்துள்ளன.

விக்கிரமன் காதல் கதைகளை, உண்மைக்காதல், நிறைவேறும் காதல், ஊடல் நீக்கும் காதல், போலிக்காதல், காதலுக்கு எதிர்ப்பு, காதலில் இடையூறு என்ற வகையில் படைத்துள்ளார். உண்மைக்காதலுக்கு சாதி வேறுபாடோ பொருளாதார ஏற்றத்தாழ்வோ தடையாக இருக்க இயலாது என்பது கருவாக அமைந்துள்ளது. 'பொல்லாத மனசு' கதையில் சாதியைக் காரணம்காட்டிப் பஞ்சாயத்தார் சின்னக்கவுண்டன் - பழனியம்மாளைப் பிரிக்க நினைத்தாலும் இறுதியில் இருவரும் ஒன்றுசேரும் நிலையினையும்

'இன்பத்தின் விலை' கதையில் உண்மைக் காதலில் ஏழையும் அதிக விலையில் பரிசுவாங்கிக் காதலிக்குக் கொடுக்கமுடியும் என்ற கருவை விளக்குவதாக அமைகிறது.

'கற்பெனும் கனல்' சிறுகதையும் உண்மைக் காதலுக்கு எடுத்துக்காட்டாய்த் திகழ்ந்து உண்மையாய்க் காதலிப்பவளே இறுதிவரை உறுதியாக இருந்து காதலனை அடைகிறாள் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

'நிறைவேறும் காதல்' தலைப்பில் 'செவ்வந்திப்பூ சிங்காரி' கதையும் தாம் நினைத்தவனையே கரம்பிடித்து வாழ்க்கைத்துணையாக ஆக்கிக்கொள்ளும் மன உறுதி கருவாக அமைந்துள்ளது. 'குழலோசை' கதையில் குமாரவேலு - மல்லிகா காதலில் பல்வேறு ஊடல் ஏற்பட்டபோதிலும் மீண்டும் விரும்பியவனையே அடைய நினைக்கும் மல்லிகாவின் எண்ணத்தைக் காணமுடிகிறது.

'ஜாங்கிரி' சிறுகதையில் தங்கராசிடம் போலியான காதல் வேடம் பூண்டு கள்ளக்கடத்தலுக்குத் துணைநின்ற அன்னத்தின் செயலையும், இறுதியில் அவள் உயிரை மாய்ந்துக்கொண்ட விதத்தையும் எடுத்துக்காட்டிப் போலிக்காதலை விக்கிரமன் தோலுரித்துக் காட்டியுள்ளார்.

பெண்ணின் விருப்பத்திற்கு மாறாகத் திருமணம் முடித்தல், தந்தையின் விருப்பிற்கேற்ப பெண்களின் மனதை மாற்ற முயற்சித்தல் போன்ற கதைக்கருக்கள் புத்துயிர், விஷக்கத்தி ஆகிய சிறுகதைகளில் காதலுக்குச் சமுதாயம் காட்டும் எதிர்ப்புணர்வைக் காட்டுகின்றன.

விக்கிரமனின் குடும்பக் கதைகளுள் சந்தேகப்புத்தியால் உயிர்போகும் நிலையை, சத்தியமான சத்தியம் என்னும் சிறுகதையும், குடும்பத்தில்

ஏற்படும் பிரச்சினைகளால் பெரும் குழப்பமும், நிம்மதியின்மையும் ஏற்படும் நிலையை 'விளையாட்டுக் கல்யாணம்' 'புதுவெள்ளம்' பூங்கோதையின் கணவன்' 'மாற்றாந்தாய்' போன்ற கதைகளும் விளக்குவதாகத் திகழ்கின்றன.

பொருளாதாரத்தால் ஏற்படும் சிக்கலை மையமிட்டு 'நேர்மைக்குப் பரிசு' 'ஓ' 'நிம்மதி' முதலிய கதைகளும் பெண்ணின் பெருந்தன்மையைக் காட்டுவதாக 'ஒருநாள் நிம்மதி' சிறுகதையும் ஆணின் பெருந்தன்மையைக் காட்டுவதாக 'தர்ம மூர்த்தியின் தயவு' கதையும் அமைந்துள்ளன.

தனிமனிதன் மீது சமுதாயம் செலுத்தும் ஆதிக்கங்களை எதிர்க்க அவர்கள் கையில் எடுக்கும் ஓர் ஆயுதம் நம்பிக்கை. இக்கருவை மையப்படுத்தி விக்கிரமன் 'கஸ்தூரியின் கடிதம்' 'செல்லி சிரித்தாள்' 'பாதுகாப்பு வளையம்' ஆகிய கதைகளைப் படைத்துள்ளார். குடும்பத்தில் பல்வேறு இன்னல்கள் இருந்தாலும் மனிதருக்கு மகிழ்ச்சியை உண்டாக்குவது குடும்பமே என்பதற்குச் சான்றாக 'கண்ணன் மீண்டும் வருகிறான்' 'தெய்வத்தாய்' ஆகிய கதைகள் படைக்கப்பட்டுள்ளன.

குழந்தைகளின் மன இயல்புகளை மையமாக வைத்து விக்கிரமன் 'பிஞ்சு நெஞ்சம்' 'குழந்தை ரகு' 'நந்து' 'பூச்சாண்டி' ஆகிய கதைகளைப் படைத்துள்ளார். இதில் குழந்தையின் பிஞ்சு நெஞ்சத்தில் புதைந்திருக்கும் இன்ப உணர்ச்சியும், 'குழந்தை ரகு' கதையில் குழந்தைகளின் சுட்டித்தனமும் 'நந்து' கதையில் சித்தியின் அன்பும் கருவாக உள்ளன. நட்பின் உயர்வை எடுத்துக்காட்டும் கதையாக 'நண்பா மறந்துவிட்டாயா?' 'பட்டாபிராமன் புனர் ஜென்மம்' 'தங்க வளையல்' ஆகிய கதைகள் அமைந்துள்ளன.

வறுமைப் புனைவுகளைச் சித்திரிக்கும் கதைகளாக 'நீலரிப்பன்' 'வாணக்காரன்' 'கௌரவம்' 'பிழைத்த இதயம்' 'குலதனம்' போன்ற கதைகள்

இடம்பெற்றுள்ளன. இவற்றின் மூலம் வறுமையால் மக்கள் படும் இன்னல்களும் துன்பமும் உணர்த்தப்பட்டுள்ளன.

ஐந்தறிவுடைய விலங்கினமாக இருந்தாலும் தன் உயிரையே பணயம்வைத்துக் காளையைக் காப்பாற்றிய கந்தப்பனின் மனிதநேய உணர்வைக் கருவாகக் கொண்டு 'கந்தப்பன் காளை' என்னும் சிறுகதை படைக்கப்பட்டுள்ளது. 'மனிதநேயம்' கதையில் பூனைக்குட்டிகளை வெள்ள நீரிலிருந்து காப்பாற்றி வளர்த்துவந்த வேலைக்காரனான மூர்த்தியின் மனிதநேய உணர்வைக் காட்டியுள்ளார்.

மூட நம்பிக்கையின் அடிப்படையில் சமுதாய மக்களின் சிந்தனை, வாழ்க்கையை அவலமாக்கிவிடுகிறது என்ற கருவினை மையமாகக் கொண்டு 'மலைவீடு' கதை விளங்குகிறது.

இவற்றால் விக்கிரமனின் சிறுகதைகளின் கதைப்பொருளும் கருவும் சமுதாயத்திலிருந்து எடுக்கப்பட்ட நிகழ்வுகளாகவும் சமுதாய மக்களுக்கு அறிவுறுத்தும் கருத்துக்களாகவும் சமுதாயச் சிக்கல்களை இயல்பாகக் காட்டுவனவாகவும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## சான்றெண் விளக்கம்

1. Quoted by R.J.Rees. English literature Macmillan Education Ltd -1973, P.203
2. Ibid, P.202
3. H.E.Bates, The Moden Short Story, P.21
4. சி.சு.செல்லப்பா, தற்காலத்தமிழ் இலக்கியம், ப.34
5. H.E.Bates, The Moden Short Story, P.21
6. Ibid, P.21
7. W.H.Hudson Aintroducation to the story of literature, PP 342-343
8. செ.சுதாகரன், அழகிரிசாமியின் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப.84
9. செ.அருள்ஜோதி, நாட்டுப்புறக் காதல் பாடல்களில் ஏக்கமும், எதிர்ப்பார்ப்பும், ப.55
10. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.56
11. மேலது, ப.155
12. மேலது, ப.87
13. மேலது, ப.369
14. மேலது, ப.214
15. மேலது, ப.479
16. மேலது, ப.63
17. மேலது, பக்.658, 659
18. மேலது, ப.174
19. மேலது, ப.405
20. இராசம்மாள், குடும்பக்கலை, ப.31
21. மா.இராமலிங்கம், விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதைகள், ப.96
22. சோ.பாரதி இலக்குமித்திரன், நமது சமூகம், ப.133
23. கு.சின்னச்சாமி, தமிழர் சமுதாய வரலாறு, ப.12
24. மீனாக்குமாரி, ந.பிச்சமூர்த்தி படைப்பு ஓர் ஆய்வு, ப.22
25. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.440

26. மேலது, ப.5

27. மேலது, ப.68

28. மேலது, ப.269

29. மேலது, ப.412

30. மேலது, ப.498

31. மேலது, ப.78

32. மேலது, ப.194

33. மேலது, ப.695

34. மேலது, ப.38

35. மேலது, ப.601

36. மேலது, ப.713

37. மேலது, ப.516

38. மேலது, ப.271

39. மேலது, ப.341

40. மேலது, ப.204

41. மேலது, ப.262

42. மேலது, ப.590

43. மேலது, ப.461

44. மேலது, ப.9

45. மேலது, பக்.740, 741

46. மேலது, ப.124

47. மேலது, ப.233

48. மேலது, ப.226

49. மேலது, ப.188

50. மேலது, ப.101

51. மேலது, ப.679

52. மேலது, ப.44.

## இயல் - 2

# விக்கிரமனின் சிறுகதைகளில் பாத்திரப் படைப்பு

சிறுகதையில் மிகவும் முக்கியமானது பாத்திரப்படைப்பாகும். கதை மாந்தர்களே படிப்பவர் கருத்தைப் பெரிதும் ஈர்ப்பவராவர். கதையில் கதைமாந்தர் படைப்பைச் சுவையுடையதாகச் செய்ய அவர்கள் ஒவ்வொருவரையும் தனித்த இயல்புடையவராக அமைப்பது நுட்பமான கலையாகும். கதையினை மிக்க தரமுடையதாகவும் பயனுடையதாகவும் ஆக்குவது பாத்திரப்படைப்பேயாகும். வாசகர் மனதில் அவர் படித்த கதையின் கருவும், கதைக்கோப்பும் நில்லாமல் போய்விட்டாலும் பாத்திரங்கள் நிலைத்து நிற்கும்.

சிறந்த சிறுகதை எழுத்தாளர்கள் உண்மை வாழ்க்கையில் தாம் காணும் மக்களைக் கருத்தில்கொண்டு தம் கதைகளில் பாத்திரங்களைப் படைக்கின்றனர். வாழ்க்கையில் உயிரோடு இயங்குவதைத் தம் கதைகளுக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்துக்கொள்கின்றனர். இவ்வாறு உருவாக்கப்பட்ட பாத்திரங்களே கதையில் உண்மைத் தன்மையோடு விளங்கி ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் உண்மையாகவே நடந்தது போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகின்றன.

### பாத்திரப்படைப்பு

சிறுகதையில் கதைமாந்தர் படைப்பைச் சுவையுடையவராக அமைப்பது நுட்பமான கலையாகும். பெரிதும் பயிற்சிவாய்ந்த சிறுகதை எழுத்தாளரே இந்நுட்பத்தை அறியமுடியும். சில சமயங்களில் ஒரு சொல்லே படிப்பவர் மனதில் ஒரு பாத்திரத்தைப் படைத்துவிடும். இதற்கு மாறாக ஓர் எழுத்தாளர் ஒரு பாத்திரத்தைப் பல பக்கங்களில் விளக்கினாலும்

அப்பாத்திரம் தெளிவின்றி மங்கலாகவே தோன்றக்கூடும். "புனைகதையின் அடிப்படையே பாத்திரப்படைப்பு ஆகும்."[1] "ஒரு பெரிய படைப்பு எழுதுவதென்பது கதாபாத்திரங்களுடன் சேர்ந்து வாழ்வது என்பதாகும்"[2] என்பார் அலெக்சி டால்ஸ்டாய்.

சிறுகதை எழுத்தாளர் பாத்திரப்படைப்புக்கும் பல செயல்முறைகளை மேற்கொள்வர். ஒரு பாத்திரத்தின் ஏனைய பண்புகளை விடுத்துக் குறிப்பிட்ட ஒரே பண்பின்கண் தம் கவனத்தைச் செலுத்தி விளக்குவர்.

"எழுத்தாளன் பணியிலே மிகவும் தலையாயதும் அரியதுமானதும் பாத்திரப்படைப்புத்தான். இது மிகவும் அரிய பல்வேறு உணர்வுகளும் கலந்த ஒன்றாகும்"[3] என்பார் இலியா ரெனிபர்க். இதனை "சிறுகதைக்கு நிகழ்ச்சிகள் தேவைதாம். ஆனால் நிகழ்ச்சிகளுக்குச் சீவன் அளிப்பது பாத்திரங்கள். பாத்திரங்களின் சொல்லும் செயலுமே நிகழ்ச்சிகளின் காரணங்கள்."[4] எனவே கதையில் நிகழ்ச்சிக்கு அடிப்படையாகப் பாத்திரங்களே விளங்குகின்றன. "சிறந்த புனைகதை என்பது விரும்பத்தக்க பாத்திரங்களின் தொடர்பிலும், சிறப்பான செயலிலும் அமைந்து படைப்பாளனின் சிந்தனையில் தொடர்ந்து அமைவது"[5] என்கிறார் இராபர்ட் லிபிடல்.

புதினத்தைக் காட்டிலும் பாத்திரப்படைப்பில் சிறுகதை வேறுபட்டதாகும். புதினத்தைப் போன்று முழு வாழ்க்கையோ அன்றி வாழ்க்கையின் பிரச்சினையுள் எல்லா அம்சங்களையுமோ சிறுகதை ஆராயாது. வாழ்க்கையின் அடியாகவோ அல்லது பிரச்சினையின் அடியாகவோ தோன்றும். "சிறுகதையில் பாத்திரங்கள் வளர்க்கப் படுவதில்லை; வார்க்கப்படுகின்றன"[6] என்பார் கா.சிவத்தம்பி.

“கதையில் இடம்பெறும் நடிகர் வழக்கமாக மக்களே. எனவே அவர்களைப் பற்றிய ஆராய்வில் மக்கள் என்று தலைப்பிடுவது பொருத்தம்”[7] என்கிறார் இ.எம்.பாஸ்டர். படிப்பவரைத் தன்கண் இரண்டறக் கலக்கும்படியாகச் செய்யும் ஆற்றலுடையதாகச் சிறுகதை இருத்தல் வேண்டும்.

“ஒவ்வொரு கதைக்கும், கருப்பொருளையும் சிறப்பையும், உயிரோட்டத்தையும் கொடுக்கிற ஒன்றுதான் பாத்திரம்”[8] என்று மேரன் எல்வுடு விளக்கம் தருகிறார்.

## பாத்திரங்களின் வகைப்பாடு

சிறுகதைகளில் இடம்பெறும் பாத்திரங்களைப் பால், வயது, பண்பு, வாழ்க்கைமுறை, மதம், அறிவுநிலை, கதை அடிப்படை போன்ற கூறுகளை அடிப்படையாகக் கொண்டு பலவாக வகைப்படுத்துவர். பொதுவாக, பாத்திரங்களை,

1. முதன்மைப் பாத்திரம்
2. துணைமைப்பாத்திரம்
3. எதிர்த்தலைமைப் பாத்திரம்
4. சார்புப் பாத்திரம்

எனப் பாகுபடுத்துவர். இவை ஒவ்வொன்றையும் ஆண், பெண் எனப் பால்பாகுபாடு அடிப்படையில் பகுத்து விளக்குவதன் மூலம் ஆசிரியரின் தனித்தன்மையைக் கண்டறிய இயலும்.

## ஆண் முதன்மைப் பாத்திரம்

முதன்மைப் பாத்திரம் சிறுகதை முழுவதும் நிறைந்து நிற்பதாக இருக்கவேண்டும். அறிமுகப்படுத்தும் நிலையிலிருந்து வளர்ச்சிபெற்று

முழுமைநிலை அடைதல் வேண்டும். அந்த வளர்ச்சியின் வழியே அவர்களது உள்ளம், உணர்ச்சி, சிக்கலை அணுகுகின்ற முறை, தனிப்பட்ட இலட்சியக்கொள்கை போன்றவைகளை அறியமுடியும். தலைமைப் பாத்திரம் என்பது ஒரு குறிப்பிட்ட சிறுகதையில் அரிய பெரிய செயல்களைச் செய்வதாக விளங்கும். அச்செயல்களின் அடிப்படையாக அவர்தம் செயல்திறனும் பண்பு நலனும் பால்வேற்றுமைகளைக் கடந்து படிப்போர் உள்ளத்தில் நிறையும்.

விக்கிரமன் சிறுகதைகளில் ஆண் தலைமைப் பாத்திரங்கள் தியாக வாழ்க்கை, மறவா நட்பு, நட்பிற்கு முக்கியத்துவம் கொடுத்தல், அஞ்சாத காதல், சமுதாயக் கொல்லி, சமுதாய நண்பன், குறிக்கோளுடன் செயல்படல், பிறர் குழந்தையைத் தன் குழந்தையாய் வளர்த்துக் காத்தல், அஃறிணை உயிரிடத்தும் அன்பு காட்டல், தங்கையின் மீதுள்ள அன்பு, அன்பினால் வெல்லல், நேர்மையுடன் செயல்படல், அன்பிற்காகப் போராடல், பயனுள்ள வகையில் செயல்படுதல், மனிதநேயம், சிந்தித்துச் செயல்படல், மதிப்பை விட்டுக்கொடுக்காதிருத்தல், கற்பின் திண்மை, பொருளாதாரச் சிக்கல், சபலப்புத்தியுடையோர், இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல், சிறுபிள்ளையின் அறியாமை, சகிப்புத்தன்மை, பழமையைப் போற்றுதல், குடும்பகௌரவத்திற்காக எதையும் செய்தல், காதலுக்காக எதையும் செய்யத் துடிக்கும் மனப்பாங்கு, நம்பிக்கையுடன் செயல்படுதல், மொழிப்பற்று, துணிந்து செயல்படல், உறவுக்கு மதிப்பளித்தல், தவறுசெய்வதற்கு அஞ்சுதல் என்ற நிலையில் படைக்கப்பட்டுள்ளனர்.

### தியாக வாழ்க்கை

'விளையாட்டுக் கல்யாணம்' சிறுகதையில் முருகன் சிறுவயதிலே சின்னாயியுடன் கல்யாண விளையாட்டு விளையாடுவான். பல வருடங்கள்

கழித்து, சின்னாயியே அவனுக்கு மனைவியாகி ஒரு குழந்தையும் பிறக்கிறது. பொருளாதார நெருக்கடியால் வேலைபார்க்க மலேயா கிளம்பினான். ஐந்து வருடங்களுக்குப் பிறகு மலேயாவை ஜப்பான் தாக்க, வேலையிழந்து வீட்டிற்குக் கடிதப்போக்கே இல்லாமல் இருந்துவிடுகிறான்.

மனைவி மக்களைக் காணத் துடிக்கும் நெஞ்சோடு கால்நடைப் பயணமாக ரங்கூனை அடைந்து இலவச ரயிலேறி ஊரை அடைகிறான். சின்னாயியைத் தேடிச் செல்லும்போது அவள் கந்தன் என்பவனுடன் குடிசையில் பிள்ளைகளோடு மகிழ்ச்சியாய் இருப்பதைப் பார்த்து மனம் உடைகிறான். இதனை "அஞ்சலையாரே காத்தாயிதேவியே' முன்பு விளையாட்டுக் கல்யாணத்தில் இருவரை சின்னாயி மணவாளனாக அடைந்தாள். இந்த வாழ்க்கை விளையாட்டிலும் இருவரோடு வாழ்க்கை நடத்துகிறாள். முதலில் என்னுடன், பிறகு இவனுடன். இது என்ன உலகமா? இருள் சூழ்ந்த நரகமா?..."[9] என்பதன் மூலம் புலப்படுத்துகிறார்.

தன் மனைவி இன்னொருவருடன் வாழ்வதையறிந்து கோபப்பட்டு அவர்களிடையே பிரச்சினையை ஏற்படுத்தாமல் அவர்கள் மகிழ்ச்சியாக வாழட்டும் என்று ஒதுங்கி அதைப் பொறுக்காது ஆற்றில் குதித்து, தன்னை மாய்த்துக்கொள்ளும் பாத்திரமாக முருகனைக் காட்டியுள்ளார்.

**மறவா நட்பு**

உயிர் நண்பனாக சங்கரனால் நேசிக்கப்பட்ட மனோகரன் மாவட்ட ஆட்சியர் தேர்வில் தேர்ச்சிபெறுகிறான். பதவி ஏற்கும் தகுதிபெற்றதும் சங்கரனை அறியாதவன்போல உதறித் தள்ளுகிற மனமாறுதலை "நண்பா... ஐ.ஸி.எஸ் போய்வந்தால்... பிரயோசனம் நட்பை மறத்தல்... என்ன உலகம் நண்பா மறந்துவிட்டாயா?"[10] என்பதிலிருந்து சங்கரன் மூலம் நட்பின்

ஆழத்தையும் நண்பனின் போக்கையும் அறியமுடிகிறது. நட்பை மறத்தல் நல்ல பண்பல்ல என்பதையும் சங்கரன் மூலம் எடுத்துக்காட்டியுள்ளார்.

**நட்பிற்கு முக்கியத்துவம் கொடுத்தல்**

'புத்துயிர்' சிறுகதையில் நல்லூர்ப் பண்ணையார் பாஸ்கர முதலியாருடைய புதல்வன். பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவர். அவ்வூர் தங்கத்துக்கும் ரகுராமனுக்கும் காதல் மலர்கிறது. அச்சமயத்தில் அரசுவேலை கிடைத்து மாற்றலாகிச் சென்னைக்கு வந்துவிடுகிறான் ரகுராமன். தங்கத்தைப் பொறியாளர் ஒருவருக்குத் திருமணம் செய்துகொடுத்து அவளும் சென்னையில் இருக்கிறாள். எதிர்பாராதவிதமாக அவள் கணவனைப் பார்க்கச் செல்லுமிடத்தில் தங்கத்தைக் கண்டு அதிர்ச்சி அடைகிறான் ரகுராமன்.

தங்கத்திடம், "தங்கம்! நீ கூறிய ஒவ்வொரு வார்த்தையும் உண்மை, நீ என்று உரிமையுடன் சொல்கிறேன். என்ன நினைக்கிறீர்களோ அதையேதான் நானும் நினைக்கிறேன். என் கதை ஒன்றும் சுவை இல்லை. உன்னை அடையமுடியாது போன பிறகு கோவைக் கல்லூரியில் சேர்ந்தேன். அரசாங்க அலுவலை அள்ளித் தலைமேல் போட்டுக்கொண்டு ஊர் ஊராய்ச் சுற்றுகிறேனே அதுதான் கதை"[11] என்று தன் நிலையை எடுத்துக்கூறுகின்றான் ரகுராமன். அவர்கள் மனதில் களங்கம் கிடையாது. காதல் நிறைவேறாமல் போனாலும் புத்துயிர் பெற்ற பழைய நட்பை எண்ணி மகிழ்ச்சியடைதலை இச்சிறுகதைமூலம் எடுத்துக்காட்டியுள்ளார்.

**அஞ்சாத காதல்**

'காய்ந்த மல்லிகை' சிறுகதை மூலம் மணி - மல்லிகா காதல் மலர்கிறது. மணி பள்ளிப்படிப்பை முடித்து மல்லிகா வீட்டில்

வேலைசெய்கிறான். தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவளாக மல்லிகா இருந்தாலும் அவளை விரும்பிய மணிக்குச் சாதி ஒரு தடையாகத் தெரியவில்லை.

சில மாதங்களிலேயே மணி, சென்னைக்குச் சென்று படிக்கும் வாய்ப்புக் கிடைத்ததால் வெளியூர் சென்றுவிடுகிறான். அச்சமயத்தில் மல்லிகாவை அவள் மாமா திருமணம் செய்துகொள்கிறான். இச்செய்தியை மல்லிகாவின் மூலம் மணி அறிந்து ஊர் திரும்புகிறார். மல்லிகா பவனத்தில் மல்லிகைப் பூவிதழ்கள் மட்டுமே கிடந்தன. மல்லிகாவின் வாழ்வை எண்ணி மனம் வருந்தியவனுக்கு "இனி ஏதாவதுதொரு வேலைக்குப் போய்ச் சம்பாதித்தால் உண்டு... என்று ஏதோ பேசிக்கொண்டே வந்தார். ஆனால் என் மனம் மல்லிகை பவனத்தின் மாடியின்மேல் நின்றுகொண்டிருப்பவர் மீதும், அவர்பின்னால் நின்றுகொண்டிருப்பவர் மீதும்தான் சென்றது"[12] என்பதன் மூலம் மணியின் காதல் புலப்படும்.

இதேபோல் வேலைக்குப் போகும் நிலையிலும் காதலியைக் கைவிடாத பாத்திரம் சின்னக்கவுண்டன் பாத்திரம். காதலால் பல வசதிகளைத் துறப்பதில் அரசனும், ஆண்டியும் ஒன்றே என்கிற உயர்ந்த தத்துவத்தைப் 'பொல்லாத மனசு' கதையில் ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். "வேலை போச்சு ஊரில் ஏக்கம் அதிகமாச்சு. ஆனால் இந்தப் பொல்லாத மனசு மாறவில்லை நாகலிங்கப் பூவைப் பறித்து அவளுக்கு எப்படியாவது அளிக்கத் தவறுவதில்லை"[13] என்பது உணர்த்தும்.

காதல், சமூக வேற்றுமையையோ, தாழ்வு உயர்வையோ இலட்சியம் செய்வதில்லை; சாதியையும் ஒரு தடையாகக் கருதுவதில்லை என்பதற்கு எடுத்துக்காட்டாக மணி பாத்திரத்தையும், காதலின் ஆழத்தையும், காதலுக்காக எதையும் இழக்கத் துடிக்கும் நெஞ்சம் கொண்ட பாத்திரமாக சின்னக்கவுண்டரையும் படைத்துக் காட்டியுள்ளார் விக்கிரமன்.

## சமுதாயக் கொல்லி

'குடி குடியைக் கெடுக்கும்' என்பது பழமொழி. சமுதாயத்தைச் சீர்கேடுக்கு உள்ளாக்கும் நோயாகக் குடிப்பழக்கம் விளங்குகிறது. வாணக்காரன் கதையில் விநாயகம், நான் இனிக் குடிக்கமாட்டேன் என்று செய்துகொடுத்த சபதத்தை மீறினபோது "அய்யோ, சபதத்தை மீறினேனே; என் பிள்ளை எனக்கு உதவாமல் போய்விட்டானே' என்று அலறினான் அவன். அவ்வளவுதான் மாணிக்கத்தை அணைத்துக்கொண்டு மயங்கிக் கீழே சாய்ந்தான்"[14] என்பதன் மூலம் உணர்த்துவார். குடியினால் ஓர் உயிரை இழந்த நிலையையும் குடிப்பழக்கம் சமுதாயத்தைக் கெடுக்கும் சமுதாயக் கொல்லியாக விளங்குதலையும் சமுதாயத்திற்குக் காட்டும் வகையில் இப்பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

## சமுதாய நண்பன்

கஸ்தூரி ஓர் இளைஞன். அவன் ஓர் இளம் பெண்ணிடம் அன்புடன் பழகுகிறான். அது மற்றவர்களால் தவறாகப் புரிந்துகொள்ளப்படுகிறது. ஆனால் கஸ்தூரிக்கும் அந்தப் பெண்ணுக்கும் இடையே நிலவுவது சகோதர, சகோதரிப் பாசமே. 'கஸ்தூரியின் கடிதம்' என்ற சிறுகதையில் கஸ்தூரி சமுதாயத்திற்கு நன்மை பயக்கும் விதமாக உழைக்கும் மக்களுக்குச் சரியான ஊதியம் பெற்றுத்தர மாவட்ட ஆட்சியரிடம் போராடுகிறான். "நீங்களே சொல்லுங்கள் அக்கா? உலகமே சம்பள உயர்வு பஞ்சப்படி கேட்கும்போது குடியானவர்கள் கேட்பதில் என்ன தப்பு? இருக்கட்டும். இன்னும் ஒருவாரத்தில் நிலைமை சரியாகிவிடும் என்று நம்புகிறேன். உள்ளூர் ஆளில்லாமல் அறுவடை எப்படி முடியும் பார்க்கலாம், வேறு ஊர் ஆள் காலை வைக்கமுடியுமா?"[15] என்பதன் மூலம் சமுதாயத்தில் கஸ்தூரிக்கு உள்ள அக்கறை புலப்படும். இளைஞர் எழுச்சிப் போராட்டம் எதையும் வெல்லும் என்பதை இப்பாத்திரத்தின் வழிப் புலப்படுத்துகிறார்.

## குறிக்கோளுடன் செயல்படல்

சிங்காரியின் கணவன் சுந்தரமூர்த்தி ஓரிடத்தில் வேலை செய்துவந்தான். ஒருநாள் பொறுப்பாளரிடம் கோபித்துக்கொண்டு வேலைக்குச் செல்லாமல் இருந்துவிடுகிறான். மாமனாரோ கண்டிப்புப் பேர்வழி. "இதெல்லாம் நல்லா இல்லை! கல்யாணம் கட்டியாச்சு நாலு காசு சம்பாதிக்க யோக்யதை இல்லைன்னா ஊர்லேதான் மதிப்பார்களா"[16] என்று கத்தினார். இச்செய்தியைக் கேட்ட சுந்தரமூர்த்தி யாரிடமும் சொல்லாமல் வெளியூர் சென்று வேலைதேடிப் பொருள் ஈட்டுகிறான். ஒருமாதமாகத் தன் மனைவிக்குக்கூடக் கடிதம் எழுதாமல் பிறகு பணம் அனுப்புகிறான். கடிதமும் எழுதி மனைவியை மகிழ்விக்கிறான்.

வாழ்க்கையில் முன்னேறவேண்டும் என்ற குறிக்கோள் இருந்தால் அதற்காக எவ்வளவு துன்பங்களையும் எதிர்கொள்ளும் உறுதியும் மனவலிமையும் கொண்ட பாத்திரத்திற்குச் சுந்தரமூர்த்தி எடுத்துக்காட்டாகும். 'செவ்வந்திப்பூ சிங்காரி' கதையில் வரும் இம் முதன்மைப் பாத்திரம் மனதில் நிற்கும் பாத்திரமாக விளங்குகிறது.

## பிறர் குழந்தையைத் தன் குழந்தையாய் வளர்த்துக்காத்தல்

'அன்பும், ஆசையும்' சிறுகதையில் அனந்து குழந்தை இல்லாது மனைவியுடன் குடும்பம் நடத்திவருகிறான். அனந்துவிடம் 'சந்துரு' என்ற குழந்தை அடைக்கலமாகிறது. சந்தர்ப்ப சூழ்நிலையால் தன்னிடம் வந்த குழந்தையைத் தான் பெற்ற குழந்தையாய் எண்ணி மகிழும் அவன் மனநிலையை "என் மகனா? என்மகன்தான் ராஜா. இவன் எங்கள் வயிற்றில் பிறக்காவிடினும் எங்கள் மகனாகவே தான் இவனைப் பாவிக்கிறோம். மனைவியும் பெற்ற பிள்ளையாகவே அன்பு பாராட்டுகிறாள். குழந்தை

இல்லாக் குறைக்குக் குழந்தையாகவும், அன்பின் ஆட்சிக்கு அன்புக்குரியவனாகவும் இருக்கிறாண்டா... இவன்"[17] என்றான் அனந்து.

குழந்தை இல்லாநிலையில் பிறர் குழந்தையையும் தன் குழந்தையாக ஏற்கும் மனநிலையையும், பணத்திற்காக அக்குழந்தையை ஏற்காது இயற்கையான அன்புடன் அக்குழந்தையை மகன்போல் ஏற்கும் மனப்பக்குவத்தையும் இப்பாத்திரத்தால் உணரமுடிகிறது.

**அஃறிணை உயிரிடத்தும் அன்புகாட்டல்**

காளையை அடக்கி வெற்றிகண்ட கந்தப்பனுக்குச் சிங்காரவேலுவின் மகளும் பரிசாகக் கிடைத்தாள். மனைவியின்மேல் உள்ள பாசத்தைக் காட்டிலும் அந்தக் காளையின்மீது உயிரையே வைத்திருந்தான். எந்தத் தொழிலும் அவனுக்குப் பிடிக்கவில்லை. ஒற்றை மாட்டுவண்டி செய்து காளையைக் கட்டி அதனை ஓட்டுவதில்தான் அவன் மனம் ஈடுபட்டது. அந்தக் காளையை வைத்துத் தன் பிழைப்பை நடத்தலானான். மனிதரிடம் காட்டும் பரிவைவிடக் காளையிடம் கந்தப்பன் காட்டிய அன்பினை "வினாடிக்கு வினாடி தீ அதிகமாகிக்கொண்டே வந்துவிட்டது. கந்தப்பன் காளையின் இருப்பிடத்தைப் பிடித்துவிட்டான். அப்பொழுதிலிருந்த வேகத்தில் பலமாகத் தும்பை இழுத்தறுத்து, காளையையும் இழுத்துக்கொண்டு வெளியே வந்துவிட்டான்"[18] என்பதிலிருந்து அறிய இயலும்.

தன் உயிரையும் பணயம்வைத்து, தன் கண்ணைப் போன்ற முக்கியமான தன் காளையைக் காப்பாற்றிய மனத் திடத்தையும் அஃறிணை உயிர்களையும் தன் உயிர்போல் காக்கும் பண்பையும் கந்தப்பன் பாத்திரம் மூலம் காணமுடிகிறது.

கருணாகரன் பணத்திற்கு ஆசைப்படாத மாமனிதர். பள்ளிப்படிப்பு முதல் பலவற்றிற்கும் உதவுபவர். இத்தகு மனம்படைத்தவர் தன் வீட்டில் வளரும் பூனைகளை வேலைக்கார மூர்த்தியிடம் ஒப்படைக்கிறார். அப்போது ஒருநாள் வெள்ளம்வந்தது. மூர்த்தியின் கூரைவீட்டிலிருக்கும் பூனைகளின் நிலையை அறியாது மனம் பதறினார். பூனைகளை வெறுத்து ஒதுக்கினாலும் அவரது மனம் மூர்த்தி வீட்டிலிருக்கும் பூனைகள் மீதே இருந்தது. மறுநாள் காலை மூர்த்தியிடம் விசாரிக்கிறார். பூனைகள் பத்திரமாக உள்ளன என்றவுடன் தான் பெற்ற சால்வையை மூர்த்திக்கு எடுத்துப் போர்த்திப் பாராட்டுகிறார் கருணாகரன். "நீதான் மனிதநேயம் மிக்க மாமனிதன்! என்று கூறி அன்புடன் அணைத்து, இந்த விருதும் மாலையும் உனக்குத்தான்"[19] என்று மூர்த்தியைப் பாராட்டுகிறார்.

இவ்வாறு எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் அருட்குணத்திற்கு எடுத்துக்காட்டாக 'கருணாகரன்' பாத்திரத்தை மனிதநேயம் கதை மூலம் புலப்படுத்தியுள்ளார் விக்கிரமன்.

## தங்கையின் மீதுள்ள அன்பு

'மீண்ட நாதம்' சிறுகதையில் தங்கை காஞ்சனா மீது உயிரையே வைத்திருக்கிறான் கேசவமூர்த்தி. அவளுக்குத் திருமணம் முடித்து பிரசவ வேளையில் உயிர் இழக்கிறாள். தங்கை வீணை வாசிப்பதைக் கேட்டு மகிழ்ந்தவன், அவளின் மறைவுக்குப் பின்னர் வீணை இசையையே கேட்க விரும்பாதவனாகிவிடுகிறான். இதனை "கேசவமூர்த்திக்கு மனசே சரியாயில்லை. அவன் எண்ணங்கள் பின்னுக்குச் சென்றன. தனக்குச் சங்கீதமே பிடிக்காது என்றல்லவா ஆகிவிட்டது? ஒரு காலத்தில் எவ்வளவு ஈடுபாடு இருந்தது. அதுவும் வீணையின் இனிய நாதத்தில் அமிழ்ந்து நேரம் போவதே தெரியாமல் அதன் மோக லாகிரியில் சுழன்று கொண்டிருந்தோம்

என எண்ணும்போது அவனுக்குத் துக்கம் துக்கமாக வந்தது"[20] என்பது உணர்த்தும்.

### அன்பினால் வெல்லல்

பேருந்தில் நடத்துநர் தொழில்செய்து வந்த ஜோதிமுத்து பாரிஜாதத்தை விரும்புகிறான். அவளுக்குத் தெரியாமல் திருட்டுத்தொழிலும் செய்துவருகிறான். 'பலநாள் திருடன் ஒருநாள் அகப்படுவான்' என்ற பழமொழிக்கேற்ப ஒருநாள் பிடிபட்டுச் சிறையில் அடைக்கப்படுகிறான். அதனால் மனம் வெறுத்தவள், அவன் விடுதலைபெற்று வீடுவரும்போது விஷம் குடிக்கத் தலைப்படுகிறாள். அதனைப் பார்த்து அவள் அறியாநேரத்தில் அதைக் கொட்டிவிட்டு "இப்படியெல்லாம் அசட்டுத்தனமான காரியம் செய்யலாமா? அதோபார் மூலையை என்று காட்டினான். நீலம் பூத்த காபி மூலையிலே தேங்கிநின்றது"[21] என்பதன் மூலம் அவள் உயிரைக் காத்ததோடு தானும் இனிமேல் திருட்டுத்தொழில் செய்வதில்லை எனக் கூறினான்.

எந்தத் தவறையும் அன்பினால் திருத்த இயலும் என்பதற்கு எடுத்துக்காட்டாக இப்பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

### நேர்மையுடன் செயல்படல்

பாலத்தைக் காவல்செய்யும் பரமசிவம் தன் தொழிலில் மிகவும் நேர்மையாக நடந்துகொள்கிறான். அவனுக்கு இரு பிள்ளைகள். மூத்தவன் கண்ணாயிரம் தன் விருப்பப்படிச் செலவுசெய்து தந்தையின் பெயரால் கடன் பெற்றும் சொத்தில் பங்குகேட்டும் தொல்லைகள் கொடுக்கிறான். அதனால் பரமசிவம் அவனை வீட்டைவிட்டுத் துரத்துகிறார். ஒருநாள் சதிவேலையில் ஈடுபட்ட தன் மகனைத் துப்பாக்கியால் சுட்டு, காவல்துறையிடம்

ஒப்படைத்துவிடுகிறார். இதனை, "உங்களுக்கும் கோழைமனம் இருக்கிறது எனத் தெரிந்துவிட்டது. மகன் உண்மையில் குற்றம் செய்திருக்கும்போது அதை ஒப்புக்கொண்டு கடைசிவரையில் நிரூபிக்கத் தயாராயிருந்த உங்களுக்கு நாட்டுமக்களின் மீதிருந்த பக்தியையும் கடமையையும் உணர்ந்து கொண்டேன்"[22] என்றார் காவல்துறை அதிகாரி.

'நேர்மைக்குப் பரிசு' என்னும் சிறுகதையில் ரிக்ஷாக்காரனாகத் தொழில்புரியும் சோமு, இயல்பாகவே நேர்மையானவன். ரிக்ஷாக் கடனைத் தவணைமுறையில் தவறாமல் செலுத்துபவன். மனைவியின் பேறுகாலச் செலவிற்குப் பணம் இல்லாது அலையும்போது தவறான வழியில் கிடைத்த பணத்தை அவனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அப்பாவித்தனமாக நேர்மையான வழியில் செயல்படுகிறான். அவனை அறியாமலேயே புகழும் பணமும் வந்து சேர்கிறது. "குற்றவாளியைப் பிடித்ததால் சோமுவுக்கு ஆயிரம் ரூபாய் வெகுமதி! போதைப்பொருளை உரியவரிடம் கொடுத்து இரண்டாயிரம் பெறுவதைவிட, குற்றவாளியைப் பிடித்துக் கொடுத்தது மிக மகிழ்ச்சி"[23] என்பதால் சோமுவின் நேர்மை தெரிகிறது.

'பாலக்காவல்' சிறுகதையில் குற்றம்புரிந்தவன் மகனே ஆயினும் பரிவும் இரக்கமும் காட்டாமல் தொழிலில் நேர்மையைக் கடைப்பிடிக்கும் பாத்திரமாகப் பரமசிவம் விளங்குகிறார். நேர்மைக்குணம் புகழையும், பொருளையும் தரும் என்னும் கருத்து சோமு பாத்திரத்தின் மூலம் உணர்த்தப்பட்டுள்ளது.

**அன்பிற்காகப் போராடல்**

'இன்பத்தின் விலை' சிறுகதையில் வேதாச்சலம் தான் விரும்பும் வேலைக்காரப் பெண் மரகதத்திற்கு அன்பின் அடையாளப் பரிசாக ஒரு

பட்டுச்சட்டையைத் தைத்துக் கொடுக்கிறான். அதேபோல் பட்டுச்சட்டையைக் காணவில்லை என முதலாளியம்மாள் மரகதத்தின்மீது பழி கூறுகிறார். வேதாச்சலம் காவல்துறையால் விசாரிக்கப்படுகிறான். இந்நிகழ்ச்சியால் தான்விரும்பும் மரகதம் என்னநினைப்பாள் என மனம் வெதும்புகிறான். காவல்துறை அதிகாரியிடம் "தையற்காரர் ஏழை என்றால் திருடித்தான் அவன் இன்பத்துக்கு விலையாக்கிக் கொள்ள வேண்டும் என்பதில்லை. என் சொந்தப் பணம் போட்டு வாங்கினேன்"[24] என வாதாடுகிறான்.

ஓர் ஏழையால் அன்பிற்குப் பரிசாக விலைமதிக்க முடியாத பொருளையும் வாங்கமுடியும் என்ற மன நிலையைக் காட்டியதோடு, தன் அன்புக்குரிய ஒருவர்மீது பழி ஏற்படுகின்ற போது அதனைத் துடைக்கப் போராடவேண்டும் என்பதையும் இப்பாத்திரம் உணர்த்துகிறது.

**பயனுள்ள வகையில் செயல்படுதல்**

பொன்னையா ஓர் அற்புத நடிகர். சந்திரமதி வேடத்தில் அவருடைய நடிப்பு பார்ப்போர் இதயங்களை முற்றிலும் கவர்ந்து சந்திரமதியே நேரில் நிற்பதுபோன்ற உருவெளித் தோற்றத்தை ஏற்படுத்தும். தேவானை பொன்னையாவைக் காதலிக்கிறாள். ஆனால் பொன்னையாவோ தன் தொழில்மேல் மட்டும் கவனம் செலுத்தி, வேறு எந்தச் சிந்தனையும் இல்லாமல் இருக்கிறான். இதனை "தேவானை பொன்னையா மேல் உயிரையே வைத்திருந்தாள். ஆனால் பொன்னையா இதையெல்லாம் லட்சியம் செய்பவராகத் தோன்றவில்லை. அவருண்டு நாடகம் உண்டு. அன்றைய நாடகத்தில் இன்னும் எப்படியெல்லாம் நடிக்கலாம். பொதுமக்களை நாடகம் மூலம் எப்படி நல்வழிக்குக் கொண்டுவரலாம்

என்பதையே யோசித்துக்கொண்டிருப்பார்”[25] என்பது உணர்த்தும். இச் சிறுகதையில் தொழில்மீது ஈடுபாடுகொண்ட பாத்திரமாகப் பொன்னையா திகழ்கிறார்.

ஒருவர் செய்யும் தொழில் பிறருக்குப் பயனுள்ளதாக இருக்கவேண்டும் என்பதை ‘சந்திரமதி பொன்னையா’ சிறுகதையில் பொன்னையா பாத்திரம் உணர்த்துகிறது.

**மனித நேயம்**

விக்கிரமனின் சிறுகதையில் மனிதநேயத்தை வெளிப்படுத்தும் பாத்திரமாக பொன்னுச்சாமி, வேலு, சங்கரன், பதி போன்றோர் திகழ்கின்றனர்.

ஓட்டுநர் பொன்னுச்சாமி சற்றும் எதிர்பாராமல் சாலையின் குறுக்கே பாய்ந்துவிட்ட, ஐந்துவயது சிறுமியைத் தனது முழுத் திறனையும் பயன்படுத்திச் சிறிய காயத்துடன் காப்பாற்றிவிடுகிறான். ஆயினும் குழந்தை அழுதுகொண்டே வீடு செல்கிறது. குழந்தை விடாமல் அழுததற்குக் காரணம் காருக்கடியில் உடைந்துகிடந்த பொம்மை என உணர்கிறான். உடனே தன் கையிலிருந்த பணத்தைக்கொண்டு ஒரு புதிய பொம்மையை வாங்கி அடிபட்ட குழந்தையின் வீட்டிற்குச் சென்று கொடுக்கிறான். அப்பொழுது “தயக்கத்தோடும் அதே சமயம் மலர்ந்த முகத்துடனும் பெற்ற அக்குழந்தையின் பிஞ்சு நெஞ்சத்திலே புதைந்திருக்கும் பெரும் தாய்மை உணர்ச்சி அவனுக்கு விளங்காமல் போகவில்லை”[26] என்பதன் மூலம் குழந்தையின் மன இயல்பை மனித நேயத்தோடு புரிந்து செயல்படும் பாத்திரமாகப் பொன்னுச்சாமியை ‘பிஞ்சு நெஞ்சம்’ கதையில் படைத்திருப்பது விளங்கும்.

'வேலு' சிறுகதையில் எல்லா நேரங்களிலும் கொடியவனாகவே இருந்த வேலு, அண்ணியானவள் அண்ணனைக் காப்பாற்ற உருகி வேண்டிநின்றபோது தன் சொத்தில் பங்குதான் முக்கியம் என வாதாடினாலும் இறுதியில் மனம் திருந்தி "மரியாதைக்குரிய அண்ணி' கொடியவன் என்று என்னை இனி அழைக்கமாட்டீர்கள். உங்கள் மாங்கல்யத்தைக் காப்பாற்றிவிட்டேன். எதற்கும் உதவாதவன், இந்தக் குடும்பத்தை அழித்தவன் என்ற அவப்பெயர் இனி எனக்கு இருக்காதல்லவா? என்னைத் தேடாதீர்கள், குடும்பத்திலிருந்து என் பங்கை விட்டுக்கொடுக்கும் விடுதலைப் பத்திரம் இதோ, வருகிறேன்"[27] எனக் கூறுவதன் மூலம் மனிதநேயப் பண்பைக் காட்டியுள்ளார். இதில் சொத்திற்கு ஆசைப்பட்டுக் கொடியவனாக 'வேலு' திகழ்ந்தாலும் அண்ணன் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தால் மனிதநேயப் பண்புடையவனாகத் திகழ்கிறான்.

குமாஸ்தா வேலைபார்க்கும் பதிக்கு அலுவலகத்தில் சம்பளம் குறைவு. மிகவும் சிக்கனமானவர். தான் திருமணமே செய்துகொள்ளாமல் உடல்நிலை சரியில்லாத அண்ணன் மனைவியையும், குழந்தைகளையும் காப்பாற்றிவருகிறார். அலுவலகத்தில் அவரைப் பலரும் பலவிதமாகக் கேலிசெய்தாலும் அதைப் பற்றிக் கவலைப்படாது அரைவயிறு உண்டு, தன் அண்ணனின் பிள்ளைகளைக் காப்பாற்றுவதை "கமலம்! கண்ணு தூங்கிவிட்டாளா? அவ முகத்தைப் பார்க்கவாவது நாராயணன் வரமாட்டானா என்றுதான் தினந்தோறும் எதிர்பார்க்கிறேன். கடவுள் கண்திறப்பார்"[28] எனறு பதி தழுதழுத்த குரலில் கூறினார்.

இவ்வாறு ஆதரவற்ற அண்ணன் குழந்தைகளுக்காகத் தன்னையே அர்ப்பணிக்கும் மனிதநேயப் பண்பு கொண்ட பாத்திரமாக 'அரைவயிறு' சிறுகதையில் பதி பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

**சிந்தித்துச் செயல்படல்**

'குழலோசை' சிறுகதையில் அழகுசாமியின் மகன் குமாரவேலு முதன்மைப் பாத்திரமாவான். இவன் குழலூதுவதில் சிறுவயது முதலே பிரியம்கொண்டவன். சிறந்த குழலாசிரியரிடம் முறையாகக் கலைபயின்றான். இவன் குழலூத மல்லிகா நடனமாடினாள். குமாரவேலுவின் எண்ணம் முழுவதும் கலையில்தான். தன் தந்தை இறக்கவே மல்லிகா ஆறுதல்கூறி, தன்னோடு வந்து தங்குமாறு வேண்டுகிறாள். ஆனால் குமாரவேலு விரைவில் திருமணம் செய்துகொண்டு சேர்ந்து வாழ்வதாகக் கூறுகிறான். பின் மல்லிகாவின் ஆடம்பரப் பேச்சால் ஒதுங்கிய குமாரவேலு "கலையின் பெயரால் நீ உன் சொந்தப் புத்தியை இழந்தாய். உன் குரு உனக்கு இட்ட கட்டளையை மறந்தாய். இப்பொழுதாவது மாற்றிக்கொள். ஆடம்பரம் அகப்புனிதத்தை வளர்க்காது"[29] என்கிறான்.

இதேபோல் 'கல் நெஞ்சம்' சிறுகதையில் காதலைக் கண்ட இடத்தில் எல்லாம் குறுக்கிட்டு வெறுத்தாலும் மனம் மாறும் தன்மை கொண்டவராகத் திகழ்பவர் பாஸ்கரராவ். தாயில்லாத தன் மகளுக்குத் தாயாக இருந்து பாசத்தைக் கொட்டி வளர்த்தார். தன் மகள், முத்தையன் என்பவன்மேல் காதல் கொண்டதையறிந்து அவனைத் தீர்த்துக்கட்ட எண்ணி மகளுக்குத் தெரியாமல் விபத்தை ஏற்படுத்தி முத்தையன் இறந்துவிட்டான் எனப் பொய்சொல்கிறார். அவர் மனம் பொய்கூறிப் பின் வருந்துகிறது. தமக்கே இப்படி இருந்தால் உண்மையாகக் காதலிக்கும் மகளுக்கு எப்படியிருக்கும் எனத் தன் மனதை மாற்றி இருவரையும் சேர்த்துவைக்கிறார். இதனை,

"முத்தையா! உண்மையில் நீ விபத்தில் அகப்பட்டுக்கொள்ளவில்லையா? பிழைத்தேன் என்று கூறி அவனை அணைத்துக்கொண்டார். அந்தக் கல்நெஞ்சனின் திடீர் மாறுதல் பற்றி எதுவும் பிரியதர்சினிக்குப் புரியவில்லை. அதற்கும் மேலாக அவர்கள் திகைத்துத் திக்குமுக்காடும் வகையில் ஒரு காரியம் நடந்தது. கல்யாணக் கடிதம் அச்சிடக் கொடுக்கப்பட்டது"[30] என்பது உணர்த்தும்.

'அழகின் நிறம்' சிறுகதையில் குமாரசாமி தன் வீட்டில் குடியிருக்கும் சந்துருவிடம் இயல்பாகப் பழகுகிறான். மனைவி ஞானமும் பழகுகிறாள். ஆனால் சந்துருவின் எண்ணமும், பழகும் விதமும் வேறுமாதிரிப் படுவதைக் குமாரசாமியும், ஞானமும் அறியவில்லை. ஞானத்திற்கு ஒருநாள் சந்துரு இனிப்பை ஊட்டும்போது குமாரசாமி பார்த்துவிட்டு மனைவியின்மீது சந்தேகம் கொண்டு வீட்டைவிட்டுப் போய்விடுகிறார். ஆனால் ஞானம் சந்துருவின் எண்ணத்தை அறிந்து அவனை வீட்டைவிட்டு விரட்டுகிறாள். இறுதியில் மனைவியின் நல்லெண்ணத்தை அறிந்து குமாரசாமி திரும்ப வருகிறார்.

"'ஞானம்' என்று மெல்ல அழைத்தார் குமாரசாமி. அவரை அடையாளம் தெரிந்துகொள்ள அவள் தினறினாள். நான்தான் ஞானம் என்று குமாரசாமி போர்த்தியிருந்த போர்வையை விலக்கினார். 'நீங்களா? என்று கூவிய ஞானம் கண்ணீர்பெருக அவர் காலடியில் சாய்ந்தார்"[31] என்பதன் மூலம் சிந்தியாமல் செயல்பட்டு, குடும்பத்தை விட்டுப் பிரிந்த குமாரசாமி சிந்தித்து இறுதியில் மனைவியை அடையும் நிலையை இப்பாத்திரத்தால் அறியமுடிகிறது. ஆடம்பர வாழ்க்கை அழிவையே ஏற்படுத்தும் என்பதை உணர்ந்து செயல்படும் பாத்திரமாகவும் குமாரவேலு விளங்குகிறார்.

இவ்வாறு பாஸ்கரராவும் குமாரசாமியும் சிந்தித்துச் செயல்படும் பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

## மதிப்பை விட்டுக்கொடுக்காதிருத்தல்

முப்பது ரூபாய்ச் சம்பளத்தில் ஓவிய ஆசிரியனாகப் பணியாற்றும் கேசவனுக்கு நான்கு குழந்தைகளும் மனைவியும் இருக்கின்றனர். குடும்பத்தில் வறுமையின் காரணமாகச் சண்டை ஏற்படுகிறது. அடிக்கடி குழந்தைக்கும் உடல்நலமில்லாது போகிறது. பணம் இல்லாது மருத்துவரிடம் கொடுக்கவேண்டிய தொகையில் பாக்கிவைத்து வருகிறான் கேசவன். மறுபடியும் குழந்தையைக் காண்பிக்கச் செல்லும்போது, நாங்கள் உங்கள் வேலைக்காரனா? என்று சொல்லி பணம்கேட்டு அனுப்பிவிடுகிறார் மருத்துவர். அதே சமயம் அவர் வரலெட்சுமி நோன்பிற்குப் படம்வரைய அழைத்துவரச் சொல்லிக் கார் அனுப்புகிறார். கேசவன், நாங்கள் உங்கள் வேலைக்காரனில்லை என்று திருப்பி அனுப்பி செல்லத்திடம், "அவருக்குத்தான் கௌரவம். நமக்குக் கௌரவம் இல்லையா? என்று படபடக்கிறான்."[32] இவ்வாறு வறுமையிலும் தன் மதிப்பை விட்டுக்கொடுக்காத பாத்திரமாகக் கேசவன் படைக்கப்பட்டுள்ளான்.

## கற்பின் திண்மை

குமார் பொருளாதார நிலையில் மேலே வர ஆசைப்படுபவன். அவனை சீதா, கல்யாணி, சாந்தா மூவரும் விரும்புகின்றனர். ஆனால் குமார் யாரையும் விரும்பாது தொழில்புரிய வடநாடு சென்றுவிடுகிறான். சீதாவும், கல்யாணியும் வேறுவேறு கணவர்களை அடைகின்றனர். ஆனால் சாந்தா மட்டும் குமாரையே நினைத்துக் காத்திருக்கிறாள். பல கடிதங்கள் குமாருக்கு எழுதுகிறாள். குமார் வடநாட்டிலிருந்து திரும்பியதும், அவளுடைய கடிதங்களை அவளிடமே ஒப்படைத்துவிட்டு வரச்சொல்கிறான்.

அப்பொழுது சாந்தா மன அழகால், குமாரை வென்றுவிடுகிறாள். இதனை, "யாரும் எதிர்பாராத விதமாக குமார் அவள் கரங்களைப் பிடித்துத் தன் கண்களில் ஒத்திக்கொண்டு சாந்தா! நீ பல ஆண்டுகளுக்கு முன்பு ஒன்று கூறினாயே தெரியுமா? உறுதி இருந்தால் கற்பு எனப்படுவது கனலையும் வெல்லும் என்ற நீ, தீயையும் வென்றுவிட்டாய்"[33] என்பது உணர்த்தும்.

இவ்வாறு 'கற்பெனும் கனல்' என்ற சிறுகதையில் கற்பின் திண்மையால் சொன்ன சொல்லைக் காத்துக் காதலில் மனஉறுதியுடைய பாத்திரமாகச் சாந்தா படைக்கப்பட்டுள்ளாள்.

### பொருளாதாரச் சிக்கல்

'ஓவர்டைம்' சிறுகதையில் அனந்து ஓர் அலுவலகத்தில் பணிபுரிந்துவருகிறான். அவன் மனைவி மற்றொரு அலுவலகத்தில் பணிபுரிகிறாள். அனந்து தாம் சம்பாதிக்கும் பணம் முழுவதையும் சீட்டு ஆட்டத்தில் தோற்றுவிட்டு, வீட்டுச் செலவிற்குப் பணம் இல்லாது பிட்பாக்கெட் அடித்துச் செலவுசெய்கிறான். தன் சம்பளத்தில் மட்டும் குடும்பம் நடத்தச் சிரமப்படும் அனந்துவின் மனைவி கணவரின் சம்பளம் வீட்டிற்கு வராததன் வழியை அறிந்துகொள்ள அவனுக்குத் தெரியாமலேயே அவரின் அலுவலகம் சென்று ராஜினாமாக் கடிதத்தை வழங்குகிறாள். மறுநாள் அனந்து வேலைக்குச் செல்லும்போது விபரமறிந்து வீட்டிற்கு வந்து மனைவியிடம் கேட்கிறான். அவள், தானும் தன்வேலையை விட்டுவிட்டேன் எனக் கூறக் குடும்பத்தில் பொருளாதார நெருக்கடி ஏற்படும் என்ற அச்சத்தை அவளிடம் கூறி "நான் சூதாட்டத்தை இன்றுமுதல் விட்டுவிட்டேன், தவறான வழியில் இனி ஏதும் செய்யமாட்டேன், ராஜினாமாவை வாபஸ் வாங்கிவிடு செல்வி"[34] எனக் கெஞ்சுகிறான் அனந்து.

இன்றைய காலகட்டத்தில் கணவன், மனைவி ஆகிய இருவரும் வேலைக்குச் சென்று சம்பாதித்தால்தான் குடும்பத்தைப் பொருளாதார நெருக்கடி இல்லாமல் இயல்பாக நடத்தமுடியும் என்பதையும் ஒருவர் சம்பளம் குறையும்பொழுது குடும்பச் சிக்கல் ஏற்படும் என்பதையும் அனந்து பாத்திரத்தின்மூலம் விக்கிரமன் உணர்த்தியுள்ளார்.

## சபலப்புத்தி

'நல்லதோர் வீணை' சிறுகதையில் கேசவராம் இசைக்கல்லூரி முதல்வராக உயர்ந்த குணங்களுடன் திகழ்பவர். சில காரணங்களால் மனைவியைப் பிரிந்து வாழ்பவர். கல்லூரியில் மட்டுமில்லாமல் வீட்டிலும் மாணவிகளுக்கு வீணை கற்றுக்கொடுப்பவர். கணவனை இழந்த வாணியும் வீணை கற்றுக்கொள்ள அவர் இல்லத்திற்கு வருகிறாள். அவளோ கேசவராமிடம் மதிப்பும் மரியாதையும் கொடுத்துப் பயில்கிறாள். ஆனால் கேசவராம் சபலப்புத்தியால் அவளிடம் தவறான கண்ணோட்டத்துடன் பழகுகிறார். வாணி, கேசவராமைத் தந்தையாகப் பாவித்து ஒருநாள் மழைபெய்யும்போது ஏற்பட்ட இடிச்சத்தத்தில் பயந்து தன்னையறியாமல் கேசவராமின் மடியில் படுத்துக்கொள்கிறார். கேசவராம் சபலத்துடன் அவளை அணைத்துக்கொள்கிறார். அப்போது வாணி என் தந்தையும் இப்படித்தான் குருவிக்குஞ்சை அணைத்துக் கொள்வதுபோல் என்னை அணைத்துக்கொள்வார் என்று கூற அவர் மனம் பதறுகிறது.

"சிவசக்தி! உலக மாதாதேவி என்னைக் காப்பாற்றிவிட்டாள் தேவி! இருந்தாலும் இந்த விரல்கள் பாவம் செய்துவிட்டன. புனிதமிழந்த செயல் செய்துவிட்டேன். இதற்குத் தண்டனையை ஏற்றுக்கொள் சிவசக்தி... என்று எரியும் கற்பூரத்தில் இரு கரங்களின் விரல்களை நீட்டிக் கொண்டேயிருந்தார்."[35]

இவ்வாறு கேசவராமின் சபலம் தக்க சமயத்தில் தெளிவடையும் விதத்தில் இப்பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

'வளர்த்த மான்' சிறுகதையில் அன்பானந்தர் பூங்குறிச்சியில் அநாதை இல்லம் நடத்திவருபவர். அவ்வில்லத்திற்குக் கண்தெரியாத கயல்விழி அடைக்கலமாகிறாள். அவளை அன்பானந்தர் தவறான நோக்கோடு பார்க்கிறார். அவ்வில்லத்தில் அழகான மான்குட்டி ஒன்றைக் கயல்விழி செல்லமாக வளர்த்துவந்தாள். அவளிடம் அக்குட்டி எப்போதும் உடனிருக்கும். ஒருநாள் கண்தெரியாத கயல்விழி குளத்தில் குளித்துக்கொண்டிருக்கும்போது யாருக்கும் தெரியாமல் படிக்கட்டில் இறங்குகிறார். அவளோ யாரும் இங்கு வராதீர்கள் எனக் கதறுகிறாள். அதையும் மீறி அவர் இறங்க முற்படுகையில் அவர் வளர்த்த மானே அவரை முட்டிச் சாய்த்துக் குடலைச் சரித்துவிடுகிறது. அந்நிலையில் "அந்தப் பொண்ணுக்கு யாராவது விழிகளைக் கொடுத்தால் பார்வை திரும்பும். ஒருவர் இறந்த சில மணிநேரங்களுக்குள் விழிகளைப் பெயர்த்து வைக்கலாம். அன்பானந்தர் முகத்தில் மகிழ்ச்சி நிறைந்தது. டாக்டர்! என் விழிகளை அவளுக்குப் பொருத்திவிடுங்கள்"[36] என்றார் அன்பானந்தர்.

இவ்வாறு இக்கதையில் அன்பானந்தர் தான் செய்த தவறுக்குச் சரியான தண்டனை பெற்றதோடு கண்ணில்லாத கயல்விழிக்குக் கண்ணைத் தியாகம் செய்து திருந்தும் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளார்.

**இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல்**

'நரசிங்கராவ்' சிறுகதையில் நரசிங்கராவ் முதன்மைப் பாத்திரமாவார். வயதான பிரம்மச்சாரி, அனுமன் பக்தர். குடும்பப் பரிவாரங்களுடன் வாழ்ந்த சேட்டு ஒருவரின் நான்கு மாடிக் குடியிருப்பில் உள்ள வீடுகளில் வாடகை

வசூலிப்பவர். ஒருநாள் செல்லத்துரையின் வீட்டிற்கு வாடகை வசூலிக்கச் செல்லும்போது அவன் வீடு தாழிடப்பட்டு இருந்தது. சன்னலைத் திறந்து கூப்பிட முயற்சிக்கையில் அவன் வேறொரு பெண்ணுடன் இருப்பதைப் பார்த்துத் திரும்புகிறார். எப்படியோ இச்செய்தியைச் செல்லத்துரையின் மனைவி அறிகிறாள்.

செல்லத்துரை, நரசிங்கராவ் மீது சந்தேகம் கொண்டு அவரைப் பழிவாங்கக்கருதி மாடிப்படியின் மரப்பட்டியல்களைப் பெயர்த்து ஒட்டிவைத்தாற்போல் வைத்துவிடுகிறான். அவர் அதில் ஏறும்போது படிவிழுந்து அவரின் கையும் ஒடிகிறது. அந்நிலையிலும் அடுத்தவர்களைப் பழிக்காமல் "செல்லத்துரை - மற்றவர்கள் என்ன ஆனார்களோ... அந்த அம்மா - செல்லதுரை பெண்சாதி மகாலெட்சுமிபோல இருப்பா... அந்தக் கவலைதான் எனக்கு"[37] என்பதால் தீமைசெய்தவர்களே ஆயினும் அவர்களுக்கு நல்லதே நடக்கவேண்டும் என்று எண்ணும் பாத்திரமாக நரசிங்கராவ் படைக்கப்பட்டுள்ளமை விளங்கும்.



### சிறுபிள்ளையின் அறியாமை

சித்தியின் வீட்டில் தங்கி வாழும் நந்து, அவள் கூறும் வேலைகளுக்குப் பயந்து நண்பன் பரசுவுடன் வீட்டிற்குத் தெரியாமல் வெளியூர் செல்கின்றான். இருவரும் சேர்ந்து கையிலிருந்த காசையெல்லாம் சாப்பாடு தின்பண்டம் வாங்கிச் சாப்பிட்டுக் காலிசெய்துவிடுகின்றனர். பரசுவிற்கு வீட்டு நினைவு வந்து வீட்டிற்கே திரும்பச் சென்றுவிடுவோம் என நந்துவிடம் கூறுகிறான். நந்துவின் சித்தியும் அவனைக் காணாது மனம் பேதலிக்கிறாள். நந்து மறுநாள் காலையில் வீடு வந்துவிடுகிறான். சித்தியைப் பார்த்து "சித்தி' என்று பெரிதாகக் கத்திய நந்து சித்தியின் காலடியில் விழுந்தான். இருவரும் கண்களைத் துடைத்துக்கொண்டனர்"[38] என்பதிலிருந்து நந்துவின்

சிறுபிள்ளைத்தனத்தால் எழுந்த அறியாமைச் செயலை இப்பாத்திரம் உணர்த்துகிறது.

**சகிப்புத்தன்மை**

சேதுவிற்கு அலுவலகத்தில் கிட்டுவால் பல தொல்லைகள் ஏற்படுகின்றன. அலுவலகத்தில் சேதுவின் மேசை மீதிருந்த கோப்புக்களை எடுத்து ஒளித்துவைத்துவிடுகிறான் கிட்டு. சேதுவின் வேலை போகப்போகிறது என அனைவரிடமும் கேலியாகச் சிரிக்கிறான். சேது கிட்டுவின் செயல்களை ஒரு பொருட்டாகக் கொள்ளாது மேலதிகாரியிடம் சென்று "நான் வேலையில் இருந்தால் பலருடைய பணி உயர்வுக்குப் பாதகமாக இருக்க நேரிடும். பிறகு என்னையே ஒரு நாள் காணாமல் ஒளித்துவைத்துவிடுவார்கள் ஸார்! நான் போய்வருகிறேன்"[39] என்கிறார்.

அலுவலகத்தில் கோப்புகளை ஒளித்துவைத்துவிட்டுக் காணவில்லை என நாடகமாடுபவர்களிடத்தில் பணிசெய்வதற்குச் செய்யாமல் இருப்பதே மேல் என வேலையை விட்டு விலக நினைக்கும் பாத்திரமாகச் சேது படைக்கப்பட்டுள்ளார்.

**பழமையைப் போற்றுதல்**

தபால் அலுவலகத்தில் வேலைசெய்யும் ராஜகோபாலன் பழமையை விரும்புபவர். அவர் குடியிருக்கும் வீடு மிகவும் பழையது. பழைய மிதிவண்டியில் ஒன்பதரை மணிக்குச் சரியாக வேலைக்குச் சென்று மாலை ஐந்துமணிக்குத் திரும்பும் அவரை அலுவலகத்தில் பழமை விரும்பி என்று கேலிசெய்தனர். அவரது மூத்த பையனுக்கு நகரத்தில் வேலைகிடைத்ததால் அனைவரும் நகரத்திற்குக் குடியேறினர். பேருந்தில் பயணம் செய்து வேலைக்குச் சென்றுவருவது ராஜகோபாலனுக்குப் பிடிக்காது போகவே மீண்டும் கிராமத்திற்கே திரும்பினார். இதனை, "பழையபடி காலை

ஐந்துமணிக்கு விழிப்பு, நியூஸ் பேப்பர், காய்கறிக் கடை, சைக்கிள் பயணம், பழைய ராஜகோபாலனாக இருப்பதில் அவருக்கு வெட்கமில்லை"[40] என்பது உணர்த்தும்.

இதன் மூலம் புதிய பகட்டான வாழ்வை விடுத்துப் பழைய வாழ்க்கையை விரும்பும் ராஜகோபாலன் பாத்திரத்தை 'பழைய ராஜகோபாலன்' சிறுகதையில் விக்கிரமன் படைத்துள்ளார்.

**குடும்ப கௌரவத்திற்காக எதையும் செய்யும் இயல்பு**

'விஷக் கத்தி' சிறுகதையில் தாயையிழந்த தன் மகள் பொற்கொடியைப் பாசத்தோடு வளர்த்துவந்தார் அம்பலவாணர். தன் விருப்பத்திற்கு மாறாக வேறொருவனை விரும்புகிறாள் என்பதை அறிந்தவுடன் அவளுக்குத் தெரியாமல் அவள் காதலன் முத்துவேலைக் கொன்றுவிடுவது என முடிவு கட்டுகிறார். கத்தியில் விஷம் தடவி ஊர்த்திருவிழாவில் காளிமுத்துவிடம் கொடுத்துக் கொலைசெய்துவிடுவது எனத் திட்டம் தீட்டுகிறார் அம்பலவாணர்.

தந்தையின் சதித்திட்டத்தை அறிந்து அவர் வைத்திருந்த விஷத்தை எடுத்துத் தன் காதலன் கத்தியில் தடவி அவனிடம் காளிமுத்துவை வெட்டுமாறு கூற அவன் வெட்டிவிடுகிறான். அப்போது அம்பலவாணர் "நம்மிடமே வாலாட்ட இந்த வட்டாரத்தில் ஒரு பயல் துணிந்துவிட்டானா? என்ற கோபக்குரல் அவர் இதயத்திலிருந்து வெளியே குதிக்கத் தயாரானது"[41] என்பதன் மூலம் அம்பலவாணரின் கொடூரத் தன்மை வெளியாகிறது.

தான் பெற்ற மகளேயானாலும் தன் விருப்பத்திற்கு மாறாகச் செயல்பட்டால் பழிவாங்கத் துடிக்கும் கொடூரமான பாத்திரமாக இச்சிறுகதையில் அம்பலவாணர் படைக்கப்பட்டுள்ளார்.

## காதலுக்காக எதையும் செய்யத் துடிக்கும் மனப்பாங்கு

. 'புவனாவுக்காக' சிறுகதையில் சோமு ஏழைக் குடும்பத்தில் பிறந்து பணம் காசுக்காக மிகவும் சிரமப்படுகிறான். தன் அக்காள் மகள் புவனாவைத் திருமணம் செய்துகொள்ள விரும்பி அக்காவிடம் கேட்கிறான். அதற்கு அவள், "உன் மச்சான், புவனாவைப் பெரிய பணக்கார வீட்டுப் பையனுக்குக் கட்டிக்கொடுக்க நினைக்கிறார் என்று கூறுகிறாள். அக்கா! அவ்வளவு சுலபமாகப் புவனாவை மற்றொருவரை மணக்க விடுவேனா? பணம் சம்பாதித்துக்கொண்டுவந்து புவனாவைக் கல்யாணம் செய்துகொள்கிறேன் அதையும் மீறி புவனாவை அத்தான் சொந்தக்காரருக்குக் கல்யாணம் செய்துகொடுத்தால் ஒரு கொலையே நடந்துவிடும்"[42] என்று கூறியதிலிருந்து காதலுக்காக எதையும் செய்யத் துடிக்கும் பாத்திரமாகச் சோமு விளங்குவதைக் காணமுடிகிறது.

## நம்பிக்கையுடன் செயல்படுதல்

விநாயகர் கோயில் எதிரே தேங்காய், பழம் விற்றுப் பிழைக்கும் சிறு வியாபாரி கபாலி. ஏழைக் கபாலிக்குக் கோயிலின் முன்பு கடை போடுவதற்கு இடமில்லை எனக் கூறிவிடுகின்றனர். அறங்காவலர் தர்மகர்த்தா, அரசியல்வாதி எனப் பலரும் கபாலிக்கு எதிராக உள்ளனர். ஒருசிலர் ஆதரவாகவும் உள்ளனர். கபாலி நம்பிக்கையுடன் தர்மகர்த்தா பெயரிலேயே தர்மமூர்த்தி கனிரசக்கடையைத் திறக்கிறான். 'அருள்மிகு தர்மமூர்த்தி கனிரசக்கடையைத் தர்மகர்த்தா திறந்துவைத்தார். காலம் கனிகிறது. அவனது தெய்வ நம்பிக்கைக்கு "கபாலி, மனைவியைச் சமாதானப்படுத்தி, புள்ளே - சும்மாயிரு எல்லாம் அந்தக் கோயில் சக்தி நமக்கு நல்ல வழிகாட்டுவா - இதுவும் நன்மைக்கு என்று எடுத்துக்க - இதோபாரு - காப்பிப்

பொடிக்கடைக்காரர் மீரான்பாய் இவங்கெல்லாம் உதவிக்கு வந்தது எப்படி? அந்தச் சக்தியின் அருள்தான்”[43] என்பது விளக்கும்.

தெய்வ நம்பிக்கையும் மன உறுதியும் இருந்தால் நினைத்தது நடக்கும் என்ற எண்ணம் உடையவனாகக் கபாலி பாத்திரம் ‘தர்மமூர்த்தியின் தயவு’ சிறுகதையில் படைக்கப்பட்டுள்ளது.

## மொழிப்பற்று

‘அழுக்கு’ சிறுகதையில் தமிழ்மொழிப்பற்று நிறைந்தவராக முருகவேள் படைக்கப்பட்டுள்ளார். நளினமான பேச்சு, லேசான நகைச்சுவை, அழுத்தமான ஆழ்ந்த சிந்தனை என்பவை அவருடைய இயல்புகளாகும். தமிழ்ப் பித்துப் பிடித்த அவர் ராணி என்னும் தன் மருமகள் பெயரை ‘அரசி’ என்று தமிழ்ப்படுத்தி அழைக்கிறார். ஒருமுறை அவருடைய மருமகள் “கவலைப்படாதீர்கள் மாமா, நம் கார்டனர் ஜகத்ரட்சகன் வொர்க்கர் ஸ்டடன் வந்து நைட் அண்டுடே ஒர்க் செய்து சுயேஜ் பிளாக்கை கிளியர் செய்துவிட்டான்”[44] என்று கூறியவுடன் முருகவேள் பொங்கி எழுகிறார். உடனே மாமா மன்னியுங்கள் என்று கூறி அனைத்தையும் தமிழ்ப்படுத்திக் கூறியதும் மகிழ்கிறார்.

இதிலிருந்து முருகவேளின் தமிழ்ப்பற்றுப் புலப்படுவதோடு தாய் மொழியான தமிழில் எந்த ஒரு கருத்தையும் உணர்த்தமுடியும் என்ற நம்பிக்கையையும் இப்பாத்திரத்தின் மூலம் உணர்த்தியுள்ளார்.

## துணிந்து செயல்படல்

புல்லாங்குழலில் மகுடி இசையை வாசிக்கும் திறமை பெற்றவன் பாஸ்கரன். அவன் தந்தை பிளேக் நோயால் இறந்துவிடவே மாமன் வளர்ப்பில் இருந்துவருகிறான். தன் மகள் பாரிஜாதத்தைப் பாஸ்கரனுக்குக்

கட்டிவைத்துவிட வேண்டும் என்ற எண்ணம் அவன் மாமனுக்கு இருந்தது. பௌர்ணமியன்று படகில் ஆற்று வெள்ளத்தில் நண்பர்களுடன் மகுடி வாசித்துச் செல்லும் வேளையில் அவ்விசை கேட்டு நாகப்பாம்பு ஒன்று படகில் ஏற நண்பர்கள் அனைவரும் வெள்ளத்தில் குதித்தனர். அதனால் படகு கவிழ்ந்து பாஸ்கரன் ஆற்றில் அடித்துச்செல்லப்படுகிறான். நண்பர்கள் அஞ்சாது செயல்பட்டிருந்தால் "பாஸ்கரன் தனது திறமையான நாதத்தால் லாவகமாக அதை அடக்கிருப்பான்"[45] என்பதன் மூலம் பாஸ்கரனின் மகுடி வாசிக்கும் திறமையும் துணிவும் மிக்க பாத்திரமாகப் பாஸ்கரன் படைக்கப்பட்டுள்ளது விளங்கும்.

## உறவுக்கு மதிப்பளித்தல்

'கதையும் கல்யாணமும்' என்ற சிறுகதையில், அழகுப்பட்டி கிராமத்திலே பிறந்தவன் மாரிச்சாமி. தங்கையின் காதலுக்காகப் போராடி அண்ணன், தந்தையால் விரட்டியடிக்கப்பட்டு பர்மாவிலேயே பிழைத்துவருகிறான். தங்கை விரும்பிய முத்தையனுக்கு அவளைக் கட்டிக்கொடுக்கவேண்டும் என்று போராடுகிறான். இறுதியில் தோல்வியுற்று வெளியூர் சென்றாலும் காலத்தின் கட்டாயத்தாலும் உண்மையான அன்பாலும் அவர்கள் இருவரும் இணைகின்றனர். இதனை "அப்பா - என்னைக் கோடாரிக் காம்பென்றோ, வேறு என்ன வேணுமோ பேசுங்கள். என் அருமைத் தங்கையை ஆபத்திலிருந்து தப்ப வைத்தேன். அவள் வாழ்நாள் முழுதும் படப்போகும் துன்பத்திலிருந்து தப்பவைத்தேன். அவள் விரும்பிய முத்தையனை உடனே மணக்க ஏற்பாடு செய்யுங்கள்"[46] என்பது உணர்த்தும்.

தன் தங்கையின் வாழ்விற்காகக் குடும்பத்தார் அனைவரையும் பகைத்துச் சென்றாலும், எப்படியும் அவள் விரும்பியவனை

அடைந்துவிடவேண்டும் என்ற உறவுப்பாசம் மேலோங்கிய பாத்திரமாக மாரிச்சாமியைப் படைத்துள்ளார் விக்கிரமன்.

### தவறு செய்வதற்கு அஞ்சுதல்

'குலதனம்' சிறுகதையில் தள்ளுவண்டியில் குல்பி ஐஸ் விற்கும் முதியவர் பாலகிருஷ்ண லாலா. குறிப்பிட்ட நேரத்திற்குச் சரியாக ஒவ்வொரு தெருவிற்கும் மணியோசை எழுப்பிச் சென்று வியாபாரம் செய்பவர். அவர் மகன் ராமச்சந்திரன் அவ்வண்டியின் மணியை உடைத்துவிடுகிறான். அதனால் வியாபாரத்திற்குச் செல்லாமல் இரண்டு நாட்கள் வீட்டில் இருந்து விடுகிறார். அவர் மகனோ அருகில் இருந்த அனுமார் கோயில் மணியை எடுத்துவந்து வண்டியில் பொருத்துமாறு கூற, மேலும் கோபமடைந்து மகனைத் திட்டி, மணியைக் கோயிலில் இருந்த இடத்தில் வைக்கச் சொல்லிவிடுகிறார். அவன் மனம் திருந்தி, தந்தையிடம் மன்னிப்புக் கோருகிறான். "ராமச்சந்திரா! கோவிலிலேயே திருடிவிட்டாயே, பரம்பரை மணியை உடைத்தாய் அது ஒரு குற்றம். அனுமார் கோவில் மணியைத் திருடினாய், மன்னிக்கமுடியாத குற்றம்"[47] என்று பாலகிருஷ்ண லாலா பாத்திரத்தின் மூலம் தவறுசெய்வது எவ்வளவு பெரிய குற்றம் என்பதை உணரச் செய்துள்ளார்.

விக்கிரமன் தீய இயல்புடைய ஆண் முதன்மைப் பாத்திரங்களைவிட நல்ல இயல்புடைய ஆண் முதன்மைப்பாத்திரங்களையே பெரிதும் படைத்துள்ளார். தீய பாத்திரங்களும் இறுதியில் மனம் திருந்தி நல்லவர்களாக மாறும் நிலையில் பாத்திரங்களை அமைத்துள்ளார்.

### பெண் தலைமைப் பாத்திரங்கள்

விக்கிரமனின் சிறுகதைகளில் பெண் தலைமைப் பாத்திரங்களாக சிங்காரி, பார்வதி, சீதா, சாந்தலெட்சுமி, நீலாம்பிகை, தேவகுஞ்சரி, மஞ்சுளா,

செல்லி, வேதா, ஊர்வசி, பூரணி, புவனா ஆகியோர் இடம்பெறுகின்றனர். இவர்கள் கணவன்மாரைப் பிரியாதிருத்தலை விரும்புதல், கௌரவத்தை விட்டுக்கொடுக்காதிருத்தல், தாய்மையுணர்வு, தனித்து வாழும் எண்ணப் போக்கு, பாதுகாப்புணர்வு, பிறர் துன்பத்துக்கு வருந்துதல், வறுமையிலும் சொத்தைக் காத்தல், விருந்தினரை வரவேற்றல், தவறை உணர்ந்து திருந்துதல், அன்பு, துணிவு மனப்பான்மை ஆகிய பண்புகள் உடையவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

## கணவன்மாரைப் பிரியாதிருத்தலை விரும்புதல்

சிங்காரி எப்போதும் சிரித்துப் பேசும் இயல்பு உடையவள். செவ்வந்திப்பூ பறித்து விற்கும் தொழில் செய்பவள். சிங்காரியின் கணவர் சுந்தரமூர்த்தி வேலைக்குப் போகாமல் இருந்தார். அவரைச் சிங்காரியின் தந்தை கோபமாகப் பேசியதால் யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் வெளியூர் சென்றுவிடுகிறார். அதனால் சிங்காரியின் மனம் உடைகிறது. கணவரிடமிருந்து கடிதமும் பணமும் வரவில்லை என்று எங்கும் செல்லாமல் இருக்கிறாள். ஒரு மாதம் கழித்து அவரிடமிருந்து கடிதம் வர உயிர் மீள்கிறது.

சிலமாதங்கள் கழித்துக் கணவர் வர, பூ போடும் வீட்டிற்கு அவரை அழைத்துச்சென்று இனி என் கணவர் வெளியூர் செல்லமாட்டார் என்னோடு பூந்தோட்டத்திலே அவர் பிழைப்பு இருக்கும் என மகிழ்ச்சியோடு கூறுகிறாள். இதனை, "பெட்டி படுக்கையோட நம்ம ஊரு ஸ்டேஷனிலே யாரு இறங்குதுன்னு பார்த்தேன். அவர்! அத்தான் என்று அலறிப்புட்டேன்"[48] என்பது உணர்த்தும்.

கணவனைப் பிரிந்திருக்கும் நிலையில் பெண்களின் மனம் கொள்ளும் வேதனையையும் அவர் அருகில் இருக்கும்போது பெண்கள் அடையும் மகிழ்ச்சியையும் சிங்காரி பாத்திரம் விளக்கும்.

## கௌரவத்தை விட்டுக்கொடுக்காதிருத்தல்

'நீலரிப்பன்' கதையில் வரும் பார்வதி எளிய வாழ்க்கை வாழ்பவள். பட்டணத்தில் தன் கணவரோடு வாழ்ந்துவருகிறாள். கணவரின் சம்பளத்தில் ஆடம்பரம் இல்லாது வாழும் பார்வதி வீட்டிற்கு, தங்கை விடுமுறைக்காக வருகிறாள். அவளை ஒரு ஞாயிற்றுக்கிழமையாவது பட்டணத்தைச் சுற்றிக்காட்ட, கணவர் கேசவமூர்த்தியிடம் வேண்டுகிறாள். அவனோ செலவு ஆகிவிடுமே என்ன செய்வது? என்று புரியாமல் ஒத்துக்கொள்கிறான். அவன் மைத்துனி நீலரிப்பன் ஒன்றை விரும்பிக் கேட்க, காசு இல்லாமல் பார்வதியிடம் வெறுப்பாகப் பேசி ரிப்பனை வாங்காமல் வீட்டிற்கு அழைத்துவந்துவிடுகிறான்.

"அக்கா வீட்டுக்கு வந்தேன், ஒரு ரிப்பன்கூட வாங்கித்தரமாட்டேன்னு சொல்லிட்டாள் என்று பரிமளம் போய் ஊரில் சொன்னா என்ன செய்யறது? சுய கௌரவத்தைக் காப்பாத்த வேண்டாமா?"[49] என்று தன் குடும்ப கௌரவத்தைக் காக்கவும், தன் கணவரின்மேல் குறை ஏற்படாது செய்யவும் மனைவியானவள் எப்படியேனும் ஒருவழியில் பொருளை வாங்கிக்கொடுத்துத் தன் தங்கையை மகிழ்விக்கும் ஒரு குடும்பப் பெண்ணாகத் திகழ்வதைப், பார்வதி பாத்திரத்தின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

## தாய்மையுணர்வு

நாராயணனின் மூத்த மகள் சீதா. நாராயணனின் மனைவி இரண்டு மகள்களைப் பெற்றபின் இறந்துவிடுகிறாள். குழந்தைகளை வளர்க்கமுடியாமல் நாராயணன் ஹேமா என்ற பெண்ணை மறுமணம் செய்துகொள்கிறாள். சீதாவிற்கு, ஹேமாவைக் கண்டாலே பிடிக்காது வெறுத்து ஒதுக்குகிறாள். ஹேமாவோ சீதாவை, தான் பெற்ற குழந்தைபோல் பராமரிக்கிறாள். இருந்தாலும் சீதா அவளிடம் செல்வதுமில்லை; அவள்

பேச்சைக் கேட்பதுமில்லை. நாராயணன் எவ்வளவோ ஆறுதல் கூறியும் கேளாது பிடிவாதமாய் இருந்தாள். சீதாவிற்குத் திருமணம் முடிந்து புகுந்த வீட்டிற்குச் சென்றுவிடுகிறாள். ஆனால் சித்தி ஹேமாவிற்கோ சீதாவின் நினைப்பு அதிகமாகி உடல்நலமில்லாமல் போகிறது. சீதாவின் புகுந்தவீட்டிலும் இரண்டு தாயற்ற குழந்தைகள் இருந்தனர். எங்கிருந்தோ தாய்மை உணர்ச்சி சீதாவைச் சூழ்ந்துகொண்டது. அப்போதுதான் அவள் மனம் அவள் சித்தியை எண்ணத் தொடங்கியது.

"நான் எப்படியெல்லாம் சின்னம்மாவைப் படுத்தினேன்? இந்தக் குழந்தைகள் எத்தனை அன்பாக இருக்கிறார்கள்? நான் மட்டும் ஏன் அப்படி இருந்தேன்! சீதா ஒருமுறை நினைத்துப்பார்த்தாள்."[50] சீதா, சித்தியின் தாய்மையுணர்வைப் புரிந்துகொள்ளாமல் நடந்துகொண்டதைச் சூழல் காரணமாக உணர்ந்து திருந்துதலை 'மாற்றாந்தாய்' கதை மூலம் காட்டியுள்ளார்.

'தெய்வத்தாய்' சிறுகதையில் சாந்தலெட்சுமி தன் மகனுக்குப் பெரிய இடத்தில் பெண் எடுத்தாலும் எப்போதும்போல் எளிய வாழ்க்கை வாழ்கிறாள். மருமகளின் ஆடம்பரப் போக்கை மாற்றிக்கொள்ளுமாறு கூற அவளோ சாந்தலெட்சுமியை வீட்டைவிட்டே துரத்துகிறாள். மகனும் மனைவியின் பேச்சைக் கேட்டு இருவரும் மாமனார் வீட்டில் குடியேறுகின்றனர். எந்நிலையிலும் சாந்தலெட்சுமிக்கு மகன் மீதிருந்த பாசம் குறையவில்லை.

மகன் அலுவலகச் சிக்கலில் மாட்டிக்கொண்டு வேதனைப்படும் நேரத்தில்கூடத் தனியாய்ப் பிரிந்து வாழ்ந்த சாந்தலெட்சுமி மகனின் துன்பத்தையறிந்து தான் குருவிசேர்ப்பதுபோல சேர்த்த பணத்தைக்

கொடுத்துத் துயர்துடைக்கும் நிலையை "எல்லாம் உன்னுடைய பணம்தானப்பா என் செளகரியத்திற்காக அவ்வப்போது இந்த நான்கு ஆண்டுகளில் நீ கொடுத்த பணத்தை இந்தப் பெட்டியில் போட்டுவைத்தேன். பட்டுப்புடவை வாங்கிக்கொள்ளுமாறு கொடுத்த பணம், சமையற்காரி வைத்துக்கொள்ளுமாறு கொடுத்த பணம் எல்லாம் இந்தப் பெட்டியில் அடக்கம். இதை நீ பயன்படுத்திக்கொள். ஆபத்துக்கு இது உதவுமானால் என் இதயம் குளிரும்"[51] என்றாள் சாந்தலெட்சுமி.

தன்னை விட்டு மகன் பிரிந்து வாழ்ந்தாலும் அவனுக்கு ஒரு துன்பம் வரும்போது உதவத் துடிக்கும் தாய்மையுணர்வைச் சாந்தலெட்சுமி பாத்திரத்தின் மூலம் உணர்த்தியுள்ளார்.

**தனித்து வாழும் எண்ணப்போக்கு**

'வந்த சுவடு' சிறுகதையில் வரும் நீலாம்பிகை, கேசவனின் மனைவி. இவளுக்கு இரண்டு குழந்தைகள். தன் கணவன் குறுக்குவழியில் தன்னை ஈடுபடுத்திப் பணம் சம்பாதிக்க நினைக்கிறான். எனவே தன் கணவனை விட்டுப் பிரிந்து தன் இரு குழந்தைகளுடன் சமூக சேவகியாகத் திகழ்கிறாள். சமுதாயத்தில் புகழோடு தனித்து வாழ்ந்துகொண்டிருக்கும் நிலையில் பன்னிரண்டு வருடங்கள் கழித்துக் கேசவன் வருகிறான். தன் பழைய நினைவுகளைப் புதுப்பிக்கிறான். ஆனால் "நீலா சீறினாள், இல்லை... இல்லை என் அருமை வேணிக்கும், மூர்த்திக்கும் அப்பா இல்லை. அவர்கள் அப்பா செத்துப்போயிட்டார். இப்பொழுது சமூக சேவா ரத்னம், நீலாம்பிகை அம்மையார் ஒரு விதவை. இளம் வயதிலேயே கணவனை இழந்து, மறுமணம் புரிந்துகொள்ளாமல் சமூகசேவையைச் செய்துவரும் நற்பண்புள்ளவள் என்று சமூகத்தால் மதிக்கப்படுபவளாக இருக்கட்டும். மிஸ்டர் கேசவமூர்த்தி!

தயவுசெய்து மீண்டும் என் வாழ்க்கைத் தடாகத்தில் கல்லை வீசி, சலனம் உண்டாக்காதீர்கள், போய்விடுங்கள்"[52] என்று கூறுகின்றாள்.

ஒரு பெண் தனியாகத் தன் குழந்தைகளோடு எவ்விதக் களங்கமும் இல்லாமல் தனித்து வாழமுடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாய் நீலா பாத்திரத்தை விக்கிரமன் படைத்துள்ளார்.

**பாதுகாப்புணர்வு**

தேவகுஞ்சரி கணினித்துறையிலும், பொருளாதாரத் துறையிலும் முதன்மையாகத் தேறித் தொழிற்சாலையில் பொருளாதார ஆலோசகராக இளம் வயதிலேயே பணியாற்றியவள். அவளின் அழகு அவளுக்கு ஆபத்தைத் தர, ஒரு சுவாமியிடம் சென்று பிறரின் பருந்துப் பார்வையிலிருந்தும், அவர்கள் பசியிலிருந்தும் எப்படித் தப்புவது என வேண்டுகிறாள். ஆனால் வேலியே பயிரை மேய்வதுபோல சுவாமியே அவளை அடையப் பல வழிகளில் முயற்சிப்பது தெரிந்து ஒதுங்கிவிடுகிறாள். பிறகு வேலைபார்க்கும் முதலாளி மகன் மனோகரசாமியால் இவளுக்குத் தொல்லை ஏற்படுகிறது. தன் தந்தையிடம் எடுத்துக்கூறியும் பலன் இல்லாதுபோகவே அவள் தொழிற்சாலையின் பாதுகாவலரான அறுபது வயதுடைய பீம்சிங்கைத் திருமணம் செய்துகொள்ள முடிவெடுக்கிறாள். இதனை, "என்ன வியப்படைகிறீர்கள்? உம் புறப்படுங்கள். அருகே உள்ள ஏதாவதொரு கோவிலுக்குச் செல்வோம் பிளாட்பாரக் கோயிலாக இருந்தாலும் பரவாயில்லை. இதோ இந்தப் பெட்டியைத் திறந்துபாருங்கள். பீம்சிங் பெட்டியைத் திறந்தார். அதில் மஞ்சள் கயிற்றில் கோர்க்கப்பட்ட திருமாங்கல்யம் இருந்தது. தங்கச் சங்கிலி ஒன்றும் அதில் இருந்தது"[53] என்பது உணர்த்தும்.

அழகுடன் திகழும் பெண்கள் வேலைக்குச் செல்லும்போது பல்வேறு தொல்லைகளுக்கு ஆட்படுதலும் அதனால் அப் பெண் தன்னைக் காத்துக்கொள்ளப் பாதுகாப்பு வளையமாக மஞ்சள் கயிறைக் கருதுவதும் வயதானவராக இருந்தாலும் திருமணம் செய்துகொள்ள முடிவுசெய்வதுமான பாத்திரமாகத் தேவகுஞ்சரி படைக்கப்பட்டுள்ளாள்.

**பிறர் துன்பத்துக்கு வருந்துதல்**

மஞ்சுளாவின் மிக நெருங்கிய தோழி சாவித்ரி. சாவித்ரிக்கு முன்பே திருமணம் முடிந்துவிட்டது. அவள் கணவர் நகைக்கடை ஒன்றில் வேலைபார்ப்பவர். மஞ்சுளா தன் திருமண நாளன்று சாவித்ரியின் வரவை எதிர்நோக்கிக் காத்திருக்கும் வேளையில் மிகத் தாமதமாக வந்த சாவித்ரியை வரவேற்று அவள் முகம் வாடியிருப்பதுகண்டு காரணம் கேட்கிறாள்.

சாவித்ரி தன் கணவர் குடும்ப வறுமை காரணமாக நகைக்கடையில் இருந்த இரு வளையல்களை எடுத்துவந்து அடகுவைத்துவிட்டதையும் மறுநாள் காலை கடைக்கு வருமானவரித்துறை அதிகாரிகள் வர இருப்பதையும், அவர்கள் கணவர் செயலைக் கண்டுபிடித்துவிடுவார்கள் என்பதால் என்ன செய்வது என்று தெரியவில்லை என்றும் கூறுகிறாள். உடனே மஞ்சுளா, “சாவித்ரி! இப்போது ரூபாயாகக் கொடுத்தாலும் பயன்படாது. மார்வாடி, கடை திறந்து பணம் கட்டி அதை மீட்டுப்போய் ஸ்டாக்கில் சேர்க்கமுடியாது. இதோ இந்த வளையல்களை அதே இடத்தில் வைத்துவிடச் சொல்லு உனக்கு எப்பொழுது முடியுமோ அப்பொழுது திருப்பிக் கொடுக்கலாம்”[54] என்று கூறுகிறாள்.

பிறருக்கு ஏற்பட்ட துன்பத்தினைத் தனக்கு ஏற்பட்ட துன்பம்போல கொண்டு துயர்துடைக்கும் நட்பின் ஆழத்தினை மஞ்சுளா பாத்திரத்தின் மூலம் விக்கிரமன் ‘தங்க வளையல்’ சிறுகதையில் படைத்துள்ளார்.

## வறுமையிலும் சொத்தைக் காத்தல்

செல்லி, பால்கார ராமனின் மனைவி. பிறரிடம் அதிகம் பேசாது பல சமயங்களில் சிரித்தே சமாளிக்கும் குணம் உடையவள். நன்றாக வாழ்ந்த குடும்பத்தில் சூழ்நிலை காரணமாக வறுமை ஏற்பட, தன் ஒரே வீட்டை விற்றுவிடத் திட்டம்போடுகிறான் ராமன். அதற்குச் செல்லி சம்மதிக்காது போகவே அவளிடம் திரைப்பட ஆசைகாட்டுகிறான். செல்லி எல்லாவற்றிற்கும் சிரித்தே மழுப்புகிறாள். இறுதியில் மனைவி செல்லிக்குத் தெரியாமல் வீட்டை விற்க முன்பணம் வாங்கும்போது அவள் சீறி எழுகிறாள்.

“அப்படியா? இந்த வீட்டை விற்க அவருக்கு உரிமை இல்லை. இந்த வீடு என்னுடையது. என் பெயரில் உள்ளது. நான்தான் உரிமையாளர். இவருடைய அப்பா என் மாமனார் இறப்பதற்கு முன்பு எழுதிய உயிலைப் பாருங்கள் என்று தகரப் பெட்டியிலிருந்து பத்திரம் ஒன்றை எடுத்து வீசினாள்.”[55] இதில் பெண்கள் தன் உரிமையை விட்டுக்கொடுக்காது வறுமையிலும் பரம்பரைச் சொத்துக்களைக் காப்பதில் உறுதி உடையவர்கள் என்பதை விளக்கும் வகையில் செல்லி பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

## விருந்தினரை வரவேற்றல்

வேதா, மூர்த்தியைத் திருமணம் செய்துகொண்டு அவரது அண்ணனுடன் கூட்டுக் குடும்பமாக வாழ்ந்துவந்தாள். மூர்த்தியின் அண்ணனுக்கு ஐந்து குழந்தைகள். அவரது மனைவியால் வீட்டு வேலைகள் செய்ய இயலாது. அச்சூழலில் வேதா அனைத்து வேலைகளையும் தானே பொறுப்பாகப் பார்த்துவந்தாள். ஓய்வும் தனிமையும் இல்லாமல் தன்னை ஆட்படுத்திக்கொள்ளும் வேளையில் ஒருநாள் அண்ணன் குடும்பத்தினர் வெளியூருக்குச் செல்கின்றனர். அந்நாளில் மூர்த்திக்கும் விடுமுறை

கிடைக்கிறது. விடுமுறையை வெளியில் சென்று கழிக்க முடிவெடுத்து இருவரும் செல்கின்றனர். பேருந்தில் ஏறியவுடன் பணப்பையை வீட்டில் விட்டுவந்த விபரம் தெரிகிறது. உடனே அடுத்த பேருந்து நிறுத்தத்தில் இறங்கி வீடு வருகின்றனர். வேதாவின் அத்தை குழந்தைகளுடன் வாசலில் நிற்பதைக் காண்கிறாள். அந்நிலையில், "நன்றாயிருக்கிறது நம் நிம்மதியும் மண்ணாங்கட்டியும் ஒரு நிமிஷம் தாமதித்து வந்திருந்தாள் அத்தை எத்தனை கலவரப்பட்டிருப்பாள்"[56] என்று கூறினாள்.

வேதா, தமக்கு ஓய்வு கிடைக்காத நிலையை எண்ணி வருந்துகிறாள். கிடைத்த ஓய்வுநேரத்திலும் அதைப் பயன்படுத்தத் தடையாயிருக்கும் விருந்தினரை எண்ணி உள்மனதில் வெறுப்புத் தோன்றினாலும், அவர்களிடம் அதைக் காட்டிக்கொள்ளாமல் இன்முகத்தோடு வரவேற்கும் பண்புடைய பாத்திரமாக வேதா படைக்கப்பட்டுள்ளாள்.

## தவறை உணர்ந்து திருந்துதல்

'ஊர்வசி' சிறுகதையில் தலைமைப் பாத்திரமாக ஊர்வசி திகழ்கிறாள். அவளுக்கு தட்டச்சு, பூவேலை தெரியும். ஆனால் வறுமையின் காரணமாகத் தன் உடலை விற்றுப் பணம் சம்பாதித்து, கேரளத்திலுள்ள வயோதிகத் தாய் தந்தையர்க்குப் பணம் அனுப்புகிறாள். இச்செய்தியை இரயிலில் பயணம் செய்துகொண்டிருக்கும் ரங்கோத்தமனிடம் கூறுகிறாள்.

அவளிடம் ரங்கோத்தமன், ஒருவனைத் திருமணம் செய்துகொண்டு வாழ்க்கை நடத்த அறிவுரை கூறுகிறான். அவனின் அறிவுரையை ஏற்று "இவ்வளவு அன்புடன் கேட்கும் நீங்கள்தான் என்னை ஏற்றுக்கொண்டு நிரந்தரமாக என்னைக் காப்பாற்றுங்களேன்"[57] என்று கேட்கிறாள்.

சூழ்நிலையால் தவறுசெய்தாலும் அந்தத் தவறை உணர்ந்து திருத்திக்கொண்டு வாழ்வதுதான் மனிதம் என்ற கருத்துக்கு ஏற்ப, தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டு ரங்கோத்தமனையே திருமணம் செய்து கொண்டு வாழ விரும்பும் பாத்திரமாக ஊர்வசி படைக்கப்பட்டுள்ளாள்.

**அன்பு**

பூரணி, தம் பெற்றோர்க்கு ஒரே மகளாய்ப் பிறந்தவள். இளம் வயதிலேயே வாழ்க்கையில் வஞ்சிக்கப்பட்டுத் தனிமையானவள். தனிமையை வென்று தனக்கென்று ஒரு வாழ்வைத் தேடிக்கொண்டவள். பல காலத்திற்குப் பின் இளமையில் விட்டுச் சென்ற கணவன் நிம்மதியைக் குலைக்க எதிரே வந்து நிற்கிறான். பூரணியோ எரிமலையாய்க் குமுறுகிறாள். அவன் அங்கிருந்து சென்றுவிடுகிறான்.

ஒருநாள் கணவன் சாலை விபத்தில் அடிபட அவர் பையில் இருந்த முகவரியைப் பார்த்து மருத்துவமனையிலிருந்து உங்கள் முகவரி வைத்திருந்தவர் அடிபட்டு மருத்துவமனையில் உள்ளார் என்று கூற மனப் பதட்டத்துடன் சென்று செவிலியர் முகவரி கேட்டவுடன் "சிஸ்டர் எழுதிக்கொள்ளுங்கள், எம்.ஆர்.சந்திரன் ஹஸ்பண்ட் ஆப் பூரணி ஹெட்மிஸ்ட்டரஸ், சங்கரியம்மாள் உயர்நிலைப்பள்ளி"[58] என்று கூறுகிறாள்.

கணவன் தனக்குப் பல இன்னல்களை ஏற்படுத்திப் பிரிந்து வாழும் நிலையை உருவாக்கினாலும் அவருக்கு ஒரு விபத்து என்கிறபோது மனம் பதறும் அன்பு நிறைந்த பாத்திரமாகப் பூரணி படைக்கப்பட்டுள்ளாள்.

**துணிவு மனப்பான்மை**

சோமுவின் அக்கா மகள் புவனா வளர்ந்து பெரியவளாகிறாள். சோமு, புவனாவைத் திருமணம் செய்துகொள்ள நினைக்கிறான். புவனாவும்

சோமுவை விரும்புகிறாள். புவனாவின் தந்தை, பெரிய பணக்காரனுக்குத்தான் தன் மகளைக் கொடுப்பேன் எனப் பிடிவாதமாக இருக்கிறார். புவனா பெற்றோர்களை எதிர்த்து எதுவும் கூறாது அடங்கியிருக்கிறாள். சேது வெளியூர் சென்ற நிலையில் புவனாவின் குடும்பத்தில் ஏற்பட்ட வறுமையின் காரணமாக ஒரு குதிரைவண்டிக்காரனுக்கு வாழ்க்கைப்படும் சூழல் உருவாகிறது. ஒரு குழந்தையும் பிறக்கிறது. சோமு பெரும்பணத்துடன் புவனாவைத் திருமணம் செய்துகொள்ள ஊர் திரும்புகிறான். "புவனா அவனைக் கண்டு மனம் உடையாமல், தன்னோடு வருமாறு அழைத்தவனிடம் உறுதியோடு 'துணிவே துணை' என்றேனே, இந்தக் குழந்தைதான் துணை. இவள் வளர்ந்து பெரியவளாகி என்னைக் காப்பாற்றுவாள்"[59] என்கிறாள்.

வறுமையில் வருந்தும் நிலையிலும் பெரும் பணத்துடன் தன்னோடு வருமாறு அழைத்தவனிடம் தவறான வழியில் செல்லாது, இருப்பதை வைத்து ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழ நினைக்கும் 'புவனா' பாத்திரத்தைப் 'புவனாவுக்காக' சிறுகதையில் காணமுடிகிறது.

விக்கிரமனின் பல்வேறு கதைகளிலும் பெண்கள் பொறுப்பு உள்ளவர்களாகவும், பொறுமை உடையவர்களாகவும், தவறான பாதையிலிருந்து திருந்துபவர்களாகவும், தம் சொத்தைக் காப்பவர்களாகவும் திகழ்ந்து சமுதாயத்திற்கு நல்ல எடுத்துக்காட்டாய்த் திகழ்கின்றனர்.

## துணைமைப் பாத்திரங்கள்

சிறுகதையின் மையக் கருத்திற்கு நேரடியாகப் பயன்படும் நிலையில் தலைமைப் பாத்திரங்களும் எதிர்த் தலைமைப் பாத்திரங்களும் அமையும். சில பாத்திரங்கள் ஆங்காங்கே உள்ள நிகழ்ச்சிகளில் மட்டும் இடம்பெறும்.

இப்பாத்திரங்களைத் துணைமைப் பாத்திரங்கள் என்று கூற இயலும். "இவ்வுலகில் எந்த மனிதனும் தனித்து இயங்க இயலாது. பிறரோடு கலக்காமலோ, பிறரைப் பார்க்காமலோ, பிறரின் உதவியின்றோ வாழ்வது என்பது இயலாது"[60] என்ற வகையில் சிறுகதைகளில் துணைமைப் பாத்திரங்கள் இன்றியமையாததாகின்றன.

விக்கிரமனின் சிறுகதைகளில் ஆண் துணைமைப் பாத்திரங்கள் கல்வி, மனிதநேயம், காதலுக்குத் துணை, தொழிலில் மேன்மை, அஃறிணை உயிர்களிடத்து அன்பு காட்டல் ஆகிய பண்புகள் உடையவர்களாகத் திகழ்கின்றனர். பெண் துணைமைப் பாத்திரங்கள் மறக்க இயலாத உணர்வுகள், பணத்தின் இன்றியமையாமை, தாய்மை உணர்வு, நிலைநாட்டும் தன்மை, உதவி மனப்பான்மை முதலான பண்புகள் கொண்டவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

**கல்வி**

வாழ்வின் முன்னேற்றத்திற்கு அடிப்படையாய் அமைவது கல்வி. இக்கல்வியைக் கற்க, துணைநிற்போரை வாழ்நாள் உள்ளவரையும் நினைத்தல் வேண்டும். இத்தகைய சூழலை ஏற்படுத்திய பாதிரியாரைக் 'காய்ந்த மல்லிகை' சிறுகதையில் விக்கிரமன் படைத்துள்ளார்.

மணி வறுமையான சூழ்நிலையில் பக்கத்தில் உள்ள ஊரான மேட்டுப்பாளையத்திற்குச் சென்று படித்துவந்தான். அவனது படிப்பின் திறமையை எண்ணி அவன் தந்தை மேற்படிப்புப் படிக்கவைக்க ஆசையோடு இருந்தாலும் பணத்தட்டுப்பாட்டால் யோசிக்கும் வேளையில் "நான் நன்றாகப் படிப்பதைக் கண்ட என் பள்ளிக்கூடத் தலைமைப் பாதிரியார் சம்பளமில்லாமல் மேலே படிக்க ஏற்பாடு செய்தார்"[61] எனும் போது

கல்விக்குத் துணைநின்ற பாதிரியாரை விக்கிரமன் சமுதாயத்திற்குக் காட்டியுள்ளமை புலப்படுகிறது.

**மனிதநேயம்**

சிங்காரி ஒரு சராசரிப் பெண். வெளியூர் சென்று அரிசி வாங்கிவருகிறாள். அவ்வேளையில் தொடர்வண்டி நிலையத்தில் காவல்துறையினரால் அரிசி கடத்தியவர்களுள் இவளும் ஒருவராகப் பிடிக்கப்படுகின்றாள். அப்பொழுது செய்வதறியாது மனம் வருந்திக் கலங்குகிறாள். அச்சமயம் அங்கு நின்ற கேசவமூர்த்தி, "ஆமாய்யா... நான்தான் சொல்கிறேனே! நம்பிக்கை இல்லையா? நாங்கள் இரண்டு பேருமாகத்தான் கொண்டுவந்தோம். வயசுப் பெண் கேஸ் நடக்கிற வரையில் எதற்கு ஐயா உட்கார்ந்திருக்கணும்? அதுவரையில் நானிருக்கிறேன். அவளை விட்டுவிடுங்க"[62] என்கிறான்.

முன்பின் அறிமுகம் இல்லாவிட்டாலும் ஒரு வயதுப் பெண்ணைக் காவல்துறையினரிடமிருந்து காப்பாற்றும் எண்ணத்துடனும், அதற்காகப் பழியைத் தன்மீது சுமத்திக்கொண்டு அவளது கலக்கத்தைப் போக்கியதுமாகிய மனிதநேயமிக்க பாத்திரமாகக் கேசவமூர்த்தியை விக்கிரமன் படைத்துள்ளார்.

**காதலுக்குத் துணை**

'கதையும் கல்யாணமும்' என்ற சிறுகதையில் நல்லம்மா அவ்வூர் முத்தையனைக் காதலிக்கிறாள். அதைத் தந்தையிடம் தெரிவிக்கப் பயந்து கொண்டிருக்கிறாள். அவரோ வேறு மாப்பிள்ளைக்கு நிச்சயம் செய்துவிடுகிறார். நல்லம்மா தன் அண்ணனிடம் சென்று தன் காதலைக் கூறி நிறைவேற்றுமாறு வேண்டுகிறாள். அப்போது அவன் தந்தையிடம்

விபரத்தைக் கூறித் தங்கையை அவன் விரும்பிய முத்தையனுக்குத் திருமணம் முடிக்க வேண்டுகிறான்.

அவன் தந்தை அவனை மகன் என்றுகூடப் பார்க்காமல் அடித்து விரட்டி அவர் நினைத்த மாப்பிள்ளைக்குத் திருமணம் செய்துகொடுக்க ஏற்பாடுகளைச் செய்கிறார். அப்போது அண்ணன் மாரிச்சாமி "இந்தக் கல்யாணத்தை நடக்கவிடாமல் செய்யாவிடில் நான் மாரிச்சாமி இல்லை"[63] என்று சபதமிடுகிறான். இதனால் மாரிச்சாமி தன் தங்கையின் காதலை நிறைவேற்றத் தந்தையை எதிர்த்து நிற்கும் மனஉறுதி மிக்க பாத்திரமாகப் படைக்கப்பட்டிருப்பதை அறியமுடிகிறது.

**தாய்மைப் பண்பினை ஏற்றல்**

'மாற்றாந்தாய்' சிறுகதையில் மனைவியை இழந்த நாராயணனின் மனநிலை "ஒன்பது மணிக்குள் சமையல் ஆகி, குழந்தைகளுக்குப் போட்டு, தானும் சாப்பிட்டு ஆபீஸுக்குப் போவதற்குள், தான் படும் கஷ்டத்தைவிட அந்தச் சின்னஞ்சிறு குழந்தைகள் படும் வேதனைதான் அவனை அதிகம் வாட்டியது"[64] எனச் சித்திரிக்கப்படுகிறது.

ஒவ்வொரு குடும்பத்திலும் பெண்கள் குழந்தைகளை வளர்ப்பதற்குப் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாவர். தன் மனைவியை இழந்த நிலையில் ஓர் ஆண்மகன் குழந்தைகளை வளர்ப்பதைக்கூட ஒரு பொருட்டாக எண்ணாது தன் பிள்ளைகள் தாயில்லாமல் படும் துன்பத்தை எண்ணி வருந்தும் நிலையினை விக்கிரமன் நாராயணன் பாத்திரப்படைப்பு மூலம் விளக்குகிறார்.

## தொழிலில் மேன்மை

'அரசனூர் பாலம்' சிறுகதையில் வேலாயுதம் கள்ளக்கடத்தலைக் கண்டுபிடிக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தான். அவனுக்கு, அவ்வழியில் பொருட்களை எடுத்துச் செல்லும் பூங்காவனத்தின் மீது ஆசை ஏற்படுகிறது. வேலாயுதத்திற்குத் துணையாகக் கோதண்டபாணியும் திகழ்கிறான். அவன் கடத்தல் சந்தேகப்பேர்வழியாக வேலாயுதத்திடம் மூன்றுபேரை எடுத்துக்கூறுகிறான். அதில் பூங்காவனமும் ஒன்று. வேலாயுதம் பூங்காவனத்தின் மீது கொண்ட காதலால் அவள் கடத்தல் தொழிலில் ஈடுபடுவதை ஏற்றுக்கொள்ள மறுக்கிறான். அவ்வேளையில் கோதண்டபாணி "தம்பி வேலாயுதம் வெளுத்ததெல்லாம் பால்னு நினைக்காதே நம்ம டூட்டியை நாம் செஞ்சாக வேணும் ரொம்ப யோக்யன் கணக்கா எல்லாரும் நடப்பாங்க. எந்தப் புத்திலே பாம்பிருக்கிறது என்பதைக் கண்டுபிடிப்பதுதான் சாமர்த்தியம்..."[65] என்கிறான்.

இன்னார், இனியர் என்று கருதாது எத்தொழிலிலும் நேர்மையுடன் திகழ்தல் வேண்டும் என்பதை எடுத்துக்காட்டுவதாகக் கோதண்டபாணி பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

## அஃறிணை உயிர்களிடத்து அன்புகாட்டல்

மூர்த்தி, கருணாகரன் வீட்டில் வேலை செய்பவன். ஏிய குடிசை வீட்டில் மூன்று குழந்தைகளோடு குடும்பம் நடத்திவந்தான். தன் முதலாளி கருணாகரன் வீட்டில் வளர்ந்த பூனைகளும், குட்டிகளும் தொல்லை கொடுப்பதாக எண்ணி எடுத்துச்செல்லுமாறு மூர்த்தியிடம் கூறினான். மூர்த்தி அப்பூனைகளை எங்கும் விட்டுவிடாமல் தன் குடிசை வீட்டிற்கே கொண்டுவந்து வளர்த்துவந்தான். ஒருநாள் வெள்ளத்தால் குடிசையை நீர் சூழ்ந்துகொண்டதையறிந்து பூனைகளும், குட்டிகளும் என்ன ஆனதோ

என்று முதலாளி கருணாகரன் வருந்துகிறான். அவ்வேளையில் "பூனைக்குட்டிகளைப் பார்த்தால் என் பிள்ளைகளுக்குக் கொள்ளை ஆசை. ஆளுக்கொரு பூனைக்குட்டியை எடுத்துக்கொண்டனர். முழங்கால் மட்டும் உள்ள தண்ணீரில் நனைந்து கொண்டு அருகே உள்ள கார்ப்பரேஷன் பள்ளியில் தலைமையாசிரியர் அறையில் மெத்தையில் மிகவும் பத்திரமாக வைத்துவிட்டனர்"[66] என்றான் மூர்த்தி. இதனால், அஃறிணை உயிர்களிடத்தும் அன்பு கொண்டு அரவணைக்கும் போக்குடைய பாத்திரமாக மூர்த்தி படைக்கப்பட்டுள்ளமை விளங்கும்.

## மறக்க இயலாத உணர்வுகள்

'புத்துயிர்' சிறுகதையில் தங்கம் துணைப்பாத்திரமாகத் திகழ்கிறாள். அவள் முன்பு மனதால் விரும்பிய ரகுராமனைச் சூழ்நிலை காரணமாகப் பிரிந்து, வேறொருவருடன் திருமணமாகி வாழ்கிறாள். அந்நிலையில் மீண்டும் ஒருநாள் ரகுராமனைச் சந்திக்கும் நேரம் வருகிறது. அப்போது தன் பழைய நினைவுகளுடன் "எவ்வளவோ இன்பங்கள் எனக்கு அளிக்கப்படுகின்றன. பணக்குறைவா? ஆள் குறைவா? கணவரது அன்புக்குக் குறைவா? ஆனால் பாலிய பாசத்தின்மீது வீழ்ந்த ஓர்அடி இருக்கிறதே அது என் இதயத்தைவிட்டு அகலவேயில்லை எப்படியோ சமாளித்து மறந்துபோகத்தான் பார்த்தேன். வேதனை மறந்தாலும் வேகம் மாறவில்லை"[67] என்கிறாள்.

ஒரு பெண் தான் முன்பு விரும்பியவனை விடுத்து, சூழ்நிலையால் வேறொருவனைத் திருமணம் செய்து வாழ்ந்தாலும், முன்பு விரும்பியவனைச் சந்திக்கும் வேளையில் அடிமனதில் ஆழப்பதிந்த நினைவுகளை மறக்க இயலாது தவிக்கும் நிலையை அறியமுடிகிறது. காலங்கள் பல கடந்தாலும்

அந்த நினைவுகளும் உணர்வுகளும் மீண்டும் தோன்றுவதையும் மனத்தால் களங்கம் இல்லாமல் புத்துயிர் பெற்ற பழைய நட்பை எண்ணி ஆனந்தப்படும் பாத்திரமாகத் தங்கத்தை விக்கிரமன் படைத்துள்ளார்.

## பணத்தின் இன்றியமையாமை

'நீலரிப்பன்' சிறுகதையில் கேசவனின் மனைவி பார்வதி துணைப்பாத்திரமாகத் திகழ்கிறாள். கணவருக்குத் துணையாக சென்னைப் பட்டணத்தில் வசிப்பவருக்கு வெளிஉலகமே தெரியாது. பணம் செலவாகும் என்பதால் இருவரும் எங்கும் செல்வதில்லை. கேசவன் தான்உண்டு தன் வேலை உண்டு என்று வாழ்பவன். பார்வதியின் தங்கை, பட்டணத்தைச் சுற்றிப் பார்க்கச் சென்னை வருகிறாள். ஒருநாள் வெளியில் செல்லும் சூழல் ஏற்படுகிறது. பணத்தட்டுப்பாட்டால் மைத்துனி விரும்பிக் கேட்ட நீலரிப்பனைக்கூட வாங்காமல் வீட்டிற்கு வந்துவிடுகின்றனர். தங்கை ஊருக்குக் கிளம்பும் முன் அந்த நீல ரிப்பனை வாங்கிவந்து அவளுக்குச் சூடித் தன் கணவனிடம் "என்னை அப்படிப் பார்த்தீங்களே, ஸ்டேஷனில்...? நீங்கள் வாங்காவிட்டால் நானும் அதுபோல் சும்மா இருந்துவிடமுடியுமா? ஓரணா, அரையணா என்று எட்டணா சேர்த்து வைத்திருந்தேன்"[68] என்கிறாள்.

வாழ்க்கைக்குத் தேவையான இன்றியமையாத பொருள் பணம் பிறர் தன்னை நாடிவருவதற்கும் தன்னை நேசிப்பதற்கும் தன் குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றுவதற்கும் முழுமுதற் காரணமாகத் திகழ்வது பணம். பணத்தால் தன் குடும்பத்திற்கு இழுக்கு நேரா வகையில் தான் சிறுகச் சிறுகச் சேமித்த பணத்தைக் கொண்டு தன் தங்கைக்கு ரிப்பன் வாங்கிக்கொடுத்துத் தன் குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றும் பெண்ணாகப் பார்வதி படைக்கப்பட்டுள்ளாள்.

**தாய்மை உணர்வு**

'மாற்றாந்தாய்' என்னும் சிறுகதையில் நாராயணனின் இரண்டாவது மனைவி ஹேமா. இவள் சீதாவைப் பெற்றவள் இல்லையென்றாலும் அவள்மீது கொண்ட அன்பால் தாய்மை உணர்வுடன் செயல்படுகிறாள். இதனை, "காலையில் அவள் எழுவதற்கு முன்னமே காப்பியைப் போட்டுக்கொண்டு போய் எழுப்புவாள். சீதா இரண்டு மூன்று வருடங்களுக்கு முன் விட்ட படிப்பைத் தொடர்ந்து பள்ளியில் சேர்ந்து படிக்க ஏற்பாடு செய்தாள்"[69] என்பது உணர்த்தும்.

இவ்வுலகமானது மாற்றாந்தாய் என்றாலே, முதல் தாரத்து மனைவியின் குழந்தைகளைத் துன்புறுத்துபவள் என்ற கண்ணோட்டத்துடன்தான் பார்க்கிறது. அக்குழந்தைகளைத் தாயன்புடன் நேசிக்கும் பெண்களும் இவ்வுலகத்தில் இருக்கிறார்கள் என்பதை எடுத்துக்காட்ட ஹேமாவைப் படைத்துள்ளார் விக்கிரமன்.

**உதவி மனப்பான்மை**

'தங்க வளையல்' சிறுகதையில் மஞ்சுளாவின் திருமண நாளன்று சாவித்ரியின் கணவருக்கு நகைக்கடையில் இரண்டு தங்க வளையல்களை ஒப்படைக்கும் நெருக்கடியான சூழல் ஏற்படுகிறது. அப்போது மஞ்சுளா திருமணம் முடிந்த நிலையில் சாவித்ரியிடம் "இப்போது ரூபாயாகக் கொடுத்தாலும் பயன்படாது மார்வாடிக் கடை காலையில் திறந்து பணம்கட்டி அதை மீட்டுப் போய் ஸ்டாக்கில் சேர்க்க முடியாது. இதோ இந்த வளையல்களை அதே இடத்தில் வைத்துவிடச் சொல்லு"[70] என்கிறாள். நட்புள்ளம் கொண்டவர்கள் இன்பத்தில் பங்குகொள்வதோடு மட்டுமின்றித் துன்பத்திலும் பங்குகொள்வர். நட்பின் இலக்கணத்திற்கு உரமேற்றி

வாழ்க்கையின் மேன்மைக்கு அடிகோலும் பாத்திரமாக மஞ்சுளா படைக்கப்பட்டுள்ளாள்.

'சந்திரமதி பொன்னையா' சிறுகதையில் தேவானை தன் மனத்தால் விரும்புபவன் துன்பமுற்ற காலத்தில் அவனுக்கு உறுதுணையாய்த் தொண்டு செய்யும் பாத்திரமாகத் திகழ்கிறாள்.

## எதிர்த்தலைமைப் பாத்திரங்கள்

தலைமைப் பாத்திரத்தின் செயல்களுக்கு எதிர்முனையில் இருப்பவர்களே எதிர்த்தலைமைப் பாத்திரங்களாவர். தலைமைப் பாத்திரத்திற்கு இணையாக இப்பாத்திரம் இருந்தாலும் செயல்பாட்டு நிலையில் மட்டும் வேறுபாடு இருக்கும். இப்பாத்திரம் தன்னுடைய வலிமையில்லாத கொள்கைப் பிடிப்பினைக் கொண்டு தீச்செயல்களைப் புரிபவர்களாகவே இருப்பார்கள். இவ்வகைப் பாத்திரங்களும் அறிமுகப்படுத்தப்பட்டுப் பலநிலைகளில் வளர்ச்சிபெற்று இறுதியில் முழுமை பெறுவார்கள். அத்தகைய முழுமை பெரும்பாலும் வீழ்ச்சியாக இருக்கும். எனவே சிறுகதை வளர்ச்சிக்கு எதிர்த்தலைமைப் பாத்திரங்களும் தேவை என்பதை மறுக்கவியலாது. இவ்வகையில் பிறன்மனைவியை அடைய விரும்புதல், பழிவாங்கத் திட்டமிடல் ஆகிய இயல்புடையவர்களாக ஆண் எதிர்த்தலைமைப் பாத்திரங்களையும், அறிவுரையை ஏற்காமை, வெறுப்புணர்வு ஆகிய தன்மை உடையவர்களாகப் பெண் எதிர்த்தலைமைப் பாத்திரங்களையும் விக்கிரமன் படைத்துள்ளார்.

## பிறன்மனைவியை அடைய விரும்புதல்

'விளையாட்டுக் கல்யாணம்' சிறுகதையில் சின்னாயியை மனைவியாக அடையத் துடிக்கிறான் கந்தன். சின்னாயியின் கணவன் முருகன் வெளியூர்

சென்று வெகுநாட்களாகக் கடிதப் போக்குவரத்து இல்லாமல் இருக்கிறான். அவ்வூர்க் கங்காணியும் சின்னாயியிடம் உன் கணவன் இறந்திருக்கலாம் எனக் கூறுகிறான். மனமுடைந்த நிலையில் சின்னாயி இருக்கும் வேளையில், "கந்தன் சின்னாயியை அழைத்துக்கொண்டு ஊருக்கு அப்பாலுள்ள அஞ்சலையாற்றின் மத்தியிலுள்ள சிவன் திட்டில் குடியேறினான்."[71] இதன் மூலம் தான் விரும்பியவள் மற்றொருவனு ன் திருமணம் முடித்து, குழந்தைகளோடு வாழ்ந்தாலும் தாலிகட்டிய கணவன் வெளியூர் செல்லும் தருவாயைப் பயன்படுத்திப் பிறன் மனைவியை அடைய விரும்பும் எண்ணம் கொண்டவனாகக் கந்தன் படைக்கப்பட்டுள்ளமை விளங்கும்.

## பழிவாங்கத் திட்டமிடல்

தேவானை பொன்னையா மீது காதல் கொள்கிறாள். ஆனால் பொன்னையா கலையின் மீது நாட்டம் கொள்கிறார். கண்ணப்பன் தேவானையை அடைய விரும்புகிறான்.

"அந்தக் கிடுகிடு பள்ளத்தில் தள்ளிவிட வேண்டும்...' தவறி விழுந்துவிட்டான் எனக் கதை கட்டிவிட வேண்டும்... இல்லாவிடில் உலாவச் சென்றவரைக் காணோம் என்று கூறிவிட வேண்டும்"[72] என்று பொன்னையாவைப் பழி தீர்க்கத் திட்டமிடுகிறான். தன் காதலுக்கு இடையூறாக இருப்பவர்களை எந்தவிதத்திலும் பழிதீர்க்கும் எண்ணம் கொண்ட எதிர்த்தலைமைப் பாத்திரமாகக் கண்ணப்பனைச் 'சந்திரமதி பொன்னையா' சிறுகதையில் விக்கிரமன் படைத்துக் காட்டியுள்ளார்.

'சோதனை' என்னும் சிறுகதையில் ரங்கசாமி அலுவலகத்தில் வேலை பார்ப்பவன். ரங்கசாமி மீது பொறாமை கொண்டவன் குமாஸ்தா கேசவமூர்த்தி. இவன் அலுவலக மேலதிகாரியிடம் ரங்கசாமி இல்லாதபோது

அவனைப் பற்றிப் பழிகூறி வேலையை விட்டுத் துரத்திவிடும் எண்ணம் கொண்ட எதிர்த்தலைமைப் பாத்திரமாகத் திகழ்கிறான்.

பாஸ்கரராவ், தாயில்லாத தன் மகள் பிரியதர்ஷணியின் காதலை வெறுத்து, காதலனைத் தீர்த்துக்கட்ட எண்ணுகின்றான். காதலன் தன் மகளுடன் உரையாடிக் காதலை வளர்க்கிறான் என்பதை அறிந்து "உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைத்துவிட்ட அந்தத் துரோகி, இன்னும் உன்னுடன்தானே இருக்கிறான்? அவனை எப்படியாவது ஒழித்துவிட வேண்டும்"[73] என்கிறார் தந்தை. காதலுக்கு முக்கியத்துவம் கொடுக்காது தன் மகளின் விருப்பத்தை நிறைவேற்றாது பழிவாங்கும் எண்ணம் கொண்ட பாத்திரமாகக் 'கல்நெஞ்சம்' சிறுகதையில் பாஸ்கரராவ் படைக்கப்பட்டுள்ளார்.

## பெண் எதிர்த் தலைமைப் பாத்திரங்கள்

### அறிவுரையை ஏற்காமை

விமலா, மாமியார் சாந்தலெட்சுமியின் அறிவுரைகளை ஏற்று நடப்பவள் இல்லை. மாமியார் கூறும் ஒவ்வொரு அறிவுரையையும் பெரிய துன்புறுத்தல் எனக் கருதுபவள். ஒருநாள் மாமியாரின் அறிவுரையை எதிர்த்துப் பேசித் தாய்வீடு செல்லும் நோக்கோடு அவளது கணவன் ஆனந்திடம் "நான் அப்போதே புறப்பட்டுப் போயிருப்பேன், உங்களிடம் ஒரு வார்த்தை கூற விரும்பினேன். இனி என்னால் இந்த வீட்டில் இருக்க முடியாது"[74] எனக் கூறி வீட்டைவிட்டுக் கிளம்புகிறாள்.

பெண்கள் குடும்பத்தில் மாமியார், மாமனார் கூறும் கருத்துக்களையோ, அவர்களது அறிவுரைகளையோ விரும்பாமல் அவர்களிடம் எதிரிகள் போல் நடந்துகொள்ளும் தன்மையையும், அதனால் குடும்பத்தின் அமைதி குலையும் நிலையையும் விக்கிரமன் 'தெய்வத்தாய்' கதையில் விமலா பாத்திரத்தின் மூலம் உணர்த்தியுள்ளார்.

**வெறுப்புணர்வு**

'மாற்றாந்தாய்' சிறுகதையில் தாயில்லாத குழந்தைகளுக்கு ஆதரவாக இருக்க ஹேமாவை இரண்டாம் மணம் புரிந்த நாராயணனுக்கு மகள் சீதாவே பெரும் இடையூறாகிவிடுகிறாள். "சீதாவுக்குச் சின்னம்மாவின்மீது கசப்பும், இல்லாததற்கெல்லாம் ஆத்திரமும் அதிகமாகியே வந்தன. சுத்தமாக, சமையலுக்காகக் கொண்டு வைத்திருக்கும் குடத்துநீரை, சீதா எச்சில் கையோடு குடிப்பதற்காக உபயோகப் படுத்திவிடுவாள்"[75] இதன் மூலம் வெறுப்புணர்வோடு செயல்படும் எதிர்த்தலைமைப் பாத்திரமாகச் சீதா படைக்கப்பட்டுள்ளமை விளங்கும்.

இவ்வாறாக விக்கிரமனின் சிறுகதைகளில் எதிர்த்தலைமைப் பாத்திரங்களாக ஆண், பெண் இருபாலரும் படைக்கப்பட்டுள்ளமை தெளிவாகும்.

**சார்புப் பாத்திரங்கள்**

சார்புப் பாத்திரங்கள் தலைமைப் பாத்திரங்களைப் போன்றும், துணைமைப்பாத்திரங்கள் போன்றும் திகழ்பவர் அல்லர். இவர்கள் பிற பாத்திரங்களைச் சார்ந்து தன் பண்பு மற்றும் செயல்பாட்டைச் சிறு கதைகளில் வெளிப்படுத்துவர்.

விக்கிரமனின் சில சிறுகதைகளில் இப்பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. இத்தகைய சார்புப்பாத்திரங்கள் ஆண், பெண் ஆகிய இருபாலரிலும் படைக்கப்பட்டுள்ளனர். ஊதியம் பெறல், உரிமைகொளல், அன்பால் அரவணைத்தல், உழைப்பில் உதவி ஆகிய இயல்புடையவர்களாக இப்பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளனர்.

**ஊதியம் பெறல்**

'காய்ந்த மல்லிகை சிறுகதையில் இடம்பெறுபவன் மணி; இவனது படிப்பு முடிந்ததும் அவனது அப்பா முதலியாரிடம் அழைத்துச் செல்கிறார். முதலியார் அவனது படிப்பை அறிந்து தனது பண்ணையில் கணக்குகளை எழுதும் பணியைச் செய்யச் சொல்லி "எனக்கும் அடிக்கடி இந்த மார்புவலி வந்து பெரும் தொந்தரவைக் கொடுக்கிறது... என்னால் எதையும் கவனிக்கவே முடியவில்லை... இவனிருந்தால் வருகிற கடிதங்களுக்குப் பதிலெழுதவும், கணக்குகளைப் பார்க்கவும் சௌகரியமிருக்கும்"[76] என்றார் முதலியார்.

மணியின் தந்தைக்கு அவனை மேற்படிப்புப் படிக்க வைக்க ஆசை இருந்தாலும் பணப்பற்றாக்குறையால் படித்த வேலைக்கேற்ற ஊதியத்தைப் பெற்று வாழ எண்ணும் நடுத்தரக் குடும்பங்களின் பிரதிநிதியாக மணி பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

**உரிமை கொள்ளல்**

'நீலரிப்பன்' சிறுகதையில் பரிமளம் சார்புப் பாத்திரமாகத் திகழ்கிறாள். சென்னையில் வாழும் அக்காள் பார்வதியின் வீட்டிற்குச் சென்று சென்னைப் பட்டணத்தைச் சுற்றிப் பார்க்கச் செல்லும்போது அவளது அக்காவிடம் அவளுக்குப் பிடித்த நீலரிப்பனை வாங்கி அணிந்துகொள்ளும் பாத்திரமாக உள்ளாள். இதனை "அதோ ரிப்பன்கடை. விளக்கு வெளிச்சத்தில் ஒவ்வொரு வண்ணமும் ஒளிவீசியது. பார்வதி அந்தக் கடையைத் தாண்டக் காலடி எடுத்துவைத்தாள். அக்கா! என்றாள் பரிமளம். 'நீலரிப்பன்...' என்றாள் அவள்"[77] என்பதிலிருந்து அறியமுடிகிறது.

உடன்பிறந்த சகோதரியிடம் உரிமையோடு எதையும் கேட்டு வாங்கும் தன்மையுடைய பாத்திரமாகப் பரிமளம் படைக்கப்பட்டுள்ளாள்.

### அன்பால் அரவணைத்தல்

தான் பெற்ற பிள்ளை இல்லையென்றாலும் பிள்ளையில்லாக் குறையைப் போக்கவும், அனாதையாய், நிர்க்கதியாய் நின்ற குழந்தைக்கு வாழ்வளிக்கும் விதமாகவும் 'சந்துரு' என்ற குழந்தையை வளர்க்கிறான் அனந்து. அவனிடம் வளரும் சந்துரு மிகவும் சுட்டித்தனமாகவும், சுறுசுறுப்போடும், அறிவோடும் விளங்குவதைப் பார்த்து அனந்துவின் நண்பன் மிகவும் ஆச்சரியப்படும் விதமாக 'சந்துரு' பாத்திரத்தை 'அன்பும் ஆசையும்' சிறுகதையில் விக்கிரமன் படைத்துள்ளார். உலகில் ஆசையால் ஒரு பொருளை விரும்புபவர்களும் உண்டு; அன்பால் ஒரு பொருளை விரும்புபவர்களும் உண்டு என்ற கருத்தையும் இப்பாத்திரத்தின் மூலம் வெளிக்காட்டியுள்ளார்.

### உழைப்பில் உதவி

'தர்மமூர்த்தியின் தயவு' சிறுகதையில் கபாலிக்கு உதவியாகப் பழக்கடை நடத்தி வாழ்க்கை நடத்தும் பாத்திரமாக மனைவி செல்லாயி திகழ்கிறாள். கோயில் தர்மகர்த்தா கபாலியின் கடையை எடுத்துவிடுமாறு கூறுகிறான். அவன் எடுக்கவில்லை. பிழைப்பிற்காகக் கடையை நடத்துகிறான். அதனால் கோபம் கொண்ட தர்மகர்த்தா ஆட்களை ஏவி அவன் கடையை உடைக்கின்றனர். அப்போது "பகல் சாப்பாடு கொண்டு வந்த கபாலியின் மனைவி திடுக்கிட்டு நின்றுவிட்டாள். விபரம் தெரிந்து கொண்டவள் ஒப்பாரி வைத்துச் சாப்பிடத் தொடங்கினாள்"[78] என்பதிலிருந்து பிழைப்பவன் தொழிலைக் கெடுக்கும் ஆதிக்க வர்க்கம் நடத்தும் இழிநிலையைக் காட்டியதோடு, தொழிலில் நட்டம் ஏற்படும்போது எந்த மனிதரும் குடும்பம் நடத்துவது எளிதான காரியமல்ல.

அதனால் உடலும், மனமும் சோர்ந்துவிடுகின்றது என்ற கருத்தையும் செல்லாயி பாத்திரம் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

இவ்வாறாக சார்புப் பாத்திரங்கள் விக்கிரமனின் சிறுகதைகளில் தேவைக்கேற்ப அளவாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

## தொகுப்புரை

சிறுகதையில் மிகவும் முக்கியமானது பாத்திரப் படைப்பாகும். இத்தகைய பாத்திரங்களைப் பால், வயது, பண்பு, வாழ்க்கைமுறை, மதம், அறிவுநிலை, கதை அடிப்படை போன்ற கூறுகளை அடிப்படையாகக் கொண்டு முதன்மைப்பாத்திரம், துணைமைப்பாத்திரம், எதிர்த்தலைமைப் பாத்திரம், சார்புப்பாத்திரம் என வகைப்படுத்துவர்.

முதன்மைப் பாத்திரங்களின் கீழ் ஆண் முதன்மைப் பாத்திரங்களும் பெண் முதன்மைப் பாத்திரங்களும் இடம்பெற்றுள்ளன. ஆண் முதன்மைப்பாத்திரங்கள் தியாக வாழ்க்கை மறவா நட்பு, நட்பிற்கு முக்கியத்துவம் கொடுத்தல் அஞ்சாத காதல், சமுதாயக் கொல்லி, சமுதாய நண்பன், குறிக்கோளுடன் செயல்படல், பிறர் குழந்தையைத் தன் குழந்தையாய் வளர்த்துக் காத்தல், அஃறிணை உயிர்களிடத்து அன்பு காட்டல், தங்கையின் மீதுள்ள அன்பு, அன்பினால் வெல்லல், நேர்மையுடன் செயல்படல், அன்பிற்காகப் போராடல், பயனுள்ள வகையில் செயல்படுதல், மனிதநேயம், சிந்தித்துச் செயல்படல், கற்பின் திண்மை, பொருளாதாரச் சிக்கல், சபலப்புத்தி, சிறுபிள்ளையின் அறியாமை, சகிப்புத்தன்மை, பழமையைப் போற்றல், நம்பிக்கையுடன் செயல்படல், மொழிப்பற்று ஆகியவற்றை விளக்கும் வகையில் ஒவ்வொரு சிறுகதையிலும் படைக்கப்பட்டுள்ளனர்.

ஆண் முதன்மைப் பாத்திரங்களுள் தன் மனைவி இன்னொருவருடன் வாழ்வதையறிந்து கோபப்பட்டு அவர்களிடையே பிரச்சினையை ஏற்படுத்தாமல் அவர்கள் மகிழ்ச்சியாக வாழட்டும் என்று ஒதுங்கி, அதைப் பொறுக்காது ஆற்றில் குதித்துத் தன்னை மாய்த்துக்கொள்ளும் பாத்திரமும், காதல், சமூக வேற்றுமையையோ, உயர்வு தாழ்வையோ, இலட்சியம் செய்வதில்லை, சாதியையும் ஒரு தடையாகக் கருதுவதில்லை என்பதற்கு எடுததுக்காட்டாக விளங்கும் பாத்திரமும், காதலுக்காக எதையும் இழக்கத் துடிக்கும் நெஞ்சம் கொண்ட பாத்திரமும் குறிப்பிடத்தக்கனவாகும்.

குடியினால் ஓர் உயிரை இழந்த நிலையையும், குடிப்பழக்கம் சமுதாயத்தைக் கெடுக்கும் என்ற கருத்தையும் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற குறிக்கோள் இருந்தால் அதற்காக எவ்வளவு துன்பங்களையும் எதிர்கொள்ளும் உறுதியும், மனவலிமையும் வேண்டும் என்பதையும் விளக்கும் வகையில் பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளன.

தீமை செய்தவர்களே ஆயினும் அவர்களுக்கு நல்லதே நடக்கவேண்டும் என்று எண்ணும் பாத்திரமாக நரசிங்கராவைப் படைத்துள்ளார். தான் பெற்ற மகளேயானாலும் தன் விருப்பத்திற்கு மாறாகச் செயல்பட்டால் பழிவாங்கத் துடிக்கும் தந்தையையும் காதலுக்காக எதையும் செய்யத்துடிக்கும் காதலனையும் பாத்திரமாகப் படைத்துள்ளார்.

அலுவலகத்தில் கோப்புகளை ஒளித்து வைத்துவிட்டுக் காணவில்லை என நாடகமாடுபவர்களிடத்தில் பணிசெய்வதற்குச் செய்யாமல் இருப்பதே மேல் என்று சகித்துக்கொண்டு வேலையைவிட்டு விலக நினைக்கும் பாத்திரமாகச் சேதுவைப் படைத்துள்ளார். புதிய பகட்டான வாழ்வை விடுத்துப் பழைய வாழ்க்கையை விரும்பும் ராஜகோபாலன் பாத்திரத்தையும்

காட்டியுள்ளார். பெற்ற மகளேயானாலும் தன் விருப்பத்திற்கு மாறாகச் செயல்பட்டால் பழிவாங்கத் துடிக்கும் கொடூரமான பாத்திரத்தையும், தெய்வ நம்பிக்கையும் மன உறுதியும் இருந்தால் நினைத்தது நடக்கும் என்ற எண்ணம் உடைய பாத்திரத்தையும் தாய்மொழியான தமிழில் எந்த ஒரு கருத்தையும் உணர்த்தமுடியும் என்ற நம்பக்கையுடைய பாத்திரத்தையும் விக்கிரமன் ஆண் முதன்மைப் பாத்திரங்களாகப் படைத்துள்ளார்.

பெண் முதன்மைப்பாத்திரங்கள் கணவன்மாரைப் பிரியாதிருத்தலை விரும்புதல், கௌரவத்தை விட்டுக் கொடுக்காதிருத்தல், தாய்மையுணர்வு, தனித்து வாழும் எண்ணப்போக்கு, பாதுகாப்புணர்வு, பிறர் துன்பத்துக்கு வருந்துதல், வறுமையிலும் சொத்தைக் காத்தல், விருந்தினரை வரவேற்றல், தவறை உணர்ந்து திருந்துதல், அன்பு, துணிவு மனப்பான்மை ஆகியவற்றை விளக்கும் வகையில் ஒவ்வொரு சிறுகதையிலும் படைக்கப்பட்டுள்ளனர்.

கணவனைப் பிரிந்திருக்கும் நிலையில் பெண்களின் மனம் கொள்ளும் வேதனையையும் அவர் அருகில் இருக்கும்போது பெண்கள், அடையும் மகிழ்ச்சியையும் பாத்திரங்களாகக் காட்டியதோடு தன்னை விட்டு மகன் பிரிந்து வாழ்ந்தாலும் அவனுக்கு ஒரு துன்பம் வரும்போது உதவத் துடிக்கும் தாய்மையுணர்வை சாந்தலெட்சுமி பாத்திரத்தின் மூலம் உணர்த்தியுள்ளார்.

ஒரு பெண் தனியாகத் தன் குழந்தைகளோடு எவ்விதக் களங்கமும் இல்லாமல் தனித்து வாழமுடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக நீலா பாத்திரத்தைப் படைத்துள்ளார். பெண்கள் தன் உரிமையை விட்டுக்கொடுக்காது வறுமையிலும் பரம்பரைச் சொத்தைக்காப்பதில் உறுதியடையவர்கள் என்பதை ‘செல்வி’ பாத்திரத்தின் மூலம் காட்டியுள்ளார்.

சூழ்நிலையால் தவறு செய்தாலும் அந்தத் தவற்றை உணர்ந்து திருத்திக்கொண்டு ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழநினைக்கும் பெண்ணையும் பாத்திரமாகப்படைத்துள்ளார்.

சிறுகதையின் மையக் கருத்திற்கு நேரடியாகப் பயன்படும் நிலையில் தலைமைப்பாத்திரங்களும், எதிர்த்தலைமைப் பாத்திரங்களும் அமையும். சில பாத்திரங்கள் ஆங்காங்கே உள்ள நிகழ்ச்சிகளில் மட்டும் இடம்பெறும் இப்பாத்திரங்கள் துணைமைப்பாத்திரங்கள் ஆகும். ஆண் துணைமைப் பாத்திரங்கள் கல்வி, மனிதநேயம், காதலுக்குத்துணை, தாய்மைப் பண்பினை ஏற்றல், தொழிலில் மேன்மை, அஃறிணை உயிர்களிடத்து அன்புகாட்டல் ஆகியவற்றை விளக்கும் வகையில் படைக்கப்பட்டுள்ளனர்.

முன்பின் அறிமுகம் இல்லாவிட்டாலும் ஒரு வயதுப் பெண்ணைக் காவல்துறையினரிடமிருந்து காப்பாற்றும் எண்ணத்துடனும், அதற்காகப் பழியைத் தன்மீது சுமத்திக்கொண்டு அவளது கலக்கத்தைப் போக்கியதுமாகியமனிதநேயமிக்க பாத்திரமாகக் கேசவமூர்த்தியையும் தன் மனைவியை இழந்த நிலையில் ஓர் ஆண் மகன் குழந்தைகளை வளர்ப்பதைக் கூட ஒரு பொருட்டாக எண்ணாது தன் பிள்ளைகள் தாயில்லாமல் படும் துன்பத்தை எண்ணிவருந்தும் நாராயணன் பாத்திரத்தையும் ஆண் துணைமைப் பாத்திரங்களாகக் காட்டியுள்ளார்.

பெண்துணைமைப் பாத்திரங்கள் பணத்தின் இன்றியமையாமை, தாய்மை உணர்வு, உதவி மனப்பான்மை ஆகியவற்றை விளக்கும் வகையில் படைக்கப்பட்டுள்ளனர். பணத்தால் தன் குடும்பத்திற்கு இழுக்கு நேரா வகையில் தான் சிறுகச் சிறுகச் சேமித்த பணத்தைக் கொண்டு தன் தங்கைக்கு அவள் விரும்பிய ரிப்பனை வாங்கிக் கொடுத்துத் தன் குடும்ப கௌரவத்தைக்

காக்கும் இயல்புடைய பெண்ணாகத் துணைமைப் பாத்திரம் விளங்குகிறது. பிறர் குழந்தைகளைத் தாயன்புடன் நேசிக்கும் பெண்களும் இவ்வுலகத்தில் இருக்கிறார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாக ஹேமா பாத்திரத்தைப் படைத்துள்ளார். நட்பின் இலக்கணத்திற்கு உரமேற்றி வாழ்க்கையின் மேன்மைக்கு அடிகோலுதலை உணர்த்துவதாகத் துணைமைப்பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

ஆண் எதிர்த்தலைமைப் பாத்திரங்கள் பிறன்மனைவியை அடைய விரும்புதல், பழிவாங்கத் திட்டமிடல் ஆகிய இயல்புகளையும் பெண் எதிர்த்தலைமைப் பாத்திரங்கள் அறிவுரையை ஏற்காமை, வெறுப்புணர்வு ஆகிய தன்மைகளையும் உடையவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

தாலி கட்டிய கணவன் வெளியூர் செல்லும் தருவாயைப் பயன்படுத்திப் பிறன் மனைவியை அடைய எண்ணும் பாத்திரத்தையும், தன் காதலுக்கு இடையூறாக இருப்பவர்களை எந்த விதத்திலும் பழிதீர்க்கும் எண்ணம் உடைய பாத்திரத்தையும் ஆண் எதிர்த்தலைமைப் பாத்திரமாகக் காட்டியுள்ளார். குடும்பத்தில் மாமியாரின் அறிவுரைகளை கேட்காமல் எதிரிகள்போல் நடந்துகொள்ளும் பெண்களைப் பெண் எதிர்த்தலைமைப் பாத்திரமாகப் படைத்துள்ளார்.

சார்புப் பாத்திரங்கள் தலைமைப் பாத்திரங்களைப் போன்றும், துணைமைப் பாத்திரங்கள் போன்றும் திகழ்பவர் அல்லர். இவர்கள் பிற பாத்திரங்களைச் சார்ந்து தன் பண்பு மற்றும் செயல்பாட்டைச் சிறுகதைகளில் வெளிப்படுத்துவர். இப்பாத்திரங்கள் ஆண், பெண் ஆகிய இரு பாலரிலும் படைக்கப்பட்டுள்ளனர். ஊதியம் பெறல், உரிமைகொள்ளல், அன்பால் அரவணைத்தல், உழைப்பில் உதவி ஆகிய இயல்புடையவர்களாகச் சார்புப்பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளன.

பணப் பற்றாக்குறையால் படித்த வேலைக்கேற்ற ஊதியத்தைப் பெற்று வாழ எண்ணும் நடுத்தரக் குடும்பங்களின் பிரதிநிதியாக மணி என்னும் சார்புப் பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது. உடன் பிறந்த சகோதரியிடம் உரிமையோடு எதையும் கேட்டு வாங்கும் தன்மையுடைய பாத்திரத்தையும் தொழிலில் நட்டம் ஏற்படும்போது எந்த மனிதரும் குடும்பம் நடத்துவது எளிதான காரியமல்ல என்பதை உணர்த்தும் பாத்திரத்தையும் சார்புப் பாத்திரமாக விக்கிரமன் படைத்துள்ளார்.

விக்கிரமன் படைத்துள்ள பாத்திரங்கள் அனைத்தும் உயிரோட்டம் மிக்கவையாக விளங்குகின்றன. ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் ஏதாவது ஒரு சூழலில் சந்தித்திருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தும் பாத்திரங்களே விக்கிரமன் சிறுகதைகளில் படைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## சான்றெண் விளக்கம்

1. மா.இராமலிங்கம், விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதைகள், ப.197

2. அலெக்சி டால்ஸ்டாய், எழுதும் கலை, ப.25

3. த.மணிமாறன், இலக்கியக்கலை, ப.80

4. ப.கோதண்டராமன், சிறுகதைக்கலை, ப.100

5. Sobert Liddell, A Trealise on the novel, P.72

6. கா.சிவத்தம்பி, தமிழில் சிறுகதையின் தோற்றமும், வளர்ச்சியும், ப.19

7. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், பக்.65,66

8. கரு.முத்தையா, ஜெயகாந்தன் நாவல்களில் பாத்திரப்படைப்பு, ப.22

9. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.5

10. மேலது, ப.9

11. மேலது, ப.65

12. மேலது, ப.15

13. மேலது, ப.54

14. மேலது, ப.29

15. மேலது, ப.38

16. மேலது, ப.88

17. மேலது, ப.92

18. மேலது, ப.101

19. மேலது, ப.679

20. மேலது, ப.114

21. மேலது, ப.140, 141

22. மேலது, ப.307

23. மேலது, ப.415

24. மேலது, ப.153

25. மேலது, ப.172

26. மேலது, ப.204

27. மேலது, ப.492

28. மேலது, ப.607

29. மேலது, ப.214

30. மேலது, ப.297

31. மேலது, ப.395

32. மேலது, ப.224

33. மேலது, ப.369

34. மேலது, ப.473

35. மேலது, ப.559

36. மேலது, ப.618

37. மேலது, ப.582

38. மேலது, ப.590

39. மேலது, ப.627

40. மேலது, ப.641

41. மேலது, ப.659

42. மேலது, பக்.686, 687

43. மேலது, ப.750

44. மேலது, ப.721

45. மேலது, ப.72,73

46. மேலது, ப.108

47. மேலது, ப.733

48. மேலது, ப.89

49. மேலது, ப.235

50. மேலது, ப.270

51. மேலது, ப.340

52. மேலது, ப.539

53. மேலது, ப.712

54. மேலது, ப.741

55. மேலது, ப.601

56. மேலது, ப.194

57. மேலது, ப.453

58. மேலது, ப.526

59. மேலது, ப.695

60. கா.மீனாட்சி சுந்தரம், சிலம்பில் துணைப்பாத்திரம், ப.6

61. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.13

62. மேலது, ப.86

63. மேலது, ப.107

64. மேலது, ப.264

65. மேலது, ப.399

*66.* மேலது, ப.*679*

*67.* மேலது, ப.*64*

*68.* மேலது, ப.*235*

*69.* மேலது, ப.*268*

*70.* மேலது, ப.*741*

*71.* மேலது, ப.*4*

*72.* மேலது, ப.*175*

*73.* மேலது, ப.*293*

*74.* மேலது, ப.*337*

*75.* மேலது, ப.*268*

*76.* மேலது, ப.*16*

*77.* மேலது, ப.*231*

*78.* மேலது, ப.*750.*

இயல் - 3

# சமுதாயச் சிந்தனைகள்

மனிதர்கள் கூடி வாழும் ஓர் அமைப்பே சமூகம் ஆகும். தனி மனிதனுக்கும், சமூகத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. "ஒழுக்கத்தின் அடிப்படையில் இணைக்கப்பட்ட தனி மனிதர்களும், அவர்களைப் பிணைக்கும் உறவுமுறைகளும் இடைவிடாத மாற்றத்திற்கு உள்ளாகின்றன. சிக்கல் மாறிக் கொண்டே இருக்கும் அடிப்படையே சமுதாயம் ஆகும்."[1] இத்தகைய சமுதாயம் விக்கிரமன் சிறுகதைகளில் பாடுபொருளாக இழையோடுகிறது. அவ்வகையில் காதல், குடும்பம், பாலியல் சிக்கல்கள், நட்பு, மனிதநேயம், மூடநம்பிக்கை, சாதிய சிக்கல்கள், உழைப்பு, நாட்டுப்பற்று, மொழிப்பற்று என அமையும் சமுதாயச் சிந்தனைகளை வகைப்படுத்தி ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## சமுதாயமும் வாழ்வும்

"மனிதனைச் சமூக விலங்கு என்கின்றனர். இதனால் மனிதனை விலங்கிலிருந்து பிரிப்பதே சமுதாயம் என்ற சொல் என்பதை உணரலாம்"[2] என்பர் அ.மு.பரமசிவானந்தம்.

ஒவ்வொரு மனிதனும் சமூகத்தோடு தொடர்பு உடையவனாக வாழ்கிறான். உலகத்தோடு ஒட்ட ஒழுகுவதுதான் வாழ்க்கை. சமுதாயம், சமூகம் என்பவை ஒரே பொருளைக் குறிக்கக்கூடிய சொற்கள். சமுதாயம் என்பது பகுத்தறிவு படைத்த மக்களினத்தோடு பிணைக்கப்பட்ட ஓர் அமைப்பு. 'Social' என்ற ஆங்கிலச் சொல் சமூகம் அல்லது சமுதாயத்தைக் குறிக்கும் 'Society' என்ற சொல்லோடு நெருங்கிய தொடர்புடையது.

"ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கிற உறவு முறைகளைத்தான் சமூகம் எனச் சொல்கிறோம்"[3] என்கிறார் அறிஞர் பாஸ்கம் சிஸ்பர்ட்.

"அறிவு படைத்த மக்கள் இனத்துள்ளும் உணர்வற்ற அடிப்படை உணர்வில்லாத மக்கள் கூட்டம் சமுதாயம் என்னும் சொல்லுக்கு இலக்காகாது."[4] சமூக உறவு முறைகள்தான் சமூகத்தை உருவாக்குகின்றன. ஒத்த தன்மைகளும் பொதுவான தன்மைகளும் கூட்டுறவும் தான் சமூகத்தின் அடித்தளங்கள். "ஒரு கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பே சமூகம்"[5] என்று கலைக்களஞ்சியம் உரைக்கும். படைப்பாளனும் இந்தச் சமூகத்தின் அங்கம் ஆவான். இந்தச் சமுதாயத்தில் அவன் காணும் காட்சிகள் படைப்பாகின்றன.

சிறுகதை என்பது எழுத்தாளனுக்குக் கிடைத்த ஆயுதம். அதை வைத்துத்தான் தனது கருத்துக்களைப் பட்டை தீட்டுகிறான். மாற்றங்களைக் காண விரும்புகிறான். புதிதாக எங்கும் அவன் செல்லாமல் தனது சமூகத்தையே கருவாக வைத்துத் தனது கதைகளைப் பதிவுசெய்கிறான். "வாழ்க்கையில் ஏற்படும் சில இரசமான நிகழ்ச்சிகளும், அனுபவங்களும், வேதனைதரும் சம்பவங்களும் எழுத்தாளனின் கற்பனையைத் தூண்டிவிடுகின்றன. ஆகவே வாழ்க்கை அனுபவங்களின் அடித்தளமே உண்மையான எழுத்தாளர்களின் கற்பனைகள்."[6]

வாழ்க்கை என்பது ஆழமான கடல். அந்தக் கடலில் மூழ்கி முத்துக்குளிக்கும்போது, அவனவனுடைய இதயப்பாங்கிற்கும், கையின் வலிமைக்கும் அவன் மூழ்கிய இடத்திற்கும் ஏற்ப, கையில் அகப்படுகிற முத்து அமைகிறது. எந்த ஓர் எழுத்தாளனும் சமுதாயத்தைச் சாராமல் தனது

படைப்புகளைப் படைப்பது என்பது எளிதானது அல்ல. இந்தச் சமூகத்தில் நிலவும் ஏதோ ஒருவித முரண்பாடுகளை அவன் காண நேரிடுகிறது. தனி ஒரு மனிதனாய் அதைத் தவிர்க்க முடியாத சூழலில் தனது படைப்புகள் மூலம் அந்த முரண்பாடுகளைக் கூறி முடிவும் கூறிவிடுகிறான் படைப்பாளன்.

**காதல்**

மனித இனம் மட்டுமின்றி பிற எல்லா உயிர்களும் உயிர் வாழ்வதற்குத் தேவைகளை எதிர்பார்த்து வாழவேண்டியிருப்பது பொதுவான ஒன்றாகும். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே மென்மையான இணைப்பை ஏற்படுத்தி வாழ்விற்கும், வளமைக்கும் அடிப்படையாகக் காதல் அமைகிறது. காதலில் இலட்சியக்காதல், நிறைவேறிய காதல், நிறைவேறாத காதல், ஒருதலைக்காதல் எனப் பல நிலைகளைக் காணமுடிகிறது. வெற்றிபெற்ற காதல், காதலர்களுக்கு மட்டுமே மகிழ்ச்சியாக அமைகிறது. ஆனால் தோல்வியுற்ற காதல்களோ காவியமாகிப் படிப்போரையும், பார்ப்போரையும் மகிழ்வித்துக் கொண்டிருக்கின்றன. எல்லா இலக்கியங்களிலும் காதல் பற்றிய செய்திகள் தொடர்ந்து பேசப்பட்டுவந்துள்ளன. இனங்களைக் கடந்து, மதங்களைக் கடந்து, சாதிகளைத் துறந்து இரண்டு இதயங்கள் இணையும் காதல் இல்லாத தேசமே இல்லை. ஆணும், பெண்ணுமாய்க் கூடி வாழும் வாழ்விற்கு அடிப்படையாய் இருப்பது காதலும் காமமுமேயாகும்.

"இன்பம், துன்பம், ஏக்கம், எதிர்பார்ப்பு, அவலம் போன்ற மொத்த உருவமாகக் காதல் அமைகிறது"[7] காதல் மனித மனங்களுக்கு மட்டுமின்றி எல்லா உயிர்களின் அடிமன உணர்வாகவும் காணப்படுகிறது. தமிழர் காதலையும், வீரத்தையும் இரு கண்களாகப் போற்றினர். "காதல் என்பது

உடலுறவு சம்பந்தமானது அன்று. உள்ளம் ஒன்றிய பண்பும், உணர்வுநிலையுமே காதல் ஆகும்”[3] என்பார் பெர்னாண்டு ரசல். விக்கிரமனின் சிறுகதைகளில் இறுதி வரை காதலியைக் கைவிடாத உண்மைக் காதலை விளக்கும் கதையாகப் ‘பொல்லாத மனசு’ என்பது அமைகிறது. போராடி இறுதியில் வெற்றிகண்ட காதலைக் காட்டுவதாகக் ‘கதையும் கல்யாணமும்’ என்ற சிறுகதை படைக்கப்பட்டுள்ளது. காதலின் ஆழத்தை உணர்த்தும் கதையாகக் ‘கல்யாணத் திருட்டு’ என்ற சிறுகதை உள்ளது. காதலின் தூய உள்ளத்தைக் காட்டுவதாகச் ‘சந்திரமதி பொன்னையா’ சிறுகதை விளங்குகிறது. காதல் அலங்கோலத்தையும் பின்னர் ஏற்படும் தெளிவையும் காட்டுவதாகக் ‘குழலோசை’ என்ற சிறுகதை அமைந்துள்ளது.

பழனியம்மாளுக்கும் சின்னக்கவுண்டனுக்கும் காதல் மலர்கிறது. இருவரும் வேறுவேறு சாதியைச் சார்ந்தவர்கள். சின்னக்கவுண்டனோ பூசாரி வேலைபார்ப்பவன். பொருளாதார வசதியும் குறைவு. இவர்கள் காதலை ஊரார் ஏற்க மறுத்து, பூசாரி வேலையை விட்டு விலக்குகின்றனர். இருவரும் எந்த எதிர்ப்பு வந்தாலும் காதலைக் கைவிடாமல் இறுதியில் ஒன்றுசேர்வதாகப் ‘பொல்லாத மனசு’ சிறுகதையை விக்கிரமன் படைத்துள்ளார். காதலுக்காக எதையும் இழக்கத் துணியும் காதலர்களின் உண்மைக் காதலையும், காதலின் ஆழத்தையும் இச்சிறுகதை மூலம் சமுதாயத்திற்குக் காட்டியுள்ளார்.

இருவருக்கும் வாழ்க்கையில் வெறுப்பு ஒன்றும் ஏற்பட்டுவிடவில்லை. வாழ்வின் இன்பதுன்பங்களைத் துறந்துவிடவில்லை. ஆனால் எனக்காக அவள், பிறந்தவீட்டுச் சுகங்களையும், மஞ்சக் காணியையும், அவளுக்காக நான் தொழிலையும் பிறர் அன்பையும் துறந்துவிட்டோம். சாமி! “காதல்னா என்னன்னு எங்களுக்குத் தெரியாது. எல்லாம் ஏட்டில் படிச்சதுதான்.

நானாவது எட்டாவது வரைப் படிச்சிருக்கேன் ஆனா அவ - அதுகூடப் படிச்சதில்லை. இயற்கையா எங்க மனசு ஒண்ணுபட்டுட்து"[9] என்பதிலிருந்து உண்மைக்காதல் தெரிகிறது.

நல்லம்மாளுக்கு அவ்வூரில் வாழும் முத்தையன்மேல் மிகுந்த அன்பு வளர்கிறது. அவள் தந்தையோ அவளைப் பட்டணத்திலிருந்துவந்த பாஸ்கர முதலியார் மகன் சுந்தரத்திற்குத் திருமணம் செய்து கொடுக்க முடிவு செய்கிறார். அவளின் காதல் உணர்வைத் தந்தையிடம் தெரிவிக்க முடியாமல் உடன்பிறந்த அண்ணனிடம் முறையிட்டு, தங்கள் காதலைச் சேர்த்துவைக்க வேண்டுகிறாள் நல்லம்மாள். அவள் அண்ணன், "வேண்டாத புருசனிடம் வாழ்க்கைப்பட்டு வேதனையோடு வாழ்நாளைக் கழிப்பதைவிட, பல வேதனைக்குட்பட்டு விரும்பியவனை மணந்து சுகமாகக் காலங்கழிக்கக் கூடாதா? என் கண்ணெதிரே என் செல்லத்தங்கையை அந்த பட்டணத்தானுக்கு - அந்தக் கிறுக்கனுக்கு கொடுக்க விடுவேனா?"[10] என்று கூறுவதிலிருந்து பெற்றோர் எதிர்த்தாலும் அவர்களின் எதிர்ப்பையும் மீறித் தங்கையை அவள் நினைத்தவனுடன் சேர்த்து வைக்கும் அண்ணன் மார்களைக் 'கதையும் கல்யாணமும்' கதையில் சுட்டிக்காட்டியுள்ளார்.

ஒருவருக்கொருவர் உயிருக்குயிராக விரும்பியபோது, தான் காதலிப்பவன் ஜேப்படி திருடன் என்பதைக் கேள்விப்பட்டதும், காதலி தன்னை மாய்த்துக்கொள்ள நினைத்தாலும் உண்மைக் காதலால் அந்நேரத்தில் காதலியைக் காப்பாற்றி அவளைத் திருமணம் செய்து கொள்ளும் காதலனைக் 'கல்யாணத்திருட்டு' கதை உணர்த்தும்.

பொருளாதார நெருக்கடியால் பலரிடமும் பணப்பையைத் திருடிவந்த ஜோதிமுத்து தன் காதலி பாரிசாதத்தின் மாமாவிடமே

திருடிவிடுகிறான். அவனோ பாரிசாதத்தின் வீட்டிற்கு வந்து திருமணத்திற்குக் கொண்டுவந்த தாலியும் அதில் திருடுபோனதாகத் தெரிவிக்கிறார். பாரிசாதம் அதை ஜோதிமுத்துவிடம் கூறுகிறாள். அவன் மனம் திருந்தி உண்மையை ஒப்புக்கொண்டு தாலியையும் பணத்தையும் மாமாவிடம் ஒப்படைத்து மன்னிப்பு கேட்கிறான்.

இதை அறிந்த பாரிசாதமோ அவனை வெறுக்காது திருமணம் செய்துகொண்டதை "ஹும்... பாரிஜாதம் அப்படிச் செய்யவில்லை. ஜோதியிடம் உயிரையே வைத்திருந்தாள். அவள் உயர் காதல் எந்தத் தடையையும் மீறியது. தணிகையில் நடந்த கலியாணத்துக்கு நான் போயிருந்தேன். அந்தத் தணிகாசலன் சந்நிதியில் ஜோதிமுத்து பாரிஜாதத்துக்கு முடிச்சுப்போட்டான்"[11] என்ற உரையாடல் மூலம் அறியமுடிகிறது. காதலன் தவறு செய்தாலும் திருந்தி மன்னிப்புக் கேட்டவுடன் அவன் மீது மேலும் அன்பு வளர்ந்து அவனையே திருமணம் செய்துகொள்ளும் பெண்மனத்தையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

தம் மனத்தில் நிலைகொண்ட காதலனைக் கடைசிவரை விரும்பி அவருக்கு உறுதுணையாக ஊன்றுகோலாக நின்று காக்கும்பொறுப்பு காதலிக்கு உண்டு என்பதை விக்கிரமன் 'சந்திரமதி பொன்னையா' என்ற கதை மூலம் புலப்படுத்தியுள்ளார்.

பொன்னையா ஒரு நாடக நடிகர். சந்திரமதி வேடம்பூண்டு நடித்ததிலிருந்து சந்திரமதி பொன்னையா எனப்பட்டார். தேவானைக்குப் பொன்னையா மீது காதல். ஆனால் இதைக் கண்ணப்பன் கவனித்து, தன் பக்கம் தேவானையை இழுக்க முயற்சித்து முடியாமல் போகவே பொன்னையாவைக் கொல்ல, சதித்திட்டம் தீட்டுகிறான். பொன்னையா உயிர்பிழைத்துவிடுகிறான்.

"நல்ல வேளையாக உயிருக்கு வந்தது வலக்காலுடன் போச்சு! இப்போது நாடகத்தில் பொன்னையா நடிப்பதில்லை. ஆனால் அவனையே நினைக்கும் தேவானை அவருக்கு ஊன்றுகோலாய் இன்றும் தொண்டுசெய்து வருகிறாள்"[12] என்பதிலிருந்து காதலின் ஆழம் புரிகிறது. காதலில் மனக்குழப்பமடைவதும் தெளிவதுமாகிய இயல்புகளைக் 'குழலோசை' என்னும் கதை வெளிப்படுத்துகிறது.

"தெய்வத்தின் வரம் இந்தக் கலை. இதைத் தெய்வத்துக்கே அல்லவா அர்ப்பணிக்க வேண்டும்? வெறும் மனித ஆசாபாசங்களை அதில் புகுத்திக் கலையை ஒரு விளையாட்டுக் கருவியாகக் கொள்ளக்கூடாது. கலையின் பெயரால் நீ உன் சொந்தப் புத்தியை இழந்தாய். உன் குரு உனக்கு இட்ட கட்டளையை மறந்தாய். இப்பொழுதாவது மாற்றிக்கொள். ஆடம்பரம் அகப்புனிதத்தை வளர்க்காது. உன்னை ஏற்பதில் எனக்கோ ஆண்டவனுக்கோ தடையேனிருக்கும்?"[13] என்பதன் மூலம் காதலில் ஒரு சிறு ஊடலால் பிரிந்தவர் சேரும் போது அப்பிரிவிற்குக் காரணமான செயலை விட்டு மனம் ஒன்றுசேர்தல் நல்லது என்பதைப் புலப்படுத்தியுள்ளார்.

**குடும்பம்**

ஒரே கூரையால் பாதுகாக்கப்பட்ட இதயங்களின் இணைப்பு ஒரு குடும்பமாகும். "குடும்பம் என்பது தரும சிந்தனைகளையும் பண்பாட்டையும் வளர்க்கும் மூலதனமான அமைப்பு"[14] என உளவியலாளர்கள் கருதுகின்றனர்.

"குடும்பம் என்பது இரத்த உறவுகளின் வழியாகவும் திருமணம் மூலமும் தொடர்புடைய உறுப்பினர்களை உள்ளடக்கிய சமூகக் குழு"[15] என்பர். சமுதாய வாழ்க்கைக்கு அடிப்படையாக இருப்பது குடும்பமே.

குடும்பங்கள் திருந்தினால் நாடு திருந்தும். நல்ல குடும்பம் பல்கலைக்கழகம். பலரும் சேர்ந்து வாழும் குடும்பத்தில் அன்பும், விட்டுக்கொடுக்கும் மனமும் இல்லையெனில் குழப்பமே மிஞ்சும்.

அன்பு, பரிவு, பாதுகாப்புணர்வு, ஒன்றுபட்டு வாழ்வது, சகிப்புத்தன்மை ஆகியவற்றின் உறைவிடமாகக் குடும்பம் திகழ்கிறது. பல்வேறு குடும்பங்கள் ஒன்று சேர்ந்தது ஒரு சமுதாயம். குடும்பத்தில் தலைவன், தலைவி, குழந்தைகள் ஒன்றுசேர்ந்து வாழ்வது குடும்பமாகும். மனிதனுக்குள் உள்ள அரும்பெரும் திறமைகளெல்லாம் நன்கு உணர்ந்து உலகுக்குப் பயன்படவேண்டுமானால் மனிதனுக்கு அதற்கு வேண்டிய நல்ல சூழ்நிலை இருக்கவேண்டும். அதற்குச் சிறந்த சூழ்நிலையைக் குடும்பங்கள்தான் கொடுக்கமுடியும்.

மனித வளர்ச்சியிலும் மனிதனின் முன்னேற்றத்திலும் குடும்பங்களின் பங்கு மிகப்பெரியது. குடும்பத்தை நன்கு நடத்தவேண்டிய அறிவு, திறமை, மனப்பான்மை ஆகியவற்றைக் கொடுக்கக்கூடிய கல்வியை அளித்தால் அவர்கள் குடும்பம் சிறப்பாக அமையும்.

இத்தகைய குடும்பம் என்ற ஒரு வரையறைக்குள் நடக்கும் இன்ப, துன்ப நிகழ்வுகள், வாழ்க்கைமுறை அவற்றில் ஏற்படும் மாற்றங்கள் ஆகியவற்றை விக்கிரமன் புதுவெள்ளம், நிம்மதி, கதையும் கல்யாணமும், பூங்கோதையின் கணவன், ஒருநாள் நிம்மதி, கல்நெஞ்சம், நரசிங்கராவ், ஓவர்டைம், புவனாவுக்காக ஆகிய சிறுகதைகளில் படைத்துள்ளார்.

**குடும்பச் சிக்கல்கள்**

இன்றைய காலக்கட்டத்தில் எத்தனையோ குடும்பங்கள் சிக்கல் நிறைந்தவையாகவே காணப்படுகின்றன. விக்கிரமனின் சிறுகதைகளில்

குடும்பச் சிக்கல்கள் அனைத்தும் எதிர்பாராத இறப்பு, வறுமை போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளன. "குடும்ப உறவுநிலைகள் எல்லாவற்றிலும் தலைசிறந்ததால் கணவன் - மனைவி என்ற உறவின் பிணைப்பே நிலைபேறுடையது."[16]

குடும்ப உறவு செழிக்க உறுப்பினர்களிடையே அன்பு, பாசம், பணிவு, விட்டுக்கொடுத்தல், உரிமை, ஒற்றுமை, அடக்கம், இரக்கம் போன்ற நற்பண்புகள் அமைதல் வேண்டும். ஒரு குடும்பத்தில் பொருளாதாரம் காரணமாகவோ பேராசை காரணமாகவோ, சுயநலத்தின் காரணமாகவோ சண்டை சச்சரவுகள் ஏற்படுவதுண்டு. இச்சிக்கலை "இல்லறம் ஏற்ற இருவரும் ஒருவர்மீது ஒருவர் அன்பு செலுத்தாவிடில் குடும்பச் சிக்கல்கள் எழும்போது, துன்ப வாழ்க்கைதான் தோன்றும்; பிரிவுக்கு வழிவகுக்கும்; பிரிவே முடிவாக அமையும்"[17] என்பர்.

**தனிக்குடும்பச் சிக்கல்கள்**

'புதுவெள்ளம்' என்ற கதையில் பாஸ்கரனின் முறைப்பெண் பாரிஜாதத்திற்கும், குழலூதும் பாஸ்கரனுக்கும் திருமணம் முடித்துவைக்கப் பாஸ்கரனின் மாமன் முடிவு செய்திருக்கும் வேளையில் இருவரும் காவிரிக் கரையில் அமர்ந்து புது வெள்ளத்தைப் புத்துணர்ச்சியுடன் இரசித்து இன்புற்றனர். பிறகு பாஸ்கரன் நண்பர்களுடன் நடு ஆற்றில் படகில் செல்லும்போது அவர்கள் வேண்டுகோளுக்காக மகுடி வாசிக்கிறான். அப்படகில் நாகம் ஏறிட, நண்பர்கள் அனைவரும் பயந்து ஆற்றில் குதிக்க, படகு கவிழ்ந்து பாஸ்கரன் இறந்துவிடுகிறான். பாரிஜாதமோ, பேயடித்தவள்போல் கரையிலேயே காலங்கழிக்கிறாள்.

ஒரு காலத்தில் இன்பமாக இருந்த பாரிஜாதத்தின் குடும்ப வாழ்க்கை மற்றொரு காலத்தில் ஆற்றுவெள்ளம் வடிந்து காய்வதுபோல் ஆகிவிட்டது என்பதை, "மனிதன் மாறுகிறானோ இல்லையோ காலம் ஒரே நிலையில் இருப்பதில்லை. மாறிக்கொண்டே ஓடிக்கொண்டே இருக்கிறது"[18] என்பதன் மூலம் விக்கிரமன் உணர்த்துவார். தனிக் குடும்பச் சிக்கலுக்குப் பாஸ்கரனின் எதிர்பாராத இறப்பு காரணமாவதை விக்கிரமன் இக்கதையில் காட்டுகிறார்.

பொருளாதாரப் பற்றாக்குறையால் பணநெருக்கடி ஏற்பட்டு கடன் தொல்லை ஏற்படும்போது தாம் பெற்ற குழந்தைகள் மீதும், மனைவிமீதும் வெறுப்பும் பாசமின்மையும் ஏற்படுவதை 'நிம்மதி' என்ற கதை உணர்த்தும். நரசிம்மனுக்குக் கடன் தொல்லை ஏற்படுகிறது. அவ்வேளையில் அவன் குழந்தைக்குக் கட்டி ஏற்பட்டு மருத்துவச் செலவிற்குப் பணமில்லாது வருந்துகிறான். அதனால் மனைவியையும் குழந்தைகளையும் பிறந்த வீட்டிற்கே அனுப்பி வைத்தியம் பார்த்துவரச் செய்கிறான்.

குடும்ப வாழ்க்கையில் மகிழ்ச்சி என்பது பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டே அமையும். பண நெருக்கடி ஏற்படும்போது குடும்பத்தில் நிம்மதியின்மை ஏற்படுகிறது. இக்கருத்தை இச்சிறுகதையில் விக்கிரமன், "உண்மையில் நிம்மதி பண அளவில்தான், வறுமை இருள் மறையும் வரையில்தான் என்பது அவனுக்குத் தெரியாதா என்ன?"[19] எனப் பாத்திரக் கூற்றாகக் காட்டுவர்.

உடன்பிறந்த தங்கை மனமார விரும்பிய ஒருவருக்குத் திருமணம் முடித்துக் கொடுக்கவேண்டும் என்று தந்தையிடம் போராடி இறுதியில் வெற்றிபெறும் ஓர் அண்ணனின் தன்னம்பிக்கையைக் காட்டும் கதையாகக் 'கதையும் கல்யாணமும்' என்ற கதை திகழ்கிறது. பெண்கள் பலர் எதிர்காலத் துணைவரை அவர்களே தேர்ந்தெடுத்தாலும் பெற்றோர்களிடம்

தெரிவிப்பதில் பயந்து துணிவில்லாது இறுதியில் அவர்கள் பார்த்து முடிக்கும் மணமகனைத் திருமணம் செய்துகொள்ளச் சம்மதிக்கின்றனர். ஒவ்வொரு தனிக்குடும்பத்திலும் இத்தகைய சிக்கல்கள் தோன்றுகின்றன. அத்தகைய சூழலில் பெண்ணின் விருப்பத்தை உணர்ந்து குடும்ப உறுப்பினர்கள் செயல்படவேண்டும். அவ்வகையில் தன் தங்கையின் மன உணர்வைப் புரிந்துகொண்டு அண்ணன் செயல்படுவதை, “வேண்டாத புருசனிடம் வாழ்க்கைப்பட்டு வேதனையோடு வாழ்நாளைக் கழிப்பதைவிடப் பல வேதனைக்குட்பட்டு, விரும்பியவனை மணந்து சுகமாகக் காலங்கழிக்கக்கூடாதா? என் கண்ணெதிரே என் செல்லத்தங்கையை அந்தப் பட்டணத்தானுக்கு - அந்தக் கிறுக்கனுக்குக் கொடுக்க விடுவேனா?”[20] என்பதில் விக்கிரமன் சுட்டுவர்.

‘மீண்டநாதம்’ என்னும் சிறுகதை ஒரு குடும்பத்தின் அண்ணன் - தங்கை பாச உணர்வை வெளிப்படுத்துவதாகும். தங்கை பிரசவத்தின்போது உயிர் இழக்கிறாள். அண்ணன் அவள் நினைவால் வாடுகிறான். அவள் வீணை வாசிப்பதை எண்ணிப் பார்க்கிறான். அவனது வருத்தத்தைப் போக்க எண்ணிய அவன் மனைவி அவள் தங்கை வாசிப்பதுபோல் வீணை மீட்டுகிறாள். தன் மனைவி மீட்டும் வீணை இசையில் தங்கையைக் காணும் அண்ணன் துயரத்தை மறக்கிறான். இவ்வாறு தனிக்குடும்பத்தில் ஏற்படும் சிக்கலை விக்கிரமன் “காஞ்சனா இறந்தபிறகு வாழ்க்கையிலே நாதமே போய்விட்டது என்று சொல்லும்போது கண்ணீர் விட்டுவிட்டான். ஆனால் மனைவி புஷ்பா நேரே வீணையுடன் உட்கார்ந்தாள். அவளுடைய மெல்லிய விரல்கள் வீணையின் கம்பிகளில் தவழ்ந்தன. பழைய எண்ணங்களிடையே வட்டமிட்டுக் கொண்டிருந்த குழப்பத்தில் மனத்தில் அந்தப் புதிய நாதம் புகுந்து புத்துயிரைக் கொடுத்தது”[21] என்பது உணர்த்தும்.

**கூட்டுக்குடும்பச் சிக்கல்கள்**

பொதுவாக நகரங்களைக் காட்டிலும் கிராமங்களிலேயே கூட்டுக் குடும்ப அமைப்பு பெரிதும் காணப்படுகிறது. "ஒரு மனிதனின் தலைமையில் ஒரே வீட்டில் அவனோடு உறவுமுறையுடைய பலரும் ஒன்றுகூடி வாழ்வதே கூட்டுக் குடும்ப நெறி"[22] ஆகும்.

"கூட்டுக்குடும்பம் மனிதன் நாகரிகத்தை கடைப்பிடித்தது முதல் தோன்றியது"[23] எனக் கூறப்படுகிறது. கூட்டுக்குடும்ப அமைப்பு பாதுகாப்பானதாகத் தோன்றினாலும் அதிலும் பல சிக்கல்கள் உள்ளன. இச்சிக்கல்களை மையமிட்டு விக்கிரமன் 'ஒருநாள் நிம்மதி' என்னும் சிறுகதையைப் படைத்துள்ளார். இச்சிறுகதையில் ஒய்வின்மையும் தனிமையின்மையும் கூட்டுக்குடும்பச் சிக்கல்களாகச் சித்திரிக்கப் பட்டுள்ளன.

கூட்டுக்குடும்பத்தில் வேலைசெய்து அலுத்துப்போன பெண்கள் ஒருநாளாவது வீட்டுவேலைகளை விட்டு விட்டு நிம்மதியாக வெளியில் செல்லும் எண்ணம் கொண்டவர்களாக மாறுகின்றனர். அத்தகைய நிம்மதியை அடையப் போகும் சூழலிலும் எதிர்பாராமல் ஏற்படும் குடும்பப் பொறுப்புக்களை மனம் தளராது ஏற்றுக்கொள்ளும் குடும்பப் பெண்ணாக 'ஒருநாள் நிம்மதி' கதையில் வரும் வேதாவை விக்கிரமன் படைத்துள்ளார்.

மூர்த்தியும் வேதாவும் அண்ணன் குழந்தைகளுடன் கூட்டுக் குடும்பமாய் வாழ்கின்றனர். ஒருநாள் மூர்த்திக்கு விடுமுறை கிடைக்க இருவரும் நிம்மதியாக வெளியில் செல்ல நினைக்கின்றனர். பேருந்தில் செல்லும் போது பணப்பையை வீட்டில் விட்டுவிட்டு வந்துவிட்டது தெரியவருகிறது. உடனே, அடுத்த நிறுத்தத்தில் இறங்கி வீடு வந்து

சேரும்போது வீட்டுவாசலில் அத்தை நிற்கின்றார். அப்பொழுது வேதாவின் மனநிலையை விளக்குவதாக, "நன்றாயிருக்கிறது நம் நிம்மதியும் மண்ணாங்கட்டியும்' ஒரு நிமிடம் தாமதித்து வந்திருந்தால் அத்தை எத்தனை கலவரப்பட்டிருப்பாள்? கடைக்குப்போய் காய்கறி வாங்கிவாருங்கள்... நான் போய் அடுப்பை மூட்டுகிறேன்"[24] என்கிறாள். கூட்டுக் குடும்பத்தில் பெண்களுக்குப் பாதுகாப்பு உணர்வு மிகுதியாக இருந்தாலும் ஓய்வும் தனிமையும் கிடைப்பது அரிதாக இருப்பது மிகப் பெரிய சிக்கலாகக் காணப்படுகிறது.

## பாலியல் சிக்கல்கள்

ஆணும், பெண்ணும் தனிமனித ஒழுக்கத்தைத் தவறும்போதும் அது பாலியல் சார்ந்த சிக்கலாகிறது. பாலியல் பிரச்சினை என்பது ஆண், பெண் ஆகிய இருவரது உடன்பாட்டு நிகழ்வாகும். இருப்பினும் பெண்களே பெரிதும் பாதிப்புக்கு உள்ளாகின்றனர்.

வாழ்க்கையில் ஏற்பட்ட சிறு விரிசலால் மனைவியைவிட்டுப் பிரிந்து வாழ்பவர் கேசவராம். தன் வீட்டிற்கு இசை பயிலவரும் மாணவியர்க்கு இசை கற்றுக்கொடுப்பவர். வயதில் மூத்த கேசவராம் தன்னிடம் இசை பயிலவந்த மாணவி வாணியிடம் தவறாக நடந்துகொள்ள எண்ணுகிறார். அவளோ குருவிற்குக் கொடுக்கும் மரியாதையோடு வேறு தீய எண்ணங்கள் எதுவும் இல்லாது இசையில் ஈடுபாடு கொண்டு பயில்கிறாள். ஒருநாள் இசை வகுப்பில் இருக்கும்போது பெருமழையுடன் பலத்த சப்தத்துடன் இடி இடிக்க அதற்குப் பயந்த வாணி, அவளை அறியாமலேயே கேசவராம் மடியில் முகம் புதைக்கிறாள். ஆனால் அவரோ தவறான எண்ணத்தோடு அவளை அணைக்கிறார். இத்தகைய பாலியல் சிக்கலை எடுத்துரைப்பதாக 'நல்லதோர் வீணை' கதை அமைந்துள்ளது.

“வாணியை அவள் வீட்டிலிறக்காமல் இங்கேயே அழைத்து வந்திருக்கலாம். இரவெல்லாம் அவளை வீணை இசைக்கச் சொல்லி கேட்டு மகிழ்ந்திருக்கலாம், பிறகு அவளுடன் பேசி மகிழ்ந்திருக்கலாம்”[25] என்ற பாத்திரக் கூற்று மூலம் வேலியே பயிரை மேய்வது போல, கேசவராம் தன்னிடம் பயிலவந்த மாணவியைத் தானே தவறாக நினைப்பதும் வயது முதிர்ந்தவர் என்ற எண்ணம் இல்லாமல் மாணவியோடு தவறாகப் பழகத் துடிப்பதும் பாலியல் சார்ந்த சமுதாயச் சிக்கலாகும். மனைவியைப் பிரிந்து வாழும் ஆண் மனம் பாலியல் உணர்வால் தூண்டப்பட்டுத் தன்னிடம் பயில வரும் மாணவியைக்கூட அடையத் துடிக்கும் சபலத்தையும் இச்சிறுகதை உணர்த்துகிறது.

‘மக்கள் தொண்டே மகேசன் தொண்டு’ என்று காவியுடை அணிந்து அநாதை இல்லம் நடத்தி வருபவர் அன்பானந்தர். அவர் இல்லத்தில் கண்பார்வை இழந்த கயல்விழி அடைக்கலமாகிறாள். அந்த இல்லத்தில் அன்பானந்தர் ஓர் அழகிய கலைமானைப் பிரியமுடன் வளர்த்துவந்தார். அம் மான் கயல்விழியுடனேயே எப்போதும் உலாவும். பல நாட்களுக்குப்பின் அன்பானந்தரின் பார்வை முழுவதும் கண்பார்வையற்ற கயல்விழி மீதுதான் இருந்தது. அவர் அவளை எப்படியாவது அடையவேண்டும் என்று தீர்மானித்தார். ஒருநாள் அவள் குளிக்கும் இடத்திற்குச் செல்லும்போது அவள் யாரும் இவ்விடத்திற்கு வரக்கூடாது எனத் தடுத்தும் நில்லாது, அவளருகில் செல்ல முயல்கிறார். அதைக்கண்டு அவர் வளர்த்த மானே, அவரைக் குத்திச் சாய்த்துவிடுகிறது. அன்பானந்தரின் பாலியல் வேட்கை சார்ந்த மனப்போராட்டத்தை, “கயல்விழியை அடைந்து, அவளுடன் வாழ்ந்துகொண்டே அநாதை இல்லத்தை நடத்தக்கூடாதா? அவரே கேள்விகேட்டு அதற்கு அவரே விடையும் சொல்லிக்கொண்டார்.

அப்பொழுதே கயல்விழியைக் காணவேண்டும் என்ற வெறி எழுந்தது"[26] என்பதன் மூலம் அறியமுடிகிறது. வயது வேறுபாடு பாராமல் சிறுமியை அடையத்துடிக்கும் ஒரு மனிதனின் சபலப்புத்தியை இக்கதையில் விக்கிரமன் காட்டியுள்ளார். காவியுடைப் போர்வைக்குள் இருந்து கொண்டு காமத்தை விடாது சிலர் நடந்துகொள்வதை வெளிப்படுத்துவதாக இக்கதை காணப்படுகிறது.

'பாதுகாப்பு வளையம்' என்ற சிறுகதையில் மனோதத்துவ நிபுணர் நகுலதேவன், முதலாளியின் மகன் மனோகரசாமி ஆகியோர் தேவகுஞ்சரி என்ற அழகான பெண்ணுக்குப் பாலியல் தொல்லை கொடுக்கின்றனர். தேவகுஞ்சரி அவர்கள் பிடியில் சிக்காமல் விலகி ஒதுங்குகிறாள். ஆனால் அவள் தந்தையே, முதலாளி மகன் மனோகரசாமிக்குச் சின்னவீடாக இருக்குமாறு மகளுக்கு அறிவுரை கூறுகிறார். ஆனால் அவள் எதற்கும் சம்மதிக்காது தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அறுபது வயதைக் கடந்த தலைமைக் காவலர் பீம்சிங் என்பவரைத் திருமணம் செய்துகொள்கிறாள். அதனால் பிறரின் பாலியல் தொல்லைகளிலிருந்து விடுபடுகிறாள். இதனை, "தேவகுஞ்சரிக்கு உறக்கமே வரவில்லை. நாளைக்கு என் நிலை என்ன ஆகுமோ? சமூகத்தில் நல்லவர்கள் போல் நடிக்கும் அவர்களில் யார் என்னைக் கபளீகரம் செய்யப்போகிறார்கள்? அவர்களில் யாரேனும் ஒருவரிடம் சிக்கி நான் சின்னாபின்னம் அடையப்போகிறேனா? அப்பா? நீங்கள் சொன்னதை நான் கேட்கவில்லை. பாதுகாப்பு வளையமாக நீங்கள் இருந்தீர்கள். இப்போது என்னைக் காப்பாற்ற யார் இருக்கிறார்கள்? விம்மியழுதாள்"[27] என்பதிலிருந்து அறியமுடிகிறது. சமுதாயத்தில் பெண்களுக்குப் பல இடங்களில் பாலியல் தொல்லைகள் கொடுக்கப் படுகின்றன. பெற்ற தந்தையே தன் மகளை வறுமையின் காரணமாக அவளை

விபச்சாரத்திற்கு அனுப்ப எண்ணும் நிலையையும் தன் கற்பைக் காத்துக்கொண்டு தானும் சமுதாயத்தில் ஒரு நல்ல பெண்ணாக வாழ வயது வேறுபாட்டினை ஒரு பொருட்டாக எண்ணாமல் முதியவரைத் திருமணம் செய்துகொள்ளும் நிலையையும் இச்சிறுகதையால் அறியமுடிகிறது.

**நட்பு**

நட்பினர் இருவர் மனமும் ஒரு தன்மைப்படுதல் நட்பு எனப்படும். அவ்வாறு ஒரு தன்மைப்பட்ட நண்பர்கள் அந்த நட்பில் குற்றம் கண்டபொழுது அதனைக் குற்றமாகக் கொள்ளமாட்டார்கள். தம் நண்பர்க்கு ஒரு துன்பம் வந்த பொழுது அதனைத் தமக்கு வந்ததாகவே கருதுவர். அவர்களுக்கு வந்த துன்பத்தை அப்பொழுதே சென்று போக்குவர். உதவியும் செய்வர். ஒருவன் தவறாத உறுதியான நல்ல நண்பன் என்பதனை அவன்தன் நண்பனுக்குச் செய்யும் உதவியால் அறிய இயலும்.

ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் பெற்றோர்க்கும் ஆசிரியர்க்கும் அடுத்த நிலையில் முக்கிய இடம்பெறுபவர் நண்பராவார். நட்பின் மூலம் ஒருவன் நல்லவனாகவும், தீயவனாகவும் மாறமுடியும். "சற்றும் தனக்கு நெருக்கமில்லாத ரத்தத் தொடர்பின்றி எங்கோ பிறந்து எப்படியோ வளர்ந்த ஒருவனை நேசித்து அவன் மீது அன்பும், பாசமும் வைத்து அவனுக்காக உயிரையும்விடத் தயாராகும் ஓர் உணர்ச்சி மனிதனிடத்தில் வளரும் அதிசயத்தைக் காணும்போது இந்த அதிசய உணர்ச்சியைத்தான் நட்பு என்கிறோம்."[28]

உறவில் சிறந்த உறவு நட்புறவு. மனை ஆளும் மனைவியைவிட மனம் ஆள்பவன் நண்பன். நல்ல நண்பனும் நல்ல மனைவியும் ஒருவனுக்கு அமைந்துவிட்டால் போதும், உள்ளத்தில் இன்பம் நிலைத்துவிடும். "நல்ல

நண்பர்கள் இல்லாத உலகம் ஒரு பாலைவனம். நண்பர்களையும், மனிதப் பண்புகளையும் வெறுப்பவன் ஒரு காட்டுமிருகம். அவனுடைய தனிமையில் இன்பம் இல்லை. எங்கும் எதிலும் வெறுப்புதான் நட்பின் பலன்கள். மாதுளங்கனியில் உள்ள இன்ப இரத்தினங்கள் போல் அருமையான உண்மைகளைக் கொண்டு மனிதனை அபாயத்தின் எல்லையைவிட்டு தப்பித்துவிட வழிகாட்டுகின்றன."[29]

"குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு"

(திருக்.793)

என நட்பின் பெருமையை வள்ளுவர் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.

ஒரு நண்பனை இழப்பதைவிட இந்த உலகத்தில் துன்பம் தருவது வேறு ஒன்றும் இல்லை. நமது வாழ்வில் பிறரிடம் நட்புக் கொள்வோரிடம் இது நினைவில் இருக்கவேண்டும். நமக்காக என்று நம்முடைய அனுமதியை எதிர்பார்க்காமலேயே சில கருத்துக்களைச் சொல்லவும், சில செயல்களைச் செய்யவும் நண்பர்களுக்கு உரிமை இருக்க வேண்டும். நம்மைக் கலந்து ஆலோசிக்காமலேயே அவர்கள் அப்படிச் செய்துவிட்டார்களே என்ற மன வருத்தம் நமக்கு ஏற்பட்டுவிடக்கூடாது. இந்தப் பண்பை,

"விழைதகையான் வேடியிருப்பர் கெழுதகையால்
கேளாது நட்டார் செயின்"

(திருக்.804)

என்கிறார் வள்ளுவர். நண்பர்களைப் பற்றிப் பிறர் குறைகூறினாலும், நெருங்கிப் பழகிய நமக்குத் தெரியாதது இல்லை. பிறர் பேச்சைக் கேட்டு நட்பை முறித்தல் இழிவான செயலாகும். இத்தகைய இயல்புகளை விளக்கும் விதமாக விக்கிரமனின் 'நண்பா மறந்துவிட்டாயா?' 'கஸ்தூரியின் கடிதம்'

‘அன்பும் ஆசையும்’ ‘ஞானோதயம்’ ‘தங்கவளையல்’ ஆகிய கதைகள் திகழ்கின்றன.

‘நண்பா மறந்துவிட்டாயா?’ என்ற கதை நட்பை மறந்த செயலை அடிப்படையாகக் கொண்டது. உயிர் நண்பனாகச் சங்கரனால் நேசிக்கப்பட்ட மனோகரன் ஐ.சி.எஸ். தேர்வில் தேறிப் பதவியேற்கும் தகுதியோடு வந்ததும், சங்கரனை அறியாதவன் போல உதறித் தள்ளுகிற மனமாறுதலை இக்கதை உணர்த்தும்.

வறுமையின் கொடுமையால் மேல்படிப்புக்குச் செல்லமுடியாத சங்கரன் மயிலாப்பூரிலிருந்து சிறிது வாரப்பட்ட தலையுடனும், அழுக்கடைந்த வேட்டியுடனும் கால்நடையாக நடந்து வந்து சென்ட்ரலில் தன் நண்பர் வருகையை எதிர்பார்த்திருந்தான். அங்கு நடந்த நிகழ்வை ஆசிரியர், “ஓர் உருவம் கிழிந்த உடையுடன் கும்பலில் நெருங்கி அருகில் சென்று... மிஸ்டர் மனோஹர்... குட் ஈவினிங்... நீ வருவதைக் குறித்து மிகவும் சந்தோசம்... என்றது. அதை செவியுற்ற மனோகர், டாம்... நான் சென்ஸ் யார் உன்னை இங்கே விட்டது? அந்நோன் பர்ஸன் கெட் அவே... என்றான். இதைக் கேட்டதும் சங்கரனைப் பல கைகள் வெளியேற்றுவதில் ஆவல் கொண்டன”[30] எனக் காட்டுவர். இதில் தன் தகுதிக்கு இணையான தகுதி இல்லை எனக் கருதி முன்பு பழகிய நட்பை மறந்து சங்கரனை மனோகரன் அவமதிப்பது சித்திரிக்கப்பட்டுள்ளது.

ஆண் மகன் கஸ்தூரிக்கும் பெண் ஒருத்திக்கும் சிறு வயதிலேயே ஏற்பட்ட நட்பு. அவள் பெரியவளாகி இன்னொருவனை மணந்தும் தொடர்கிறது. திருமணம் முடிந்து அவள் கணவனும் இவர்கள் நட்பிற்கு உறுதுணையாக இருந்து வழிகாட்டுவதாகக் ‘கஸ்தூரியின் கடிதம்’ என்னும்

சிறுகதை அமைகிறது. அப்பெண்ணின் குடும்பத்தார் அனைவரும் ஏற்றுக்கொண்ட நட்பாக இது அமைதலை, "வேறு எவ்விதத் தொந்தரவும் கவலையுமில்லாத எனக்கு 'கஸ்தூரியின் கடிதங்'கள் சிறந்த பொழுதுபோக்காகவும், சிந்தனைக்குகந்ததாகவும் இருந்துவந்தன. அவர்கூட எப்பொழுதாவது ஒரு சமயம் உன் கஸ்தூரி எப்படி இருக்கிறான்? என்று கேட்பார். இன்னொருவராயிருந்திருந்தால் ஏதாவது வித்தியாசமாக நினைத்துக்கொள்வார்கள். எனக்கென்னவோ என் உடன்பிறந்தவன் போன்ற இயற்கைநிலையே இன்னும் இருக்கிறது. ஊரிலிருந்து யாராவது வந்தால்கூட கஸ்தூரி சௌக்கியமா? என்று விசாரிக்கத் தவறுவதில்லை"[31] என்பது விளக்கும்.

நண்பனின் கடிதம் ஆறுமாதகாலம் காலதாமதமாகக் கிடைத்ததால் அவன் செய்யும் செயல்களுக்கு அறிவுரை கூற வழியில்லாதுபோக அவன் உயிரையே இழக்கும் நிலை ஏற்பட்டதை நினைத்து அவனையே நினைத்து அப்பெண் புலம்பும் நிலையை இக்கதை காட்டுகிறது. இது "கல்லுப்பட்டியில் நடந்த விவசாயத் தகராறில் போலீஸார் துப்பாக்கிச் சூடு நடத்தியதில் 12 பேர் காயமடைந்தனர். 3 பேர் ஸ்தலத்திலேயே மாண்டனர். உள்ளூர் பிரபல முன்சீப் பிள்ளை கஸ்தூரியும் இறந்தவர்களில் ஒருவன் என்ற செய்தியைப் படித்து முடித்தவுடன் தலையே சுழன்று கணவன் மடியில் கிடந்து புலம்பினேன்"[32] என்பதால் தெளிவாகும். இவ்வாறு விக்கிரமன் சிறுவயதில் ஏற்படும் ஆண் - பெண் நட்பு களங்கமில்லாது இருக்கும் நிலையில் பெண்ணின் திருமணத்திற்குப் பிறகும் தொடர்வதற்கு வாய்ப்பு உண்டு என்பதை இச்சிறுகதையில் உணர்த்துகிறார்.

'தங்க வளையல்' என்ற சிறுகதை நட்பின் இலக்கணத்துக்கு உரமேற்றி வாழ்க்கையின் மேன்மைக்கு அடிகோலும் அற்புதப் படைப்பு. சாதி, மதம்,

மொழி, செழுமை, ஏழைமை போன்ற அனைத்துத் தடைகளையும் உடைத்தெறியும் வல்லமை கொண்ட நட்பின் வீரியத்தை இக்கதையில் விக்கிரமன் படைத்துள்ளார்.

சாவித்ரியும், மஞ்சுளாவும், சிறு வயதுமுதல் இணைபிரியாத தோழியர். அவர்களின் லட்சியம், கனவு, மனக்கோட்டை எல்லாம் ஒன்றுபோலவே இருந்தன. ஆனால் அவர்கள் இருவரும் வாழ்க்கைப் படகில் வெவ்வேறு திசைகளில் பயணம் செய்ய நேர்ந்துவிட்டது. சாவித்ரிக்கு முன்பே திருமணம் நடந்துவிட்டது. அவள் கணவர் ஒரு நகைக்கடை வைத்திருந்தார். கடையில் ஏற்பட்ட இழப்பால் சாவித்ரி மஞ்சுளாவை நாடி உதவிகேட்கிறாள். அவளும் தயங்காமல் உதவி செய்கிறாள். இதனை, "உனக்கு வரும் துன்பம் எனக்கு வந்தது போல், நாளை காலையில் ஸ்டாக் டேக்கிங் என்றால் காலையில் ஒன்பது மணிக்கே அந்தப்பொருள் இருக்கவேண்டுமே, என் அப்பாவுக்கு அப்படி ஓர் இக்கட்டு வந்தபோது உன் தந்தை வீடுதேடி வந்து கதவைத் தட்டிப் பணம் கொடுத்துச் சென்றது நினைவில் இருக்கிறது. இன்று கோலாகலமான கல்யாணம் நடக்கிறது என்றால், உன் அப்பா அன்று இட்டபிச்சை. இதோ குவிந்திருக்கும் பரிசுப்பொருளைப் பார் தங்கவளையல்கள் மட்டும் பத்துஜோடி வந்திருக்கின்றன என்று கூறியவள் பீரோ அருகில் சென்று ஒருசோடி தங்கவளையல்களை எடுத்து சாவித்ரியின் கணவனிடம் நீட்டினாள்"[33] என்பது விளக்கும்.

இவ்வாறு நண்பர்களுக்குள் ஒருவருக்குத் துன்பம் நேருகின்றபோது மற்றொருவர் உடனடியாக அத்துன்பத்தைப் போக்க முயலவேண்டும் என்னும் கருத்து இதில் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**மனித நேயம்**

வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியதாகக் கூறிய வள்ளலாரும், காக்கை, குருவிகளைத் தன்னினமாகக் கருதிய பாரதியும் போற்றி வளர்த்தது மனிதநேயம் ஆகும். எங்கெங்கு காணினும் அங்கெல்லாம் மதவெறி, இனவெறி, கட்சிவெறி, போர்வெறி, தான் வாழப் பிறரைக் கெடுக்கின்ற தன்னலப்போக்கு, அன்பு குறைந்து இதயம் இரும்பாய் மாறிப் போனநிலை போன்றவைதான் மலிந்து காணப்படுகின்றன. இந்நிலைகள் மாற வேண்டுமெனில் மனிதநேயம் என்னும் உயரிய பண்பு மக்களால் போற்றப்படவேண்டும். அப்போது உலகில் அமைதி நிலவும். சக மனிதனை மனிதனாகப் பார்க்க மறுக்கின்றபோது மனிதநேயம் இல்லாமல் போகின்றது.

"மனிதநேயம் என்பது மனிதருக்கு மனிதர் இருக்கவேண்டிய தொடர்புறவு பற்றிய ஒருவிதமான மனநிலை. அந்த மனநிலையினால் தூண்டப்பட்டு நடைபெறும் செயல்நிலை. இந்த மனநிலையையும் அதன் விளைவான செயல்நிலைகளையும் அடிப்படையாகக் கொண்டு உருவாகும் வாழ்க்கை நோக்கம் தான் மனித நேயம்."[34]

எவ்வித உறையுளும் பாதுகாப்புமின்றிக் காட்டுமிராண்டியாக விலங்குகளோடு விலங்காக வாழவேண்டிய கட்டாயத்தில் இருந்த மனிதன் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளப் பாதுகாப்பு அரண் ஒன்று தேவை என்பதை உணர்ந்தான். பிறகு கூட்டமாக வாழ்ந்தான். அங்கே சுற்றுப்புறச் சூழல் காரணமாகவும் வாழ்வின் தேவை காரணமாகவும் மனிதநேயம் அரும்பலாயிற்று. தனிப்பட்ட நிலையிலும், குடும்பநிலையிலும் மனிதநேயம் இன்றியமையாத கூறாகக் காணப்படுகிறது. இன்றைய சமுதாய உண்மையாகவும், தேடலாகவும் மனிதநேயமே காட்சியளிக்கிறது.

இத்தகைய மனிதநேயத்தை அடிப்படையாகக் கொண்டு கந்தப்பன் காளை, 'வேலு,' 'மனிதநேயம்,' 'பிஞ்சு நெஞ்சம்,' 'புவனாவுக்காக' 'தர்மமூர்த்தியின் தயவு' ஆகிய சிறுகதைகளை விக்கிரமன் படைத்துள்ளார்.

'கந்தப்பன் காளை' கதையில் காளையால் தனக்கு நல்லதொரு வாழ்க்கைத் துணைவி அமைந்து மகிழ்ச்சியாக வாழ்ந்த கந்தப்பன் ஒருநாள் தீயில் அகப்பட்டுக் காளை இறக்க நேர்ந்தவுடன் அவன் சித்தம் கலங்கித் துக்கம் தாங்காமல் சாட்டையால் தன்னையே அடித்துக் கொள்கிறான். காளையின் இறப்பைத் தாங்கிக்கொள்ள இயலாமல் சித்தம் கலங்கிவிடும் மென்மையான உணர்வுடைய பாத்திரமாகக் கந்தப்பனைப் படைத்து விக்கிரமன் மனிதநேயத்தை நன்கு காட்டியுள்ளார். இதனைத் "தீக்காயங்களுடன் பிழைத்து எழுந்த கந்தப்பன் வீரன்காளை இறந்த செய்தி கேட்டு, சித்தம் கலங்கி காளை கட்டப்பட்டிருக்கும் இடத்திற்குச் சென்று ஏதேதோ புலம்பினான். சில நாட்களில் காலை வேளையில் ஒற்றை மாட்டு வண்டியைத் தானே இழுத்துச் செல்லுவான். "வீராட்... டிரியோ... என்று சாட்டையால் தன்னை அடித்துக் கொள்வான்"[35] என்பது உணர்த்தும்.

வேலுவின் அண்ணன் சோமுவிற்குச் சிறுநீரகக் கோளாறு ஏற்படுகிறது. மாற்றுச் சிறுநீரகம் மைத்துனர் ஒருவரால் மட்டுமே கொடுக்கமுடியும் என்ற நிலை உருவாகிறது. வேலுவோ தன் அண்ணனிடம் சொத்தில் பங்குகேட்க வெளியூரிலிருந்து வந்திருக்கிறான். அவன் அண்ணி கல்யாணி, அண்ணன் உயிரைக் காப்பாற்றித் தருமாறு வேண்டி ஒரே சொத்தான வீட்டை நீயே எடுத்துக்கொள் எனக் கூறுகிறார். அந்நிலையில் அவன், "மரியாதைக்குரிய அண்ணி! கொடியவன் என்று என்னை இனி அழைக்க மாட்டீர்கள். உங்கள் மாங்கல்யத்தைக் காப்பாற்றிவிட்டேன். எதற்கும் உதவாதவன், இந்தக் குடும்பத்தை அழித்தவன் என்ற அவப்பெயர் இனி எனக்கு இருக்காதல்லவா?

என்னைத் தேடாதீர்கள் குடும்பத்திலிருந்து என் பங்கை விட்டுக்கொடுக்கும் விடுதலைப்பத்திரம் இதோ வருகிறேன் - வேலு"[36] என்று கடிதம் எழுதி வைத்துவிட்டுச் செல்கிறான். இதன் மூலம் அண்ணனுக்கு உயிர் கொடுத்ததோடு, எல்லா நேரமும் கொடியவனாகவே இருந்த வேலு கடைசியில் மனம் இரங்கிச் சொத்தையும் வேண்டாம் எனக் கூறும் மனிதநேயப் பண்பை 'வேலு' சிறுகதையில் காட்டியுள்ளார்.

கருணாகரன் பணத்திற்கு ஆசைப்படாத மாமனிதர். பலருக்கும் உதவும் எண்ணம் கொண்டவர். இத்தகு மனம் படைத்தவர் தன் வீட்டில் வளரும் பூனையையும் அதன் குட்டிகளையும் மட்டும் வெறுக்கிறார். வீட்டு வேலைசெய்யும் மூர்த்தியிடம் கூறி, பூனையையும் குட்டிகளையும் வெளியேற்றுகிறார். மூர்த்தி தன் பிள்ளைகளுக்குப் பூனை என்றால் மிகவும் பிடிக்கும் என்று கூறித் தன் வீட்டிற்கு எடுத்துச் செல்கிறான். அன்றிரவு மழை பெரியதாய்ப் பொழிந்தது. வெள்ளம் ஓடியது. கருணாகரனின் மனமோ மூர்த்தியின் குடிசை வீட்டில் உள்ள பூனைகளின் நிலையை எண்ணி மனம் பதறி, மறுநாள் காலை மூர்த்தியிடம் பூனைகளைப் பற்றி விசாரித்தபின் அவை நன்கு உள்ளன என அறிந்து நிம்மதியடைகிறார். கருணாகரனின் இத்தகைய இரக்க உணர்வையும், மனிதநேய உணர்வையும், "மூர்த்தி! மகத்தான நன்மை செய்துவிட்டாய் என்று கூறி உள்ளே சென்று, தனக்கு முதல்நாள் அணிவித்த சால்வையை எடுத்துவந்து அவனுக்குப் போர்த்தி 'நீதான் மனிதநேயம் மிக்க மாமனிதன்' என்று கூறி அன்புடன் அணைத்து இந்த விருதும், மாலையும் சால்வையும் உனக்குத்தான்"[37] என்பது விளக்கும்.

குழந்தைப் பருவம் மனிதவாழ்வில் ஒரு மகத்தான பகுதியாகும். பொன்னுச்சாமி மாலைநேரத்தில் கார் ஓட்டி வருகிறான். பள்ளிவிட்டு வந்த குழந்தை ஆயாவின் பிடியிலிருந்து விலகி, சாலையின் குறுக்கே

பாய்ந்துவிடுகிறது. பொன்னுச்சாமி, தனது முழுத்திறமையால் அக்குழந்தையை லேசான காயத்துடன் காப்பாற்றி ஆயாவிடம் ஒப்படைக்கிறான். குழந்தை அழுதுகொண்டே இருக்கிறது. காரணம் புரியாது பொன்னுச்சாமி குழம்பிவர காரின் சக்கரத்தின் அடியில் பொம்மை நசுக்குண்டு கிடப்பதைப் பார்த்து, அதேபோல் பொம்மை வாங்கி அவள் வீட்டிற்குச் சென்று கொடுத்து அழுகையை நிறுத்துகிறான். இதனை, "பாட்டி என் பாப்பாதான் காலம்பற செத்துப்போச்சே. வேறே பாப்பா வேணும் என்று மறுபடியும் அழத்தொடங்கியது. பொன்னுச்சாமி அதே பொம்மையை நீட்டினான். தயக்கத்துடனும் அதே சமயம் மலர்ந்த முகத்துடனும் பெற்ற அந்தக் குழந்தையின் பிஞ்சு நெஞ்சத்திலே புதைந்திருக்கும் பெரும் தாய்மை உணர்ச்சி அவனுக்கு விளங்காமல் போகவில்லை"[38] என்பது விளக்கும். இதில் பொன்னுச்சாமி, குழந்தையின் பிடிவாத அழுகைக்கான காரணத்தை அறிந்து அதைத் தீர்த்து வைக்கும் மனிதாபிமானம் கொண்டவனாக 'பிஞ்சு நெஞ்சம்' சிறுகதையில் திகழ்கிறான்.

'புவனாவுக்காக' சிறுகதையில் அக்காள் மகள் புவனாவைத் திருமணம் முடிக்க, சோமு உழைப்பாளியாக மாறி வெளிநாடு சென்று பெரும் பணத்துடன் திரும்புகிறான். அவன் வெளியூர் சென்ற வேளையில் அவன் அக்கா நோய்வாய்ப்பட்டு இறக்கவே புவனாவை ஒரு வண்டிக்காரனுக்கு அவன் மச்சான் திருமணம் முடித்து வைக்கிறான். ஒரு குழந்தையும் பிறந்துவிடுகிறது. இந்நிலையறியாது புவனா வீட்டிற்குப் பெரும் பணத்துடன் சென்று விபரம் அறிகிறான். இந்நிலையில் சோமுவின் செயலை, "கையுடன் கொண்டு வந்திருந்த தோல் பையை அங்கேயே வைத்துவிட்டு வந்துட்டேன். அது புவனாவுக்காக அவள் குழந்தையின் எதிர்காலத்திற்காக என் சேமிப்பில்

பெரும் பகுதி அதில் இருந்தது"[39] என்பது விளக்கும். இதனால் சோமுவின் மனிதாபிமானத்தன்மை புலப்படும்.

ஏழையான கபாலி, கோயில் முன் பூ, பழம் விற்கும் வியாபாரி. அவனை அரசியல்வாதிகள் கடையைக் காலிசெய்யுமாறு வற்புறுத்திக் கடையை ஆள்வைத்து அடித்து நொறுக்குகின்றனர். கண்ணீரின் முன் சுயமைத்தனம் இல்லாமையைச் செல்வாக்கால் எட்டி உதைக்கும் மனப்பான்மையுடையோராகத் தர்மமூர்த்தி திகழ்கிறார். கபாலி எதற்கும் எதிர்த்துச் செயல்படாமல் பொறுமையாய் அமர்ந்திருந்தான். பக்கத்துக் கடைக்காரர்களின் உதவி அவனுக்கு இருந்தது. இறுதியில் பலரின் கடையைத் தள்ளி ஒரு பழரசக் கடை ஒன்றைத் திறக்கிறான். அதற்கு அவன் 'தர்மமூர்த்தி பழரசக்கடை' எனப் பெயரிட்டுத் தன்னை அழிக்க நினைப்பவனையே அழைத்து, கடையைத் திறக்கச் சொல்லியதோடு அவன் பெயரையே கடைக்கு வைத்தது கபாலியின் பெருந்தன்மையைக் காட்டுகிறது. இதனை, "அண்ணே! என்மேலே கோபமா? கூலி கொடுத்துச் செய்ன்னாங்க செஞ்சேன். நடைபாதை பாய், காப்பிப் பொடிக்கடைக்காரருக்குள்ள மனிதாபிமானம் கோயில் தர்மகர்த்தாவுக்கு இல்லாமப் போச்சே... சே"[40] என்ற பாத்திரச் செயல்மூலம் பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்ற எண்ணம் இல்லாது தீயவர்க்கும் நன்மை செய்க என்பதற்கு ஏற்ப நல்லதொரு பண்பைக் கொண்ட கபாலியைத் 'தர்மமூர்த்தியின் தயவு' என்ற சிறுகதை காட்டுகிறது.

**மூடநம்பிக்கை**

மனித அறிவினைப் பகுத்து ஆராயவிடாமல் தடுப்பது மூடநம்பிக்கை. நாட்டில் பலர் அறிவு வளர்ச்சி பெற்றவர்களாகத் திகழ்ந்தாலும், சிலர் மூடநம்பிக்கையுள்ளவர்களாகக் காணப்படுகின்றனர். ஆறறிவு படைத்த

மனிதன் தன் எதிர்காலத்தைப் பற்றிக் கிளியிடம் ஆலோசனை கேட்கும் கிளி சோசியம் இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கிறது. பேய், பிசாசுகள், ஆவிகளின் நடமாட்டம், இறந்தவர்களுக்கு மறித்துக்கட்டுதல் போன்ற மூடச் செயல்களும் நடந்துகொண்டுதான் வருகின்றன. நாகரிகம் வளர்ந்த இக்காலத்தில் பேய், பிசாசுகள் உலாவருவதும் பேசுவதுமான மூடநம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட 'மலைவீடு' என்னும் சிறுகதையை விக்கிரமன் அமைத்துள்ளார்.

ஒரு கிராமத்தில் செவ்வாய்தோசம் உள்ள பெண் தான் விரும்பிய காதலனை அடையமுடியாமல் வீட்டில் தற்கொலை செய்து இறந்துவிடுகிறாள். அவ்வீட்டில் ஆவி உலாவுகிறது என்ற செய்தியால் அவ்வீட்டிற்கு யாரும் குடிவருவதில்லை. கல்லூரிப் படிப்பிற்காக இரு மாணவர்கள் அங்கு வந்து தங்கலானார்கள். அவர்கள் இரவில் தூங்கும்போது பேய், பிசாசு பேசுவதுபோல இக்கதை அமைந்துள்ளது. இதனை, "இப்பொழுது என்னைக் கண்டு நீங்கள் பயப்படுகிறீர்கள். நான் உங்களைத் தழுவிக்கொள்கிறேன் என்றால் அலறுகிறீர்கள். ஆனால் பத்து வருடங்களுக்கு முன்னால் நான் நல்ல நிலையில் இருந்தபோது என் பெற்றோருடன் இருந்தபோது என்னைப் பார்த்தீர்களானால் நீங்கள் என்னை அடையத் துடித்திருப்பீர்கள். ஐயோ! அது ஒரு காலம், இது ஒரு காலம்!"[41] என்பது விளக்கும். மக்களின் மூடநம்பிக்கை அடிப்படையிலான சிந்தனை அவர்கள் வாழ்க்கையை அவலமாக்கிவிடுகிறது என்ற கருத்தை இச்சிறுகதை விளக்குகிறது.

**சாதியச் சிக்கல்கள்**

மனித சமூகம் வளர வளர சாதி என்பது பிறப்பையே தீர்மானிக்கும் காரணியாக அமைந்துவிட்டது. சாதிகளை வைத்துப் பிறப்பைத்

தீர்மானிப்பதும் ஒரு சமூகத்தையே புறந்தள்ளுவதும் தொன்றுதொட்டுத் திகழும் ஒன்றாகிவிட்டது. தீண்டாமை என்பதற்கு அடிப்படையாகச் சாதி அமைகிறது.

சமுதாயத்தில் ஒரு பிரிவினரைத் தீண்டத்தகாதவராகக் கருதி அவர்களை ஒதுக்கி வைப்பதும் கொடுமைப்படுத்துவதும் பெரும் களங்கமாக இன்றுவரை இருந்து வருகிறது. வரலாற்று அடிப்படையில் நோக்கும்போது "தீண்டாமை என்பது ஆரியர்கள் இந்தியாவை வெற்றிகொள்வதன் விளைவே என்றும், அதன் காரணமாக ஏற்பட்ட சமுதாயக் கலப்பில் அவர்களால் வெற்றிகொள்ளப்பட்ட ஒரு பகுதி மக்கள் அவ்வினத்தோடு ஒன்று கலந்து அவர்களில் ஒரு பகுதியினரே மிகப் பிற்பட்ட இனத்தவராகித் தீண்டத் தகாதவர்களாக மாறினர்"[42] என்றும் ஏ.ஆர்.தேசாதாய் கருதுகிறார்.

தமிழ்மொழியில் சாதி என்ற சொல் 'காஸ்ட்' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நிகராகப் பயன்படுத்தப்படுகிறது. காஸ்ட் என்ற ஆங்கிலச் சொல் காஸ்ட்டா என்ற போர்த்துகீசியச் சொல்லிலிருந்து உருவாக்கம் பெற்றதாகக் கருதப்படுகிறது என்று டார்வின் கூறுகிறார்."[43]

இத்தகைய சாதியச் சிக்கல்களை விக்கிரமன் 'புலியின் புன்னகை' 'காக்கை குருவிகள் எங்கள் சாதி' ஆகிய கதைகளில் கூறியுள்ளார். பட்டாளத்தில் வேலைபார்த்த பொன்னுச்சாமி ஊர்திரும்பும்போது அவன் விரும்பிய பெண்ணுடன் கிராமத்திற்கு வருகிறான். இதையறிந்த அக்கிராம மக்கள் அவனைச் சாதிமாறித் திருமணம் செய்தவன் என்று ஊரிலிருந்து ஒதுக்கி வைத்துவிடுகின்றனர். அவ்வூருக்குள் ஒரு புலி ஒன்று நுழைந்து ஆடு, மாடுகளைக் கொன்று மக்களையும் அச்சுறுத்தி வந்தது. அப்போது ஊர்மக்கள் பொன்னுச்சாமியிடம் வந்து புலியைப் பிடிக்குமாறு

வேண்டுகின்றனர். அவனோ தன் பட்டாளத்துத் துப்பாக்கியால் அப்புலியைக் கொன்று ஊருக்கு அமைதியைத் தருவதாக 'புலியின் புன்னகை' கதை அமைந்துள்ளது.

"பொன்னுச்சாமிக்கு வீரம்மாளைப் பிடித்துப் போய்விட்டது. வீரம்மாளும் பொன்னுச்சாமியை விரும்பினாள். வீரம்மாளின் தந்தைக்கும் சம்மதம்தான். ஆனால் சாதிவிட்டுச் சாதி கலியாணம் செய்வதற்கு ஊராரின் பொல்லாத உள்ளம் விரும்புமா என்ற கவலை அவருக்கு. பொன்னுச்சாமியின் திட உள்ளம் எதற்கும் அஞ்சவில்லை. ஆனால் கிராமத்து மக்கள் அவனை நோக்கியதே வேறுவிதம். அதிலும் பொன்னுச்சாமி சண்டைபோடக் கழியை எடுத்துவந்த பிறகு ஊரார் ஒன்று சேர்ந்தனர். இந்தச் சாதி கெட்டவனை எல்லா விதத்திலும் புறக்கணிப்பது என்று முடிவு செய்தனர்"[44] என்பதிலிருந்து சாதி வேறுபாட்டால் ஒருவனை ஊரைவிட்டே ஒதுக்கிவைத்த நிலையை அறிவதோடு, தங்கள் உயிருக்கு ஆபத்து நேரும்போது சாதி பாராமல் அவனிடம் சென்று உதவி கேட்கும் நிலையையும் அறியமுடிகிறது.

'காக்கை குருவிகள் எங்கள் சாதி' என்ற சிறுகதையில் செண்பகம், தான் விரும்பிய முத்துவைப் பல்வேறு எதிர்ப்புகளுக்கு இடையே கைப்பிடித்துத் தனியாக வாழ்ந்துவருகின்றாள். இவர்களுக்கு ஒரு பெண் பிறந்து வளர்ந்து திருமண வயதை எட்டிய நிலையில் செண்பகத்தின் தம்பி அக்கா வீட்டில் வறுமையை எண்ணிக் கவலைப்படாது இருங்கள் அக்கா! உங்கள் மகளை நான் திருமணம் செய்துகொள்கிறேன் என ஆறுதல் கூறுகிறான். செண்பகம் அவனை நிமிர்ந்துபார்த்தாள் "என்ன தம்பி சொல்கிறாய்? எங்களுடன் வாழப்போகிறாயா? நாங்கள் ஒதுக்கப்பட்டவர்கள். கீழ்ச்சாதிக் காரனை நான் மணந்ததால் கீழ்ச்சாதிக்காரியாகிவிட்டேன். நீ உயர்ந்த குலத்தவன் என்றாள்.

“அக்கா! உங்கள் மகளை நான் மணப்பதென்ற முடிவுடன்தான் வந்திருக்கிறேன். என்னை யாரும் தடுக்கவோ தடைசெய்யவோ முடியாது”[45] என்பதன் மூலம் சாதிவேறுபாட்டை ஒரு பொருட்டாகக் கொள்ளாது திருமணம் செய்துகொள்ளும் நிலையினை இக்கதை வலியுறுத்துகிறது.

## உழைப்பு

உழைப்பு என்பது அறிவு சார்ந்ததும் உடல் சார்ந்ததுமாகும். உலகத்தில் உள்ள மனிதர்கள் அனைவரும் ஏதாவது ஒரு வகையில் உழைத்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். ‘அச்சாபீஸ் ஆறுமுகம்’ என்ற சிறுகதையில் அச்சுத்தொழில் வேலை செய்பவர் ஆறுமுகம். பல ஆண்டுகள் உழைத்து அவருக்கு வேலையின்மீது ஒரு வெறுப்பு உண்டாகிறது. தன் இரு மகன்களும் சம்பாதிக்கும் பணத்தில் நிம்மதியாக வாழலாம் என நினைத்து வேலையை விட்டு வீட்டுக்கு வருகிறான். அவன் மகனோ பல்வேறு கடன்களுக்கிடையில் இருப்பதை அவர்கள் வீட்டிற்கு வந்த ஈட்டிக்காரன் மூலம் தெரிந்துகொள்கிறான். அதனால் மீண்டும் உழைப்பிற்கு வழிதேடிப் பல அலுவலகங்களுக்கு அலைகிறான். ஜோதிடச் செய்தி அச்சகத்தில் மீண்டும் வேலை கிடைக்கிறது. ஆனால் அவ்வலுவலகத்தில் தொழிலாளரைச் சுரண்டும் நிலையைக் காணமுடிகிறது. இதனை, “உனக்கு வழக்கம் தெரியாது போலிருக்கு. பத்து ரூபாய்க்குக் கையெழுத்துப் போட்டுட்டு ஏழு ரூபாய்தான் வாங்கிப்போகணும். எனக்கும் அப்படித்தான் எட்டு ரூபா கூலி இரண்டரை ரூபா மானேசருக்குக் கமிசன்”[46] என்பதால் புலப்படும்.

தொழிலாளரைச் சுரண்டும் தீய சக்திகளை இக்கதை மூலம் சமுதாயத்திற்குக் காட்டியுள்ளார் விக்கிரமன். உழைப்பால் தொழிலில் போட்டி, பொறாமை ஏற்பட வாய்ப்புள்ளது. சேது, அலுவலகத்தில்

குமாஸ்தா வேலை செய்பவர். ஐம்பது வயது முதிர்ந்தவர். அவர் எப்போது வேலையிலிருந்து ஓய்வு பெறுவார் என்று அவ்வலுவலகத்தில் பணிபுரியும் கிட்டு எதிர்பார்த்திருக்கின்றான். ஏனெனில் அவர் அவ்வேளையில் ஓய்வுபெற்றால்தான் கிட்டுவிற்குப் பதவி உயர்வு கிடைக்கும். இக்காரணத்திற்காக கிட்டு அலுவலகத்தில் சேதுவின் மேஜை மேலிருந்த முக்கியமான கோப்புகளை எடுத்து ஒளிந்துவைத்துவிட்டு முதலாளியிடம் சேதுவை மாட்டிவிடுகிறான். ஆனால் முதலாளியோ, நல்லவேளை வருமானவரித்துறையினரிடம் இந்தக் கோப்பு சிக்காமல் இருந்தது நல்லதாய்ப் போய்விட்டது என்று கூறிச் சேதுவைப் பாராட்டி இவ்வலுவலகத்தைவிட்டு நீங்கள் போகக்கூடாது எனப் பாராட்டுகிறார். இந்நிகழ்வினை, "நோ... நோ சேது நீ ஆபீஸை விட்டு விலகுவதாவது? ஆயுள் முழுதும் உனக்கு இங்கு வேலை உண்டு என்று முதலாளி கூறியது சேதுவின் காதில் வீழ்ந்ததோ இல்லையோ கிட்டுவின் காதில் விழுந்தது. கிட்டு தலைகுனிந்தவாறு நின்றுகொண்டிருந்தான்"[47] என்பது விளக்கும். உழைப்பால் பொறாமையும் வஞ்சகச் சிந்தனையும் கொண்ட ஒரு சின்ன மனிதனின் வக்கிரச் செயலை இக்கதை காட்டுகிறது. நல்லுழைப்பு நன்மையே தரும் என்பதற்கு எடுத்துக்காட்டாய் 'சேது' சிறுகதை அமைந்துள்ளது.

## நாட்டுப்பற்று

தான் பிறந்த அல்லது தான் வாழ்ந்துகொண்டிருக்கிற நாட்டின் மீது பற்று வைக்கவேண்டியது ஒவ்வொருவருக்கும் இன்றியமையாததாகும். நாட்டின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டு தனது நாட்டின் பண்பாடு கலாச்சாரங்களை மதித்து நடப்பதும் நாட்டுப் பற்றில் அடங்கும். தாய் மண்ணையும், தாய் நாட்டையும் மதிக்கவேண்டும். "நாட்டுப்பற்று என்பது சமயம்போன்றது. புனிதமானது, சமயங்கள் எல்லாம் காலந்தோறும் சிற்சில

மாற்றங்கள் பெற்றே வளர்கின்றன. நாட்டுப்பற்று ஒன்றே மாறாத பெரும் சமயமாக விளங்குகிறது. உண்மையில் நாட்டுப் பற்று என்பது தான் வாழும் மண் தனக்குத் தருகிற உணவுக்காகவும், உறையுளுக்காகவும் காட்டுகிற வெறும் நன்றியுணர்ச்சி அல்ல. அதற்கு மேற்பட்ட ஒன்று."[48]

மகன் என்ற பாசத்தைவிட நாட்டு மக்களின் உயிரைக் காக்கும் கதையாக விக்கிரமன் 'பாலக் காவல்' என்ற சிறுகதையை எழுதியுள்ளார். இக்கதையில் பரமசிவம் இரவில் பாலத்தைக் காவல் செய்பவர். மகன் கண்ணாயிரம் சதிகாரர்களோடு சேர்ந்து இரயில்வரும் பாதையில் ஏதோ சதிவேலையில் ஈடுபட யாரென்றே தெரியாது சுட்டுவிடுகிறான். ஆனால் சுடப்பட்டவன் தன் மகன் தான் என்று தெரிந்தும் காவல்துறையிடம் ஒப்படைக்கிறான். மகன்மீது பாசமா, நாட்டுப்பற்றா என்ற உணர்ச்சிப் போராட்டத்தில் நாட்டுப்பற்றே விஞ்சிநிற்கிறது. நாட்டு மக்களின் நலன்கருதி மகனை இழக்கத் துணிகிறார். பெற்ற பாசத்திற்காகவோ அல்லது நேசத்திற்காகவோ மறைத்து வாழ்வது 'குடிமை அல்ல' என்று எண்ணுகின்றார். அந்நிலையில் காவல்துறை அதிகாரி "உங்களுக்கும் கோழை மனம் இருக்கிறது எனத் தெரிந்துவிட்டது. மகன் உண்மையில் குற்றம் செய்திருக்கும்போது அதை ஒப்புக்கொண்டு கடைசிவரையில் நிரூபிக்கத் தயாராயிருந்த உங்களுக்கு நாட்டு மக்களின் மீதிருந்த பக்தியையும், கடமையையும் உணர்ந்து கொண்டேன். வழக்கின் போக்கு பிடிபடாமல் இருந்தபோது இப்படியும் மகனைக் காட்டிக்கொடுப்பவர் உண்டா என்று கூட எண்ணினேன்"[49] என்றார்.

இதில் மனச்சாட்சியின் உந்துதலால் மகனைக் காட்டிக்கொடுப்பதையும், குடும்பப் பாசத்தைவிடத் தேசமே பெரிது எனக் கருதியதையும் அறியமுடிகிறது.

**மொழிப்பற்று**

மொழிப்பற்று என்பது புனிதமானது. நாம் ஒவ்வொருவரும் தாய்மொழி மீதும் தாய்நாட்டின் மீதும் பற்றுக்கொள்ளவேண்டும். விக்கிரமன் தனது சிறுகதையில் மொழிப்பற்றை வெளிப்படுத்தும் விதமாக 'அழுக்கு' என்ற சிறுகதையை அமைத்துள்ளார். முருகவேளின் மருமகள் மங்கையர்க்கரசி "மாமா, நம் கார்டனர் ஜெகத்ரட்சகன் திரி பைவ் ஓர் கர்ஸுடன் வந்து நைட் அண்டு டே ஒர்க் செய்து சூயேஜ் பிளாக்கை கிளியர் செய்துவிட்டான்"[50] என்று ஆங்கிலத்தில் பேசியது மாமனாருக்குப் பிடிக்கவில்லை. அவரது மனத்தை நோகச் செய்தது. ஆங்கிலத்தில் பேசிய தன் மருமகள் அரசியை நெற்றிக்கண் பார்வையில் பார்க்கிறார். இதைச் சூசகமாக அறிந்த அரசி தான் பேசிய ஆங்கிலத்தை அவர் விரும்பவில்லை என்று கருதி, "நம் தோட்டக்காரன், இரவு பகலாக மூன்று நாட்களுக்கு முன்பு பணியாட்களுடன் வந்து சாக்கடை அடைப்பை நீக்கிவிட்டான்"[51] என்று கூறுகின்றாள்.

இவ்வாறு முருகவேள் பாத்திரத்தின் மூலம் விக்கிரமன் மொழிப்பற்றை உணர்த்தியுள்ளார். தாய்மொழியில் எளிதாக உணர்த்தவேண்டிய கருத்தைக்கூட ஆங்கிலத்தில் பேசும் மனப்போக்கையும் அங்கதமாகச் சாடியுள்ளார்.

**தொகுப்புரை**

மனிதர்கள் கூடி வாழும் ஓர் அமைப்பு சமூகம் ஆகும். ஒவ்வொரு மனிதனும் சமூகத்தோடு தொடர்பு உடையவனாக வாழ்கிறான். படைப்பாளனும் இந்தச் சமூகத்தின் அங்கம் ஆவான். இந்தச் சமுதாயத்தில் அவன் காணும் காட்சிகள் படைப்பாகின்றன. இத்தகைய சமுதாயம் விக்கிரமன் சிறுகதைகளில் பாடுபொருளாக இழையோடுகிறது.

அவ்வகையில் காதல், குடும்பம், பாலியல் சிக்கல்கள், நட்பு, மனிதநேயம், மூடநம்பிக்கை, சாதியச் சிக்கல்கள், உழைப்பு, நாட்டுப் பற்று, மொழிப்பற்று என அமையும் சமுதாயச் சிந்தனைகள் விக்கிரமன் சிறுகதைகளில் இடம்பெற்றுள்ளன.

இவரது காதல் சிறுகதைகளில் காதலுக்காக எதையும் இழக்கத் துணியும் காதலர்களின் உண்மைக்காதலும் காதலின் ஆழமும் எடுத்துக்காட்டுவதோடு பெற்றோர் எதிர்த்தாலும் அவர்களின் எதிர்ப்பையும் மீறித் தங்கையை அவள் நினைத்த காதலனுடன் சேர்த்துவைக்கும் அண்ணன்மார்களையும் காட்டியுள்ளார்.

குடும்பக் கதைகளில் குடும்பத்தில் உள்ள கணவனும், மனைவியும் ஒருவர் மீது ஒருவர் அன்பு செலுத்தாவிடில் குடும்பச் சிக்கல்கள் எழும் துன்ப வாழ்க்கை தோன்றும் என்கிறார். குடும்ப வாழ்க்கையில் மகிழ்ச்சி என்பது பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டே அமையும். பணநெருக்கடி ஏற்படும்போது குடும்பத்தில் நிம்மதியின்மை ஏற்படுகிறது என்பதோடு பாலியல் சிக்கலாக மனைவியைப் பிரிந்து வாழும் ஆண்மனம் பாலியல் உணர்வால் தூண்டப்பட்டுத் தன்னிடம் பயில வரும் மாணவியைக்கூட அடையத் துடிக்கும் சபலத்தையும் தம் சிறுகதையில் உணர்த்தியுள்ளார்.

நட்பை வலியுறுத்தும் சிறுகதைகளில், நட்பின் உயர்வு, கூடா நட்பு போன்ற கருத்துக்களை எடுத்துக்காட்டியுள்ளார். மேலும் மனிதநேயப் பண்பை உணர்த்தும் விதமாக எல்லாநேரமும் கொடியவனாகவே இருந்த வேலு கடைசியில் மனம் இரங்கிச் சொத்தையும் வேண்டாம் எனக் கூறும் மனமாற்ற இயல்பினைத் தம் கதையில் படைத்துள்ளார். குழந்தையின்

பிடிவாத அழுகைக்கான காரணத்தை அறிந்து அதைத் தீர்த்து வைக்கும் மனிதநேய உணர்வையும் இவரது சிறுகதைகளில் அறியமுடிகிறது.

ஆறறிவு படைத்த மனிதன் தன் எதிர்காலத்தைக் கிளி சோசியம் பார்த்துத் தீர்மானிக்கும் மூடநம்பிக்கை பற்றிய கருத்துக்களும் விக்கிரமனின் கதையில் இடம்பெற்றுள்ளன. மனித சமூகம் வளர வளர சாதி என்பது பிறப்பையே தீர்மானிக்கும் காரணியாக அமைந்துவிட்டது. இத்தகைய சாதியை மையமிட்ட கதையில் சாதி வேறுபாட்டால் ஒருவனை ஊரைவிட்டு ஒதுக்கிவைத்த நிலையை அறிவதோடு, தங்கள் உயிருக்கு ஆபத்து நேரும்போது சாதி பாராமல் அவனிடம் சென்று உதவி கேட்கும் சமுதாய நிலையையும் புலப்படுத்தியுள்ளார்.

உழைப்பால் உயர்வு என்ற கருத்தைச் சுட்டுவதோடு, தொழிலாளரைச் சுரண்டும் தீய சக்திகளையும் இவரது சிறுகதை அடையாளம் காட்டுகிறது. மேலும் நல்லுழைப்பு நன்மையே தரும் என்பதற்கு எடுத்துக்காட்டாகச் 'சேது' கதையைப் படைத்துள்ளார். உழைப்பில் போட்டி, பொறாமை கொண்டவன் இறுதியில் அடையும் அவமதிப்பையும் அழகாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

தாய் மொழிப்பற்று வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக 'அழுக்கு' கதையினைப் படைத்துள்ளார். மக்களிடையே காணப்படும் ஆங்கில மோகத்தையும் அங்கதமாகச் சுட்டிக்காட்டியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. து.பன்னீர்ச்செல்வம், பிரபஞ்சன் படைப்புகளில் சமூகம் ஓர் ஆய்வு, ப.76
2. அ.மு.பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், ப.26
3. ந.மங்கள முருகேசன், இந்திய சமுதாய வரலாறு, ப.165
4. அ.மு.பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், ப.26
5. வீ.கருப்பையன், கலைக்களஞ்சியம், தொகுதி - 4, ப.477
6. மா.இராமலிங்கம், அகிலனின் கலையும் கருத்தும், ப.143
7. செ.அருள்ஜோதி, நாட்டுப்புறக் காதல் பாடல்களில் ஏக்கமும், எதிர்பார்ப்பும், ப.55
8. Betrand Russel, Marriage and Morals, P.62-64
9. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.51
10. மேலது, ப.106
11. மேலது, ப.143
12. மேலது, ப.177
13. மேலது, ப.214
14. Alfred, Alwood Sociology and its phychological Aspect, P.213
15. Ronal w.smith, Sociology and Introduction, P.171
16. ம.திருமலை, தமிழ்மலையாள நாவல் ஒப்பாய்வு, ப.35
17. பா.குழந்தைச்சாமி, குடும்பம் (கட்.), ப.96
18. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.68
19. மேலது, ப.77
20. மேலது, ப.106

*21.மேலது, ப.118*

*22.* C.C.Harris, The family studies in socialogy, P.83

*23. இரா.கல்பகம், சமூகவியல், ப.50*

*24. விக்கிரமனின் சிறுகதைக்களஞ்சியம், ப.194*

*25. மேலது, ப.554*

*26. மேலது, ப.616*

*27. மேலது,ப.711*

*28. இரத்தின சண்முகனார், வாழ்வில் உயர்வுபெற வழிகள், ப.105*

*29. சி.மா.பக்தவச்சலம், உலக அறிஞர் கருத்துக் களஞ்சியம், ப.78*

*30. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.9*

*31. மேலது, ப.35*

*32. மேலது, ப.36*

*33. மேலது, பக்.740, 741*

*34. சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனித நேய நெறிகள், ப.1*

*35. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.101*

*36. மேலது, ப.492*

*37. மேலது, ப.679*

*38. மேலது, ப.204*

*39. மேலது, ப.695*

*40. மேலது, ப.750*

*41. மேலது, ப.45*

*42. க.ப.அறவாணன், தமிழர்மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், ப.117*

43. மா.இராமலிங்கம், விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதைகள், ப.105

44. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.345

45. மேலது, ப.652

46. மேலது, ப.286

47. மேலது, ப.627

48. ந.பிச்சமூர்த்தி, மாதர் மறுமணமலர் இதழ் 2, பக்.1-8

49. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.307

50. மேலது, ப.721

51. மேலது, ப.721.

## இயல் - 4

# பெண்ணியச் சிந்தனைகள்

*சமூகத்தில் ஆண், பெண் இருபாலரும் சிறப்பிடம் பெறுகின்றனர். இருவரில் ஒருவர் மட்டும் ஆதிக்கநிலையில் இயங்குகிற போது சரிநிகர்ச் சூழல் சிதைகிறது. சமூகத்தில் ஆணாதிக்க நிலை நிலவிவரும் முறையில் பெண்கள் பல நிலைகளில் அடக்கப்பெறுகின்றனர். இந்நிலையிலிருந்து மீட்சி பெறுவதற்கான விழிப்புணர்ச்சி பெண்ணியச் சிந்தனையாகக் கருதப்பெறுகிறது. இது குறித்த சிந்தனைகள் விக்கிரமன் சிறுகதைகளில் இடம்பெற்றிருக்குமாற்றை விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.*

### பெண்ணியம்

'Femina' *என்ற ஆங்கிலச் சொல் பெண்ணியத்தைக் குறிக்கும். இச்சொல்* 'Femina' *என்ற இலத்தீன் சொல்லில் இருந்து மருவி வந்ததாகும்.* 'Femina' *என்றால் பெண்ணின் குணாதிசயங்களைக் கொண்டுள்ளது என்பது பொருளாகும். இச்சொல் முதலில் பெண்களின் பாலியல் குணங்களைக் குறிக்கப் பயன்பட்டு அதன்பின் பெண்களின் உரிமை பேசும் சொல்லாகப் பயன்பட்டது. பெண்களின் கொடுமைகளைக் களையவும், அவர்களின் தாழ்நிலையை ஆராய்ந்து அதை மாற்ற மேற்கொள்ளப்படும் வழிமுறைகளை உருவாக்கவும் ஏற்பட்டதே பெண்ணியம். இது ஆண்வழிச் சமூகத்தில் தொடர்ந்து பல ஆண்டுகளாய் நிலவிய சிந்தனைப் போக்கில் பல மாற்றத்தை ஏற்படுத்திப் பெண்ணினத்திற்கு ஒரு மதிப்பைப் பெற்றுத் தரும் ஓர் அமைப்பாகும்.*

*"பெண்ணுக்கு ஒரு நீதி என்றும், ஆணுக்கொரு நீதி என்றும் நிலவும் செய்திகளை நன்கு அறிவதும், அவ்வறிவினை மாற்றியமைக்கத்தக்க சக்தியாகவும் பெண்ணியம் திகழ்கிறது."*[1]

பெண் என்பதற்கான இலக்கணம் பழைய நிலையிலிருந்து மாறிப் புதுமைக்கும் புரட்சிக்குமான போக்கிற்குத் தன்னை அடையாளப் படுத்திக் கொண்டது. அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு, அடிமை, அலைமனம், கோழை, ஒழுக்கம், பாலுணர்வு, கண்ணீர், மென்மை முதலிய பல்வேறான சொற்களால் குறியீடாக்கப்பட்ட பெண்களின் இயல்புகள் இன்று மாற்றம் கண்டு வருகின்றன. ஆணாதிக்கப் போக்கை, சமூகத்தின் எல்லா நிலைகளிலும் தகர்க்கும்படியானதொரு காலகட்டத்தை எதிர்நோக்கிய பெண்ணியக் கோட்பாடுகள், அவை உருவாகத் தொடங்கியதிலிருந்து மெல்ல மெல்லப் புதிய வெளிச்சத்தைக் கண்டு வருகின்றன.

அறிவுச்சுரண்டல், பொருளாதாரச் சுரண்டல், பாலியல் வன்முறை, ஆணாதிக்க அடக்குமுறை இவற்றிலிருந்து விடுபடுவதில் பெண்ணியம் தீவிரம் காட்டி வருகிறது. பெண்கள் தங்களுக்கான உரிமையையும், விடுதலையையும், சமூகத்தின் எல்லா மட்டங்களிலும் நிலைநாட்டும் உணர்வினைப் பெறுவதில் மிகுந்த அக்கறை செலுத்திவந்துள்ளனர். "ஆண்கள் எந்த அளவு குடும்ப அமைப்பிலும், சமூக அமைப்பிலும், பொருளாதாரத்திலும், அரசியலிலும் ஈடுபட்டு உரிமை கொண்டாடுகின்றனரோ அந்த அளவுக்குப் பெண்களுக்கும் உரிமை வழங்கவேண்டும்"[2] என்று பெண்ணியம் வலியுறுத்துகிறது.

## பெண்ணியச் சிந்தனை

ஆணும், பெண்ணும் முழு உரிமை படைத்தவர்கள் என்ற சிந்தனையின் தொடர்ச்சியாகப் பெண்ணியச் சிந்தனை தோன்றியது. மேலை நாட்டில் கி.பி.18 ஆம் நூற்றாண்டின் இறுதியில் இச் சிந்தனையின் முன்னோடியாக மேரி உல்ஸ்டன் கிராப்ட் என்ற ஆங்கிலப் பெண்மணியைக் குறிப்பிடுகின்றனர்.

பெண் சமுதாயத்தில் காணப்படும் சிக்கல்களைக் களைவதன் மூலம் அரசியல், பண்பாடு, பொருளாதாரம், ஆன்மீகம் போன்ற துறைகளில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்த முடியும்.

**பெண்ணியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**

பெண்ணியம் என்ற இயக்கம் ஒரு நீண்ட வரலாறு உடையது. இந்த இயக்கத்தின் வித்து கி.பி.1400-ல் இடப்பட்டது. கி.பி.1400லிருந்து கி.பி.1789 வரையிலான ஆண்டுகளில் இவ்வியக்கம் கீழ்கண்ட மூன்று நிலைகளை அடைந்தது.

**நிலை :1**

பெண்கள் தங்களை அவமதிக்கும் துன்புறுத்தும் ஆண் வர்க்கத்தை எதிர்த்துப் போராட நினைத்த நிலை.

**நிலை : 2**

பாலியல் உறவு என்பது வெறும் உடற்கூறு சம்மந்தமானது என்று மட்டும் நினைத்த உணர்வு மாறி, அதை நாகரீகமானதாகக் கருதிய நிலை.

**நிலை : 3**

ஆண் வர்க்கத்தினரின் குறுகிய மனப்பான்மையையும், பாரபட்ச மனப்பான்மையையும் எதிர்த்து, தாங்கள் சமூகத்தில் உண்மையான மதிப்பும் மரியாதையும் பெறவேண்டும் என்ற நோக்கு உண்டான நிலை.

"1840ல் லண்டனில் 'உலக அடிமை ஒழிப்பு மாநாடு' நடத்தப்பட்டது. இம்மாநாட்டில் பெண்களை உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளவில்லை. முதன் முதலில் இதைப் பெண்ணியவாதிகள் வன்மையாகக் கண்டித்து அறிக்கைகள் வெளியிட்டனர். ஆண், பெண் எல்லோரும் சமமாகவே

படைக்கப்பட்டுள்ளனர் என்ற கருத்து அவ்வறிக்கைகளில் எடுத்துரைக்கப் பட்டது."[3]

**இந்தியப் பெண்ணிய வரலாறு**

மேலை நாட்டுப் பெண்ணியம் தனக்கென்று தனித்த வரலாறு உடையது. அஃது தனியுரிமை, சமத்துவம், அரசியல், விடுதலை, தன்னாட்சி இவற்றை அடிப்படையாகக் கொண்டது. இந்தியப் பெண்கள் இரத்தம், பொறுமை, கண்ணீர், அடி, உதை என்பவற்றின் குறியீடாவார்கள். இந்தியப் பெண்களுக்கு எடுத்துக்காட்டாக அமைபவள் சீதா. அந்த அபலை அந்நிய ஆடவனால் தூக்கிச்செல்லப்பட்டு அவதிப்பட்டாள். பின் கணவரோடு வாழவில்லை. காட்டுக்குத் துரத்தப்பட்டாள். ஒவ்வொரு இந்தியப் பெண்ணின் வாழ்வும் இப்படித்தான் சிதைந்து போகின்றது.

**இந்திய தேசியப் பெண்கள் குழு**

1925 இல் தொடங்கப்பட்ட இவ்வமைப்பு, அதே ஆண்டில் அகில உலகப் பெண்கள் அமைப்பைத் தலைமையாகக் கொண்டு அதோடு இணைந்து செயலாற்றத் தொடங்கியது. இவ்வமைப்பின் குறிக்கோளாக இந்தியாவில் உள்ள பெண்களை ஒன்றுசேர்த்து ஒருவர்மீது ஒருவர் அக்கறை கொள்ள வழிப்படுத்துதல், ஏற்கனவே உள்ள அமைப்புகளை ஒன்றிணைத்து முன்னேற்றுதல், பிற நாடுகளில் உள்ள தேசியப் பெண்கள் அமைப்புகளுடன் இணைந்து செயலாற்றுதல் என்பனவாக அமைந்தன.

**எழுபதுகளில் பெண்ணியம்**

எழுபதுகளின் மத்தியில் தொடங்கிப் பெண்ணியக் குழுக்கள் குடும்ப வன்முறை, பாலியல் வன்முறை, ஆபாச இலக்கியம் இவற்றிற்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபடலாயின. 1975 இல் வன்முறைக்கு எதிராக

அனைத்துலகப் பெண்கள் மாநாடு மெக்ஸிகோவில் நடைபெற்றது. பின் 1976 இல் லண்டனில் பாலியல் வன்முறை எதிர்ப்பு மையம் ஒன்று பெண்ணியக்கத்தால் தொடங்கப்பட்டது.

எழுபதுகளின் இறுதியில் சமதர்மப் பெண்ணியம் வீழ்ச்சியை நோக்கி அடியெடுத்து வைக்கத் தொடங்கியது. அதில் ஆண் மேலாதிக்க இடதுசாரிகள் தலைதூக்கத் தொடங்கினர். குறிப்பாக, தேசியக் கருக்கலைப்புப் பிரச்சாரம் என்ற அமைப்பில் பெண்கள், ஆண்களோடு சேர்ந்து பணியாற்றுவதில் மிக இடர்ப்பாடுகள் அனுபவித்தனர்.

"எழுபதுகளில் பெண்ணியக் கொள்கைகளையும், கருத்துக்களையும் எழுதிய அட்ரைன்ரிச், மேர்லின் ப்ரைன்சு, கேட் மில்லட், நான்ஸி ப்ரைட், ரீட்டாமே ப்ரெளன் போன்ற பெண்மணிகள் பிரபலமடைந்தனர்."[4]

## எண்பதுகளில் பெண்ணியம்

எண்பதுகளின் இறுதியில் அநேகமாக இந்தியா முழுவதிலும் பெண் இயக்கங்கள் பரவி, வரதட்சணை, கொலை, கொடுமை, காவலர், துப்புரவாளர் மறுவாழ்வு, குடிசை மாற்று போன்ற பெண்கள் தொடர்பான பிரச்சினைகளுக்காகப் போராட்டங்கள் நடத்தி ஓரளவு வெற்றி கண்டன. இந்தக் காலகட்டத்தில் பெண்ணியவாதிகள் இந்தியச் சட்டத்தையும், ஆட்சி நிர்வாகத்தையும் மாற்றவும், முன்னேற்றவும் தொடர்ந்து போராட வேண்டியதாயிற்று.

## பெண்ணியத்தின் வகை

"பெண்ணிய வாழ்க்கைச் சூழலுக்கும் அனுபவத்திற்கும் ஏற்ப பெண்ணிய இயக்கத்தில் மூன்று வகைப்பாடு அமையும். அவையாவன,

1. தாராளப் பெண்ணியம்

2. சமதர்மப் பெண்ணியம்

3. தீவிரவாதப் பெண்ணியம்."[5]

## தாராளப் பெண்ணியம்

தாராளப் பெண்ணியத்தின் தொடக்ககாலம் 18 ஆம் நூற்றாண்டு. அக்காலகட்டத்தில் ஏற்பட்ட தத்துவப் புரட்சி மூலமே முதன் முதலாகத் தாராளப் பெண்ணியத்தின் கொள்கைகள் வேர்விட ஆரம்பித்தன. தாராளப் பெண்ணியம் புரட்சியின்றிப் பொருளாதாரத்திலும், சட்டத்திலும் மாறுதலைக் கொண்டுவர முயன்றது. இஃது அரசியல் மற்றும் பொருளதாரத் துறைகளைப் பெரிய அளவில் தழுவி தனி ஒரு பெண்ணின் பிரச்சினை முதல் அரசியலில் பெண்களின் பங்கு, உயர்கல்வி, சம ஊதியம் போன்றவற்றை ஆராய்கிறது.

"பாலியலில் பெண்களுக்கு ஏற்படுத்தப்படும் வன்மைகளையும், கொடுமைகளையும் கடுமையாக எதிர்த்தல் மற்றும் அதற்கான தண்டனையைப் பெற்றுத் தருதலை முக்கியச் செயல்பாடாகக் கொண்டது தாராளப் பெண்ணியம்."[6]

## சமதர்மப் பெண்ணியம்

சமதர்மப் பெண்ணியம் என்பது இனம் மற்றும் பால் வேறுபாட்டை ஒழிப்பதை அடிப்படை நோக்கமாகக் கொண்ட இயக்கமாகும். சமூகத்தில் வேரூன்றி உள்ள தந்தைவழிச் சமூகத்தின் மூலத்தைத் தூக்கி எறிவதைக் குறிக்கோளாகவும், தன்னலவாதிகளின் தன்னலத்தையும், ஆண், பெண் என்ற பாகுபடுத்துவோரின் கொள்கைகளையும், சமூக நெறியில் ஒழிப்பதைச் செயல்பாடாகவும் கொண்டுள்ளது சமதர்மப் பெண்ணியம்.

சமதர்மப் பெண்ணியம் பெண்கள் பாலியல் நெறியில் மட்டுமின்றி, வயது நிலையிலும், சக்தி அடிப்படையிலும் இன அடிப்படையிலும், தேசிய அடிப்படையிலும் ஒடுக்கப்படுகின்றனர் என்று சுட்டிக்காட்டுகின்றது.

**தீவிரவாதப் பெண்ணியம்**

'Radical' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு 'வேர்' என்பது பொருள். இச்சொல் லத்தீன் மொழியிலிருந்து உருவான சொல்லாகும். சமுதாயத்தில் உள்ள பிரச்சினைகளின் காரணங்களை வேரிலிருந்து ஆராய்வது என்பதைக் கருத்தில் கொண்ட 'Radical' என்ற சொல்லைப் பெண்ணியவாதிகள் பயன் படுத்தினர். இதைத் தமிழில் 'தீவிரவாதம்' என்று மொழிபெயர்த்துள்ளனர்.

தாராளப் பெண்ணியத்திலிருந்து விலகிவந்த அமைப்பே தீவிரவாதப் பெண்ணியம். ஆண் ஒதுக்கப்படவேண்டியவன் என்ற கருத்தாக்கம் நிலைபெற்றதே தீவிரவாதப் பெண்ணியத்தின் வலுவான கொள்கையாகும். அமெரிக்காவில் தீவிரவாதமே ஆற்றல் பெற்றிருந்தது. இங்கிலாந்தில் அரசியல் அமைப்பு மற்றும் மரபு ஆதிக்கப் போக்கு இவற்றின் காரணமாகச் சமதர்மப் பெண்ணியமே வரவேற்கப்பட்டுப் பிரபலமடைந்தது. தீவிரவாதப் பெண்ணியக் குழுக்கள், எதிர்வுச் செயற்பாடுகள் என்று சொல்லக்கூடிய நூதனப் போராட்ட முறையைக் கையாண்டு தங்கள் கொள்கைகளைப் பரப்பி மக்களை ஈர்த்தனர்.

**பெண்ணடிமை**

இன்றைய சூழலில் பெண்கள் தங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டும் என்பதையே ஆண்கள் விரும்புகின்றனர். ஆனால் பெண்கள் தங்களுக்குக் கருத்துச் சுதந்திரமும் உரிமையும் வேண்டும் என விரும்புவதன் மூலம் அடிமை வாழ்வை வெறுக்கின்றனர். எனினும் சமுதாயம் அவர்களுக்கு

முழு உரிமை கொடுக்கவில்லை. பெண்கள் பிறந்த வீட்டில் சுதந்திரமாக இருந்தாலும் திருமணம் செய்துகொண்ட பின் அவர்களது சுதந்திரம் தடைப்பட்டு அடங்கி வாழவேண்டிய நிலை உருவாகி வருகிறது. பெண்விடுதலை பேசுபவர்கள்கூட இதற்கு விதிவிலக்கல்ல. அவர்களும் சமுதாயத்துக்கு உட்பட்டுத்தான் நடக்க வேண்டியுள்ளது.

## பெண்ணியப் பாகுபாடு

பெண்ணியக் கோட்பாடுகள் உணரப்பட்டதுபோல் பலவகையான பெண்ணியப் பாகுபாடுகளும் அக்காலக்கட்டத்திற்கு ஏற்ப உணர்த்தப் பட்டன. மிதவாதப் பெண்ணியம், மார்க்சியப் பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம், தலித் பெண்ணியம் முதலான பல வகைகளில் அதன் வகைப்பாடுகள் விரிந்தன. அகில இந்தியப் பெண்கள் மாநாடு இந்திய மகளிர் தேசியக் கவுன்சில், கஸ்தூரிபாய் தேசிய நினைவுக்குழு, தேசிய மகளிர் ஆணையம் போன்ற அமைப்புகள் இந்தியச் சமூக அரங்கில் பெண்ணுரிமைக்கு அவ்வப்போது குரல்கொடுத்து வாதாடி வந்திருப்பதும் நல்ல மாற்றங்களை விளைவித்துள்ளது.

## பெண்விடுதலை

பெண் விடுதலை என்பது பாலியல் ஒடுக்குமுறை என்ற தளத்திலிருந்து விடுதலை பெறுவதோடு தொடர்புகொண்டுள்ளது என்பதைப் பெண்ணியவாதிகள் பலரும் வலியுறுத்தி வருகின்றனர். ஆணாதிக்கம் மிக்க மொழியினால் பெண் அடிப்படையிலேயே அமுக்கி வைக்கப்படுகிறாள். இக்கோணத்தில் பார்த்தால் ஆணின் கட்டுப்பாட்டிலுள்ள மொழியோடு பெண் எழுத்தாளர்கள் போட்டி போட்டுக்கொண்டு முயற்சி செய்து பெண்களுக்கெனச் சொல்லாடலை உருவாக்குவது அடிப்படைத் தேவையாகிறது.

இந்தியாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சமுதாயத் தேவை கருதிப் பெண்விடுதலைக்காகப் பிரம்மசமாஜம் முதலான பல இயக்கங்கள் தோன்றின. பெண் விடுதலைக்காகப் பாடுபட்ட பலருள் பிரம்மசமாஜம் அமைத்த இராசாராம் மோகன்ராய் முதன்மையிடம் பெறுபவர். அவரைத் தொடர்ந்து பெண்விடுதலைக்காகத் தந்தை பெரியார், பாவேந்தர் பாரதிதாசன் ஆகியோர் ஆற்றிய பணிகளும் குறிப்பிடத்தக்கன. திரு.வி.க. பெண்ணின் பெருமை மூலம் பெண் விடுதலைக்குக் குரல்கொடுத்தலும் சிந்திக்கத்தக்கது.

**பெண் படைப்பாளர் பார்வையில் பெண்ணியம்**

சமூக நிகழ்வுகள் இலக்கியங்களில் பதிவாகின்றன. பெண் சமூகம் சார்ந்த சிக்கல்களை ஆண் படைப்பாளர்கள் இலக்கியத்தில் வெளிப்படுத்துகின்றனர். எனினும் பெண் படைப்பாளர்கள் பெண்களாக இருப்பதாலும், பெண் உணர்வுகளையும் சிக்கல்களையும் வேகமாகப் புரிந்துகொள்வார்கள் என்கிற நிலை கருத்திற்குரியதாகும். தாங்கள் புரிந்து கொண்டதை இலக்கியங்களில் புலப்படுத்துகிற நிலை இயல்பானதாகும். அண்மைக்கால இலக்கிய வகைகளில் 'புரிதலை' வெளிப்படுத்துவதற்குச் சிறுகதை நல்ல ஊடகமாக விளங்குகிறது. ஆண் படைப்பாளர்களைவிடப் பெண் படைப்பாளர்கள் வரவால் மாற்றம் நிகழ்ந்ததாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

"பெண் எழுத்தாளர்களின் எழுத்தின் போக்கு பெண்களுடைய பிரச்சினைகளைப் பற்றியதாகவே அமைகிறது. திறனாய்வு, செய்யுள், புதினம், சுயசரிதை ஆகிய அனைத்து இலக்கிய வகைகளிலும் இப்பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் முயற்சியை அவர்கள் மேற்கொள்ளுகின்றனர். மீண்டும்

மீண்டும் இதே உணர்வுதான் அவர்கள் படைப்புகளில் தலைதூக்கி நிற்கின்றது."[7]

## பெண்ணுரிமை

பெண்களின் வாழ்க்கை பல்வேறு காரணங்களால் அடிமைத்தன்மைக்கு வழிவகுத்து உரிமை பறிக்கப்பட்டு அவலத்திற்கு ஆளாகியுள்ளது. தான் பெற்ற பெண்ணை மற்றொரு ஆடவனுக்குக் கொடையாக வழங்கும் உரிமை பெற்றோருக்கு அளிக்கப்பட்டது. "பிறருக்குத் துன்பம் ஏற்படாமல் துன்புறுத்தாமல், வையாமல், கொல்லாமல், பிறர் பலனைக் களவாடாமல் விரும்பிய வண்ணம் செயல்புரிவதே விடுதலையாகும்."[8] முறையற்ற கட்டுக்கோப்புகளிலிருந்து பெறுகின்ற சுதந்திரமே உரிமையே விடுதலையின் வாயிலாகும்.

## பெண்ணிய நோக்கில் விக்கிரமன் சிறுகதைகள்

விக்கிரமனின் சிறுகதைகளில் பெண்ணுரிமைக்குக் குரல்கொடுப்பனவாகப் பொல்லாத மனசு, இன்பத்தின் விலை, செல்லி சிரித்தாள், விஷக் கத்தி, குழலோசை போன்ற கதைகளும், பெண் சுதந்திரத்தை வலியுறுத்துவனவாக ஒற்றைக் குருவி, நீலரிப்பன் போன்ற கதைகளும் சமுதாயத்தில் பெண்களின் மதிப்பை நிலைநிறுத்துவதாக ஊர்வசி, கண்ணன் மீண்டும் வருகிறான் என்கிற சிறுகதைகளும், பெண்கள் எதிர்கொள்ளும் பாலியல் சிக்கல்களை வெளிப்படுத்துவனவாக வந்தசுவடு, பாதுகாப்பு வளையம், அழகின்நிறம், வளர்த்தமான், 'ஓ,' நல்லதோர் வீணை முதலான கதைகளும் திகழ்ந்து பெண்ணியக் கருத்துக்களை வெளிப்படுத்துகின்றன.

## பெண்ணுரிமைச் சிந்தனைகள்

பெண் ஒரு பாதி, ஆண் மற்றொரு பாதி, இரண்டும் சேர்ந்த ஒன்றே முழு மனிதத் தன்மை, அங்ஙனமாக வாழ்வின் ஒரு பாதி உரிமையைக் கடிவது

அறியாமையாகும். இருவர் மனமும் ஒன்றாக இணைந்து வாழ்வது ஒரு சிறந்த வாழ்வாகும். அதைத் தவிர்த்து மனப்பொருத்தம் இல்லாதவர் வாழ்க்கை விரைவில் பிரிந்துவிடும். இத்தகைய சூழலில் ஒருவனை ஒருத்தி விரும்பிய நிலையில் தடை குறுக்கிட்டாலும் அதை எதிர்த்து நின்று போராடி வெற்றிகொள்ளும் துணிவைப் 'பொல்லாத மனசு' சிறுகதை உணர்த்தும்.

சின்னக்கவுண்டன், பழனியம்மாள் காதலை ஊரார் சாதி, பொருளாதார நிலைகளில் பொருந்தாது என முடிவு செய்து பிரிக்க நினைத்தனர். சின்னக்கவுண்டன் அவன் வீட்டில் பழனியம்மாளைத்தான் திருமணம் செய்து கொள்வேன் எனப் போராடுகிறான். பழனியம்மாளும் அவ்வாறே உறுதியுடன் இருத்தலை, "என்னைப் போல் பிடிவாதமாக அவள் தந்தையிடம் என்னைத்தான் கட்டிக்குவேன் என்று கூறிவிட்டாள்"[9] என்னும் உரையாடல் உணர்த்தும்.

தையற்காரனான மரகதத்தின் காதலன் வேதாச்சலம் அவளுக்குத் தீபாவளிப் பரிசாக விலையுயர்ந்த பட்டுச்சட்டை, ஒன்றைத் தைத்துக் கொடுக்கிறான். மரகதத்தின் முதலாளி அம்மாவின் சட்டையும் அதேபோல் இருக்கிறது. ஒருநாள் முதலாளி அம்மாவின் சட்டை காணாமல் போகவே, மரகதம் அணிந்திருந்த சட்டையைப் பார்த்து அவள் மீது பழி சுமத்துகின்றனர். அவ்வேளையில் மரகதம் தன் காதலனைக் காட்டிக் கொடுத்தால் பிரச்சினையாகிவிடுமோ என எண்ணாது "ஏங்க, என் அத்தான் வாங்கிக் கொடுத்தாரு"[10] என்று கம்பீரமாக எடுத்துரைத்தாள். இவ்வாறு மரகதம் தன் உரிமைக்காக எதிர்த்து நின்று போராடுதலை 'இன்பத்தின் விலை' என்னும் கதை உணர்த்துகிறது.

‘செல்லி சிரித்தாள்’ என்னும் சிறுகதையில் ராமனின் மனைவி செல்லி அமைதியானவள். எளிய பெண்ணான அவள் எதையும் சிரித்தே மழுப்பிவிடுவாள். செல்லியிடம் ராமன், அவளது பழைய வீட்டை விற்றுப் பணம் பெறலாம் எனக் கூறுகிறான். ஆனால் செல்லி சம்மதிக்கவில்லை. அவளுக்குத் தெரியாமல் தரகரை வீட்டிற்கு அழைத்துவந்து, வீட்டை விற்க முன்பணம் வாங்கத் துணியும்போது அதற்கு உடன்படாத செல்லி, “உடனே எழுந்து போய்விடுங்க யார் வீட்டை யார் விற்பது”[11] என்று ஆவேசமாகப் பேசுகிறாள். இவ்வாறு செல்லி, பெண் உரிமையை நிலைநாட்டுபவளாகப் படைக்கப்பட்டுள்ளாள். தன்னுடைய பரம்பரைச் சொத்தைத் தன் விருப்பம் இல்லாமல் தன் கணவனாக இருந்தாலும் விற்க இயலாது என்பதை உணர்த்தும் விதத்தில் இக்கதை அமைந்துள்ளது.

அம்பலவாணரின் ஒரே மகளான பொற்கொடி தந்தையின் விருப்பத்திற்கு மாறாக முத்துவேலைக் காதலிக்கிறாள். தன் மகளின் காதலைத் தடுக்க முத்துவேலைத் தீர்த்துக்கட்டிவிடுமாறு காளிமுத்துவை ஏற்பாடு செய்கிறார் தந்தை. பொற்கொடி, காதலன் பலியாகிவிடக்கூடாது என்ற உரிமையோடு அவனைக் காக்க, தந்தை அனுப்பிய காளிமுத்துவை விஷக்கத்தியால் குத்த காதலனிடம் பழிவாங்கக் கூறினாலும் இறுதியில் தவறைத் தானே ஏற்று நீதிபதியின் முன் நின்று “அவரை ஒன்றும் செய்யாதீர்கள், எல்லாவற்றிற்கும் நான்தான் காரணம்”[12] என்கிறாள்.

இதன் மூலம் தன் காதலன் எவ்வகையிலும் குற்றப்படாமல், காதல் நிறைவேறத் துடிக்கும் மனநிலையையும் பெண்ணுரிமையை நிலைநாட்டித் தந்தையையே எதிர்த்துத் தன் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் துணிவையும் உடையவளாக விஷக்கத்தி கதையில் பொற்கொடியை விக்கிரமன் வெளிக்காட்டியுள்ளார்.

‘குழலோசை’ சிறுகதையில் மல்லிகா நாட்டியப் பெண்ணாகவும், குமாரவேலு குழலூதுபவளாகவும் திகழ்கின்றனர். ஒருநாள் நடனக் கச்சேரியில் மல்லிகா நடனமாட, குமாரவேலு முறையாகக் குழலூதாமல் தாளம் தப்பி வாசித்து நடனம் பாதியிலே நின்றுவிடுகிறது. சபையில் ஆரவாரமும், கேலியும் எழுகிறது. அப்போது “சீற்றம் மிகுந்த கொடிய நாகம்போல் சீறிய மல்லிகா, எனக்குத் தெரியும். கொஞ்ச நாள்களாகவே என்னை நீங்கள் அவமதிக்கிறீர்கள். உங்கள் குழலோசையால்தான் என் நடனம் எடுபடுவதாக எண்ணம் உங்களுக்கு”[13] என்கிறாள்.

ஆணும், பெண்ணும் இணைந்து செயல்படும் சூழலில் பெண்ணின் திறமையை ஏற்றுக்கொள்ளாது ஆண்கள் அவர்களை அடக்குதல் அல்லது ஆதிக்கம் செலுத்துதல் என்பது ஓர் சமூகச் சிக்கலாகும். பெண்களுக்கு உரிய மதிப்பும், மரியாதையும் கொடுக்கத் தயங்கும் மனப்போக்கே இவ் அவமதிப்புகளுக்குக் காரணமாகும். மல்லிகா நாட்டியத்தில் சிறந்திருந்தாலும் அவள் திறமையை ஏற்றுக்கொள்ளாத குமாரவேலு அவளை அவமதிக்கும் செயல்களில் ஈடுபடும் பொழுது அதனை எதிர்க்கும் துணிவுடன் மல்லிகாவைப் படைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். ஆணுக்குப் பெண் சமம் என்னும் பெண்ணுரிமையை நிலைநாட்டுவதாகவும், இச்சிறுகதையில் மல்லிகா படைக்கப்பட்டுள்ளாள்.

இவ்வாறு பெண்கள் தம் உரிமையை எந்தச் சூழலிலும் விட்டுக்கொடுக்காத இயல்புடையவர்களாகவும் அதற்காகப் போராடும் குணமுடையவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**பெண் சுதந்திரம்**

பெண்கள் கல்வி, வேலைவாய்ப்பு, பொருளாதாரத் தன்னிறைவு போன்ற பல்வேறு காரணங்களால் குடும்பத்திலும், சமுதாயத்திலும்

சுதந்திரமாகச் சிந்திக்கவும் செயல்படவும் தொடங்கியுள்ளனர். ஆண்களைச் சார்ந்து வாழும் நிலையிலிருந்து சுதந்திரமாக வாழும் நிலைக்குப் பெண்கள் மாறியுள்ளனர். இந்த நிலை ஏற்படுவதற்குப் பல்வேறு தலைவர்களும் கவிஞர்களும் எழுத்தாளர்களும் காலந்தோறும் குரல்கொடுத்துவந்தமையே காரணமாகும். அவ்வகையில் விக்கிரமன் தம் சிறுகதைகளில் பெண் சுதந்திரச் சிந்தனைகளைப் பதிவுசெய்துள்ளார்.

‘நீலரிப்பன்’ சிறுகதையில் பட்டணத்தில் வசிக்கும் அக்காள் பார்வதியின் வீட்டிற்கு வருகிறாள் தங்கை பரிமளம். ஒருநாள் சென்னைப் பட்டணத்தைச் சுற்றிப் பார்க்க மைத்துனி விரும்பியதால் ஞாயிற்றுக் கிழமையன்று வெளியில் அழைத்துச் செல்கிறான் கேசவன். மைத்துனி பரிமளம் அக்காவிடம் நீலரிப்பன் கேட்கிறாள். அதைக் கேசவனிடம் பார்வதி கூறுகிறாள். பணமில்லாததால் வாங்க முடியாது போக வீட்டிற்கு அழைத்துவந்துவிடுகிறான். கணவன் வாங்கித்தரமுடியாத சூழலில் தான் சேர்த்துவைத்திருந்த பணத்திலிருந்து உரிமையோடு அவனுக்குத் தெரிவிக்காமல் பரிமளத்துக்கு நீலரிப்பனை வாங்கிக் கொடுக்கிறாள். தன் கணவனிடம் “என்ன அப்படிப் பார்த்தீங்களே! ஸ்டேஷனில்...? நீங்கள் வாங்காவிட்டால் நானும் அதுபோல் சும்மா இருந்துவிட முடியுமா?”[14] என்கிறாள்.

இவ்வாறு பெண்களால் தனித்துச் செயல்படமுடியும் என்ற மனப்பாங்கினைப் பார்வதி பாத்திரத்தின் மூலம் இச்சிறுகதையில் விக்கிரமன் எடுத்துரைக்கிறார்.

பூரணி, சந்திரனுக்கு வாழ்க்கைப்பட்டு இனிதே குடும்பம் நடத்துகிறாள். சில மாதங்களிலேயே சந்திரன், பொய், பித்தலாட்டம்

போன்றவற்றாலும், சூதாட்டத்தாலும் வேலையை இழக்கிறான். அவளுடைய நகைகளையும் விற்றுவிடுகிறான். ஆசிரியை வேலைபார்க்கும் பூரணி, சந்திரனின் தொல்லைகள் தாங்காது "எனக்கு மூன்று முடிச்சிட்டவரை நம்பி இனி பயனில்லை என்று நான் தனித்து வாழ வழிதேடிக் கொண்டேன்"[15] என்கிறாள்.

கணவன் நேர்மையும் ஒழுக்கமும் இல்லாதவனாக மாறும்பொழுது 'கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருசன்' எனக் காலம் முழுவதும் அவனை ஏற்றுக்கொண்டு அவனோடு இணைந்து வாழாமல் தனித்து வாழத் துணிவுடன் முடிவெடுத்த பூரணி பெண்ணியச் சிந்தனை கொண்டவளாகப் படைக்கப்பட்டுள்ளாள். பெண்கள் பொருளாதார நிலையில் தன்னிறைவு பெரும் பொழுது கணவனுக்கு அடிமையாகவோ ஆணாதிக்கத்துக்குக் கட்டுப்பட்டோ வாழவேண்டிய அவசியமில்லை என்பதை உணர்த்துபவளாகவும் விளங்குகிறாள்.

விக்கிரமனின் சிறுகதைகளில் இவ்விரு கதைகளும் பெண்சுதந்திரத்தை மையமிட்ட கதைகளாகத் திகழ்வதை அறியமுடிகிறது.

## சமுதாயத்தில் பெண்களின் மதிப்பு

பெண்களின் வாழ்க்கையில் முதன்மைத் திருப்பமாக அமைவது திருமணம். திருமணமின்றியும் பெண்கள் வாழ இயலும் என்பதை உணர மறுக்கும் சமுதாய அமைப்பில் திருமணம் அவளுடைய வாழ்க்கையை நிர்ணயிப்பதாக அமைகிறது. திருமணம் என்பது பாலியல், இனப்பெருக்கம், பொருளதாரம், சமுதாயப் பங்கேற்பு இவற்றைச் சார்ந்தது. "திருமணத்தின் வழி அமைகின்ற குடும்பச் சூழலே ஒருவன் எவ்வாறு சமுதாயத்தில் பங்கேற்கிறான் என்பதை நிர்ணயம் செய்கிறது"[16] என்பர் பிராய்டு அடிலர்.

‘ஊர்வசி’ சிறுகதையில் குடும்ப வறுமைக்காக ஊர்வசி தன் உடலை விற்று வாழ்வு நடத்துகிறாள். சமுதாயத்தில் பெண்கள் கற்பை விற்றுப் பிழைப்பு நடத்தும்போது அவர்களின் மதிப்பு, மரியாதை எல்லாம் பறிபோய்விடுகிறது. ஊராரின் இழிவான பேச்சுக்கு ஆளாக வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. இத்தகைய சூழலில் அவளின் நிலையை எண்ணி அவளே வருந்தி அழுகிறாள். சமுதாயத்தில் பெண்கள் மதிப்போடு வாழவேண்டும் என்றால் ஒருவனுக்கு ஒருத்தியாக வாழவேண்டும் என்ற எண்ணத்தோடு ஊர்வசி தன்னைத் திருத்திக் கொண்டு இரயிலில் பயணம் செய்த ரங்கோத்தமனிடம் “இவ்வளவு அன்புடன் கேட்கும் நீங்கள் தான் என்னை ஏற்றுக்கொண்டு நிரந்தரமாக என்னைக் காப்பாற்றுங்களேன்”[17] என்று கேட்பதிலிருந்து சமுதாயம் மதிக்கும் பெண்ணாக வாழ எண்ணும் பாத்திரமாக ஊர்வசியைப் படைத்துக் காட்டியிருப்பது விளங்கும்.

குழந்தைப்பேறு மகளிர் வாழ்வில் பெரும்பங்கு வகிக்கின்றது. குழந்தைப்பேறு இல்லாவிடில் பெண்ணை மட்டுமே சமுதாயம் குறைகூறுகின்றது. கற்றறிந்தோர் இல்லங்களில் இந்நிலை சற்றே மாறி வருகின்றது. கிராமப்புறங்களில் குழந்தை இல்லையெனில் ஆண்களுக்கு மற்றொரு திருமணம் செய்யவும் முயற்சிகள் நடைபெறுகின்றன. இத்தகைய சூழலில் ஒரு பெண் குழந்தைச் செல்வத்துடன் இருக்கும்போது சமுதாயத்தில் நல்ல மதிப்பை பெறுகிறாள்.

விக்கிரமனின் ‘கண்ணன் மீண்டும் வருகிறான்’ என்ற சிறுகதையில் சீதா, சுரேஷ் என்ற மகனைப் பெற்று உடல் நலக்குறைவால் அக்குழந்தையை இழந்து தவிக்கிறாள். அவள் கணவன் மகாதேவனும் மிகுந்த வருத்தம் கொள்கிறான். பிள்ளையில்லா வீடு பேய்வீடு என்பார்கள். அதுபோல

பிள்ளையின் இறப்பிற்குப் பிறகு அவர்கள் வீடே சோகத்தில் மூழ்கியது. சில நாட்கள் கழித்துச் சீதா மகாதேவனிடம் கவலைகளை விடுத்து மகிழ்ச்சியோடு "மற்றொரு சுரேஷ் என் வயிற்றில் உதயமாகிவிட்டான்"[18] என்கிறாள்.

இறந்த குழந்தையையே நினைத்து மனம் வருந்திப் பிள்ளையில்லாமல் வாழ்வதை விடுத்து மீண்டும் ஒரு குழந்தையைப் பெற்றுச் சமுதாய மதிப்போடு வாழ நினைக்கும் பெண்மையின் உள்ளத்தூய்மையை இக்கதை மூலம் வெளிப்படுத்தியுள்ளார் விக்கிரமன். இவ்வாறு சமுதாய நன்மதிப்போடு பெண்கள் தம்மை வசப்படுத்தி வாழும் நிலையைக் காட்டியுள்ளமை புலப்படுகிறது.

**பெண்கள் எதிர்கொள்ளும் பாலியல் சிக்கல்கள்**

கற்பு என்பது பல நிலைகளிலும் பெண்கள் தங்களுடைய வாழ்க்கையில் சந்திக்கும் சிக்கல்களுக்கு மறைமுகக் காரணமாகவும், அதே சமயம் அடிப்படைக் காரணமாகவும் விளங்குகிறது. பாலியல் குற்றத்திற்கு ஆளான பெண்கள் ஊரார் உறவினரிடையே அவமதிப்பிற்கு ஆளாகின்றனர். தாக்கப்பட்டவர்களே தண்டனை அடையும் கொடுமை சமுதாய மரபாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது.

அடித்தள மக்களில் பெரும்பாலானோர் தம் பொருளாதார நெருக்கடியால் நெறிபிறழ்ந்த வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காகத் தம்மையே விலைபேசத் துணிகின்றனர்.

விக்கிரமனின் சிறுகதைகளில் பெண்கள் எவ்வாறெல்லாம் பாலியல் சிக்கல்களுக்கு ஆளாகின்றனர் என்பதை 'வந்த சுவடு' என்னும் சிறுகதை உணர்த்துகிறது. கேசவனின் மனைவி நீலாம்பிகை. கேசவன் அவளைத்

தவறான வழியில் சென்று பணம் ஈட்டித்தர வற்புறுத்துகிறான். அதனால் அவள் அவனைவிட்டுப் பிரிந்து சமூக நற்பணிமன்றம் அமைத்துத் தனியாக வாழ்கிறாள். பெண்களுக்கு ஏற்படும் கொடுமைகளை நினைத்து மனம் கலங்காது "பெண் குலத்துத் துயரைநான் துடைத்துவிட்டு மறுவேலை பார்க்கிறேன்"[19] என்று எண்ணுகிறாள்.

தன் கணவனே தன்னைத் தவறுக்குத் தூண்டிய போதும் அதற்கு உடன்படாது, தனித்துவந்து, பெண்கள் முன்னேற்றத்துக்காகப் பாடுபட நினைக்கும் நீலாம்பிகையை விக்கிரமன் இக்கதை மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

தேவகுஞ்சரி இளம் வயதிலேயே கணிதத் துறையிலும், பொருளாதாரத் துறையிலும் முதன்மையாகத் தேறி அந்தத் தொழிற்சாலையின் பொருளதார ஆலோசகராகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டவள். தாயை இழந்து தந்தையின் அரவணைப்பில் வளர்ந்து படிப்பில் முன்னேறி வேலைபார்த்து வருகிறாள். அவளின் அழகே அவளுக்கு விரோதியாகிறது. அவள் உடல் அழகை விரும்பி அந்தத் தொழிற்சாலை இயக்குநரின் மகன் மனோகரசாமி தேவகுஞ்சரியை அடையவில்லை என்றால் செத்துவிடுவேன் என அவன் தந்தையிடம் முறையிடுகிறான்.

மனோகரசாமியின் தந்தை "டேய்! அந்த அழகிதானே உனக்கு வேண்டும்? சின்ன வீடாக வைத்துக்கொள்ளேன். நம்ம ஜாதியிலும் அது சகஜம். மிகவும் பிரஸ்டீஜாக இருக்கும். அந்தப் பெண்ணுக்கு வயதான தந்தையைத் தவிர வேறு ஆதரவில்லை. பெரிய தொகையை அவரிடம் நீட்டு. சம்மதித்துவிடுவார். அதைவிட்டுவிட்டுக் கல்யாணம் குடித்தனம் எனப் பேசுகிறாயே!"[20] என்கிறார்.

வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு எந்த வகையில் எல்லாம் பாலியல் தொல்லை ஏற்படுகிறது என்பதோடு ஆணாதிக்க அடக்குமுறையால் ஒரு பெண் வறியவளாக இருக்கும் வேளையில் பணத்தைக் கொடுத்துக் கற்பையே விலைக்கு வாங்க நினைக்கும் மனோகரசாமியின் தந்தை போன்றோர் சமூகத்தில் இருப்பதை விக்கிரமன் அடையாளங்காட்டுகிறார்.

தேவகுஞ்சரி தனக்குப் பல வழிகளிலும் பாலியல் தொந்தரவுகள் இருக்கின்ற உண்மையைத் தந்தையிடம் கூறி ஆறுதல் பெற நினைக்கிறாள். ஆனால் தந்தையோ மனோகரசாமி பணத்திலும், அழகிலும் குறைவில்லை, உன் பெயரில் பத்துலட்சம் போட்டுவிடுகிறானாம் என்று கூறும்போது "அழகு, அந்தஸ்து, செல்வாக்கு யாருக்கு வேண்டுமப்பா? அவரை எப்படித் தேர்ந்தெடுத்தீர்கள்?"[21] என்று பொங்கி எழுகிறாள். நான் திருமணமே செய்துகொள்ளாமல் வாழ்ந்து காட்டுகிறேனப்பா எனப் பெண்ணுரிமைக் குரல் எழுப்புகிறாள்.

பணத்திற்காகத் தன் பெண்ணையே ஒரு தரமற்றவனோடு வாழச் செய்யும்படிக் கூறும் தேவகுஞ்சரியின் தந்தையைப் போன்ற பணத்தாசைக்காரர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். தேவகுஞ்சரி வாழ்க்கைத்துணையே இல்லாமலும் வாழ முடியும் எனக் கூறுவதால் ஆணாதிக்க எதிர்ப்பு அங்கு தோன்றுவதைக் காணமுடிகிறது. இறுதியில் தேவகுஞ்சரி அறுபது வயது முதியவரைத் திருமணம் செய்து வாழும் நிலையில் பெண்கள் சமுதாயத்தை முழுமையாக எதிர்த்துக்கொண்டு வாழ இயலாது என உணர்த்தும் போக்குப் புலனாகிறது.

'அழகின் நிறம்' சிறுகதையில் குமாரசாமி, ஞானம் தம்பதியரின் வீட்டு மாடியில் 'சந்துரு' குடியிருக்கிறான். குமாரசாமி சந்துருவிடம் நன்கு பேசிப் பழகுகிறார். ஞானத்தை வெளியில் சினிமாவுக்குக் கூட்டிச் சென்று வா என்பதுவரை அவர் சந்துருவிடம் கூறுகிறார். ஆனால் சந்துரு சபலப்புத்தி கொண்டவனாக ஞானத்திடம் பேசுகிறான். ஞானம் அதை ஒரு பொருட்டாகக் கருதவில்லை. ஒருநாள் ஞானத்தைச் சந்துரு அத்துமீறிப் பிடித்தணைக்க முற்படுகையில் அவள் வெகுண்டெழுகிறாள். "சீ! என்று கர்ஜித்தாளே பார்க்கலாம் என்னை என்ன நினைத்துக் கொண்டாய்? போ வெளியே"[22] என்று அடிபட்ட புலியாய்ச் சீறுகிறாள்.

சமுதாயத்தில் ஆண்கள் பெண்களுக்குப் பாலியல் தொல்லைகள் கொடுப்பது பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுள் ஒன்றாகும். குடும்பத்தில் நெருங்கிப் பழகும் உறுப்பினர்களாலேயே இத்தகைய தொந்தரவுகள் பெரும்பாலும் ஏற்படுகின்றன என்பது பொதுவான கருத்து. அத்தகைய சூழலில் பெண்கள் அவமானம் என்று கருதி நடந்த நிகழ்வுகளை வெளியில் சொல்லாமலும் எதிர் வினை புரியாமலும் இருந்துவிடுகின்றனர். ஆனால் விக்கிரமன் படைத்துள்ள ஞானம் சந்துருவின் எண்ணத்தை அறிந்து சினங்கொண்டு பேசுவது பெண்ணிய நோக்கில் காணத்தக்கதாகும்.

'வளர்த்த மான்' சிறுகதையில் வரும் அன்பானந்தர் ஒரு பிரம்மச்சாரி. அனாதை இல்லம் வைத்து நடத்திவருபவர். அவ்வில்லத்தில் கண்ணிழந்த கயல்விழி அடைக்கலமானாள். வேலியே பயிரை மேய்வதுபோல, அழகும் வனப்பும் நிறைந்த கயல்விழியை எப்போதும் பார்த்துத் தனக்குள்ளேயே ஆசையை வளர்த்துக்கொண்ட அன்பானந்தர் "கயல்விழியை அடைந்து, அவளுடன் வாழ்ந்துகொண்டே அநாதை இல்லத்தை நடத்தக் கூடாதா? அவரே கேள்விகேட்டு அதற்கு அவரே விடையும் சொல்லிக்கொண்டார்"[23]

என்பதிலிருந்து அநாதையாய் அடைக்கலம் புகுந்த கயல்விழியை அடையத் துடிக்கும் சபலப்புத்தி கொண்ட அன்பானந்தர் போன்றவர்களால் ஏற்படும் பாலியல் தொல்லைகளை 'வளர்த்த மான்' கதை மூலம் எடுத்துக் காட்டியுள்ளார் விக்கிரமன்.

நெற்றியில் பொட்டு, காவியுடை, கழுத்தில் மாலை போன்ற பொய் வேடங்களுக்குள் நடக்கும் அவலத்தையும் இக்கதை பிரதிபலிப்பதாய் அமைகிறது.

'ஓ' சிறுகதையில் கைரேகை பார்த்துக் குறிசொல்லும் நிபுணராக நித்யானந்தம் இருக்கிறார். அவர் ஒரு விடுதியில் தங்கிக் கைரேகை பார்த்துவரும் வேளையில் இரயில் நிலைய விடுதியில் வேலைபார்த்துவந்த வறிய தாயின் மகளிடம், கைநீட்டு ரேகை பார்க்கிறேன் என்று கூறி மந்திரத்தால் டில்லிக்கு அழைத்துச் சென்று அவளைக் கர்ப்பிணியாக்கி நிர்க்கதியாய் விட்டுச் சென்று விடுகிறான். அவளோ அவன் வராததால் தான் பெற்ற பையனுடன் ஊர்ஊராகப் பிச்சையெடுக்கும் நிலைக்கு ஆளாகிறாள். இவ்வாறு பாலியல் தொல்லைகளுக்கு ஆளாகி ஆதரவில்லாமல் குழந்தையுடன் இருக்கும் பெண்களும் உள்ளனர் என்பதற்கு எடுத்துக்காட்டாக இக்கதை காணப்படுகிறது.

ஆசிரியர் என்பவர் தெய்வத்துக்கு இணையானவர். அத்தெய்வத்தை வணங்குபவர்கள் மாணவர்கள். இத்தகைய மதிப்புடைய ஆசிரியரே தன்னிடம் இசைபயில வந்த மாணவியிடம் தவறுதலாக நடக்கத்துடிக்கும் பாலியல் தொல்லைகளை விக்கிரமன் 'நல்லதோர் வீணை' என்னும் சிறுகதையில் காட்டியுள்ளார்.

கேசவராம் ஓர் இசையாசிரியர். பத்தாண்டு காலமாகத் தன் மனைவியை விட்டுப் பிரிந்து வாழ்கிறார். மாணவியர்க்கு இசையினைக் கற்றுக்கொடுக்கும் குருவாக உள்ளார். தன்னிடம் இசைபயில [illegible] மாணவியர் வந்து செல்லும் வேளையில் அவர் மனம் வாணியின் மீது சபலம் கொள்கிறது. அவளை எப்படியாவது அடையவேண்டும் என நினைக்கிறது. வாணியோ மதிப்பும், மரியாதையும் உடையவளாக அவருடன் பேசுகிறாள்; வீணை கற்கிறாள்.

"நீங்கள் என்னைக் கலை உலகில் உயர்த்துவதற்கு நான் என்ன காணிக்கை கொடுத்து என் கடமையை நிறைவேற்றிக் கொள்வேன் சார்!' என்று இதயபூர்வமாக வாணி கூறும்போது, காணிக்கை தானே? உன்னையே எனக்கு அர்ப்பணித்துவிடேன் என்று கேட்டுவிடத் துடிப்பார் கேசவராம்"[24] என்பதிலிருந்து மாணவியிடமே தவறாகப் பழக நினைக்கும் குருவின் அநாகரிக எண்ணத்தைக் காணமுடிகிறது. தவற்றைத் திருத்தி நல்வழிக்குக் கொண்டுவர நினைக்கும் ஆசிரியர் நிலையிலிருந்து விலகி நடக்கும் கேசவராமின் செயல்கள் மாணவியர்களின் பெற்றோர்களுக்கும் ஒரு அச்ச உணர்வை ஏற்படுத்துவதாக அமைகிறது. இவ்வாறாக சமூகத்தில் பெண்களுக்குக் குடும்பத்திலும், வேலைக்குச் செல்லும் இடங்களிலும் அனாதையாக அடைக்கலம் புகும் இல்லங்களிலும் பழக்கமான உறவினர்களினாலும், கற்றுக்கொடுக்கும் ஆசிரியராலும் பாலியல் தொல்லைகளால் சிக்குண்டு பல பிரச்சினைகளுக்கு ஆளாகும் நிலையினை மேற்கண்ட சிறுகதைகளினால் சமுதாயத்திற்கு எடுத்துக்காட்டியுள்ளார். இக்காரணத்தால் ஆணும் பெண்ணும் சரிநிகர் சமமாக ஒரு சில இடங்களில் பணிபுரியும் நிலை குறைய வாய்ப்புள்ளது. ஆனால் பெண்கள் தங்கள் உரிமைகளையும், சுதந்திரத்தையும் பெறுவதற்குச் சிறிதும் அஞ்சாது

போராடும் நிலைக்கு உயர்ந்துவிட்டனர் என்ற கருத்தை விக்கிரமன் தன் சிறுகதைகளில் காட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். பெண்ணடிமை, ஆணாதிக்க எதிர்ப்பு போன்றவையும் இவர் சிறுகதைகளில் எடுத்துக்கூறப்பட்டுள்ளன. பொதுவாக விக்கிரமன், பெண்கள் சமுதாயத்தில் போற்றப்படுபவர்களாகத் திகழவேண்டும் என்ற எண்ணம் கொண்டிருத்தல் புலப்படுகிறது.

## தொகுப்புரை

'Femina' என்ற ஆங்கிலச் சொல் பெண்ணியத்தைக் குறிக்கும். சமூகத்தில் ஆணாதிக்க நிலை பரவிவரும் முறையில் பெண்கள் பல நிலைகளில் அடக்கப்பெறுகின்றனர். இந்நிலையிலிருந்து மீட்சி பெறுவதற்கான விழிப்புணர்ச்சி பெண்ணியச் சிந்தனையாகக் கருதப் பெறுகிறது.

அறிவுச் சுரண்டல், பொருளாதாரச் சுரண்டல், பாலியல் வன்முறை ஆணாதிக்க அடக்குமுறை இவற்றிலிருந்து விடுபடுவதில் பெண்ணியம் தீவிரம் காட்டிவருகிறது. பெண்கள் தங்களுக்கான உரிமையையும், விடுதலையையும், சமூகத்தின் எல்லா மட்டங்களிலும் நிலைநாட்டும் உணர்வினைப் பெறுவதில் மிகுந்த அக்கறை செலுத்தி வந்துள்ளனர்.

பெண் சமுதாயத்தில் காணப்படும் சிக்கல்களைக் களைவதன் மூலம் அரசியல், பண்பாடு, பொருளாதாரம், ஆன்மிகம் போன்ற துறைகளில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்த முடியும். 1925 இல் தொடங்கப்பட்ட இவ்வமைப்பு அதே ஆண்டில் அகில உலகப் பெண்கள் அமைப்பைத் தலைமையாகக் கொண்டு அதோடு இணைந்து செயலாற்றத் தொடங்கியது. இவ்வமைப்பின் குறிக்கோளாக இந்தியாவில் உள்ள பெண்களை ஒன்றுசேர்த்து ஒருவர்மீது ஒருவர் அக்கறை கொள்ள வழிப்படுத்துதல்,

ஏற்கனவே உள்ள அமைப்புகளை ஒருங்கிணைத்து முன்னேற்றுதல், பிற நாடுகளில் உள்ள தேசியப் பெண்கள் அமைப்புகளுடன் இணைந்து செயலாற்றுதல் என்பனவாக அமைந்தன.

விக்கிரமனின் சிறுகதைகளில் பெண் உரிமை, பெண் சுதந்திரம், சமூகத்தில் பெண்களின் மதிப்பு, பெண்கள் எதிர்கொள்ளும் பாலியல் சிக்கல்கள் ஆகிய பெண்ணியச் சிந்தனைகளைக் காணமுடிகிறது. பெண் உரிமைக் கருத்தாக ஒருவனை ஒருத்தி விரும்பிய நிலையில் தடைகள் பல குறுக்கிட்டாலும் அதை எதிர்த்து நின்று போராடி வெற்றி கொள்ளும் துணிவையும், தன் பரம்பரைச் சொத்தைத் தன் விருப்பம் இல்லாமல் கணவனாக இருந்தாலும் விற்க அனுமதிக்காது போராடும் நிலைமையும் வெளிப்படுத்தியுள்ளார். தந்தையையே எதிர்த்துத் தன் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் உரிமை உள்ளவளாகப் பொற்கொடியைப் படைத்துள்ளார். ஆணும், பெண்ணும் இணைந்து செயல்படும் சூழலில் பெண்ணின் திறமையை ஏற்றுக்கொள்ளாது அடக்குமுறையைக் கையாளும் ஆண்களுக்கு எதிராக இருவரும் சமம் எனப் போராடத் துடிக்கும் நிலையையும் வெளிக்காட்டியுள்ளார்.

பெண்கள் பொருளாதார நிலையில் தன்னிறைவு பெறும் பொழுது கணவனுக்கு அடிமையாகவோ, ஆணாதிக்கத்துக்குக் கட்டுப்பட்டோ வாழ வேண்டிய அவசியமில்லை என்ற கருத்தும் இவர்தம் சிறுகதைகளில் காணமுடிகிறது.

சமுதாயத்தில் பெண்கள் மதிப்புடையவர்களாகத் திகழ வேண்டும் என்பதற்காகத் தவறான வழியில் பொருளீட்டி வாழ்க்கை நடத்திய ஊர்வசி திருந்தி தன் வாழ்வு இனிமேல் ஒருவனோடு மட்டும் தான் என்று ரங்கோத்தமனை மணந்து வாழும் பாத்திரமாகத் திகழ்கிறாள். அதேபோல்

கணவன் மனைவி தாம்பத்ய உறவோடு தாய்மை பெற்றுப் பிள்ளைச் செல்வத்தோடு வாழ்வதுதான் வாழ்வின் முழுமை என்பதற்கு எடுத்துக்காட்டாகவும் தம் சிறுகதையைப் படைத்துள்ளார்.

பெண்கள் தங்களுடைய வாழ்க்கையில் சந்திக்கும் சிக்கல்களுக்கு மறைமுகக் காரணமாகவும், அதே சமயம் அடிப்படைக் காரணமாகவும் காணப்படுவது கட்டுப்பாடுகளே என்பது விக்கிரமன் சிறுகதைகளில் உணர்த்தப்பட்டுள்ளது.

தன் கணவனே தன்னைப் பாலியல் தவறுக்குத் தூண்டிய போதும் உடன்படாது தனித்து வந்து, பெண் முன்னேற்றத்துக்காகப் பாடுபடும் பெண்ணியச் சிந்தனையை விக்கிரமன் எடுத்துக் காட்டியுள்ளார். வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு ஏற்படும் பாலியல் தொல்லைகளையும் அதனால் அப்பெண்கள் எடுக்கும் முடிவுகளையும் விக்கிரமன் சிறுகதைகளில் அறிய முடிகிறது. பணத்திற்காகத் தன் பெண்ணையே தரமற்ற மனிதனோடு வாழச் சொல்லும் தந்தையை எதிர்த்து ஆணாதிக்கத்தை எதிர்க்கும் நிலையும், குடும்பத்தில் நெருங்கிப் பழகும் உறவினர்களாலேயே ஏற்படும் பாலியல் சிக்கல்களையும் இவரது சிறுகதைகள் எடுத்துக்காட்டுகின்றன.

காவியுடையணிந்து வேடமிட்டுப் பெண்களுக்குப் பாலியல் தொல்லை கொடுக்கும் சாமியார்களின் அநாகரிகச் செயல்களும், ஓர் ஆசிரியராலேயே ஒரு மாணவிக்கு ஏற்படும் பாலியல் தொந்தரவுகளும் இவர் தம் கதைகளில் புலப்படுத்தப்பட்டுள்ளன.

இவ்வாறு விக்கிரமன் தம் கதைகளில் பெண்கள் முன்னேற்றத்துக்கும் சுதந்திரத்திற்கும் உரிமைக்கும் குரல்கொடுப்பவராக உள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. கதிர் மகாதேவன், மோகன் (ப.ஆ.), பெண்ணியம் வெள்ளிவிழா மலர், ப.1
2. இரா.பிரேமா, பெண் மரபிலும் இலக்கியத்திலும், ப.131
3. இரா.பிரேமா, பெண்ணியம், ப.17
4. மேலது, ப.53
5. மேலது, ப.37
6. மேலது, ப.66
7. மேலது, ப.45
8. சி.சுப்பிரமணியபாரதி, பாரதி நூல்கள், ப.272
9. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.53
10. மேலது, ப.152
11. மேலது, ப.601
12. மேலது, ப.663
13. மேலது, ப.211
14. மேலது, ப.235
15. மேலது, ப.521
16. சி.என்.நடராசன் குடும்பம் (கட்.), வாழ்வியல் களஞ்சியம், தொகுதி - 7, பக்.591-597
17. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.453
18. மேலது, ப.516
19. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.531
20. மேலது, ப.702
21. மேலது, ப.703
22. மேலது, ப.392
23. மேலது, ப.616
24. மேலது, பக்.549-550.

## இயல் - 5

# கலைத்திறன்கள்

ஒவ்வொரு சிறுகதையினையும் உருவாக்கும் எழுத்தாளன் ஏனைய மனிதரிடமிருந்து பெரிதும் வேறுபட்டவன். தனக்கென்று ஒரு தனித்த பார்வை உடையவன். அவனுடைய பார்வையும் ஆளுமையும் சேர்ந்து உலகத்தை எக்கோலத்தில் அவனுக்குக் காட்டியதோ அதைப் படைத்தளிக்கும் கலைத்திறம் பெற்றவனாகிறான்.

தமிழ்ச்சிறுகதை வகைவகையான வனப்புகளோடும் நயங்களோடும் வளமாக வளர்ந்து வந்திருக்கிறது. இன்னும் வளர்ந்து கொண்டிருக்கிறது. கலைத்திறனும், கற்பனை வீச்சும், எழுத்தாற்றலும் பெற்ற பல படைப்பாளிகள் சிறுகதை இலக்கியத்துக்கு அழகும், ஆழமும், உயிரும், உணர்வும் ஊட்டியிருக்கிறார்கள். இன்றளவும் தங்கள் திறமையால் புதுமெருகும் புது வனப்பும் சேர்த்து வருகிறார்கள்.

சிறுகதைகள் பல தன்மைகளில், பல நோக்குடன் எழுதப்படுகின்றன. சம்பவங்களை ஆதாரமாகக் கொண்டு உணர்ச்சியை அடிப்படையாக வைத்து, மனிதமன இயல்புகளை விளக்குவதற்கென்று விசித்திர மனிதரின் விந்தைப் போக்குகளை எடுத்துக் கூறுவதற்காகவும், வாழ்க்கையின் முரண்களைச் சுட்டிக்காட்ட வாழ்வின் நியதிகளையும் உண்மைகளையும், விதவிதமான அனுபவங்களையும் பதிவுசெய்வதற்காகவும், படைப்பாளர்கள் தங்கள் கலைநயத்தை அதில் புகுத்திச் சிறுகதைகளைப் படைத்திருக்கிறார்கள்.

சிக்கலில்லாமல், தெளிந்த நீரோடை போல் செல்லும் கதைப்போக்கு ஏராளமான சம்பவங்களை உள்ளடக்கியிருந்த போதும் குழப்பமில்லாமல் செல்லும் பாங்கு எழுத்தாளரின் கலைத்திறமைக்கு நல்லதொரு எடுத்துக்காட்டாய் விளங்கும்.

பாத்திரங்களே தங்கள் கதையைக் கூறுவதும், கூறிக்கொண்டே கதையை நகர்த்துவதும் ஓர் உத்தி. அது தமிழ்ச் சிறுகதை உலகிற்குப் புதிதன்று. ஆனால் படிக்கும்போதே கதாபாத்திரமாக வாசகர்களை மாறச்செய்யும் பாங்கு எழுத்தாளரின் கலைத்திறத்தைப் பொருத்து அமைகிறது. ஆற்றொழுக்கான நடை, செயற்கையில்லாத சம்பவங்கள் இயல்பாய் இருப்பது போன்ற கூறுகள் நல்ல சிறுகதைக்கு ஆதாரமாக அமைகின்றன. கற்பனை வளத்தோடு சிறுகதைகளை அழகுபட எடுத்துச் செல்வதும் நல்ல ஓர் உத்தியாகும்.

சிறுகதை எழுதுவதில் சொல்லாட்சியிலும், புதுமையிலும் புதிய புதிய சோதனைகள் இடம்பெறவேண்டும். கதைசொல்வதில் எளிய நடை, கதைமாந்தரின் உரையாடல் மூலம் இயல்பான மனித உணர்ச்சிகளை மறைத்து, நற்பண்புகளைக் காண்பிக்கும் வகையில் நடந்துகொள்ளல் போன்றவை நல்ல கலைத்திறனுக்குச் சான்றாகும்.

ஒவ்வொரு சிறுகதையிலும் பாத்திர வார்ப்புதான் கதையின் கலைப்பண்புக்கு அடித்தளம். கதையின் பொருள்களில் எதிர்பாராத ஒரு கோணம், சொல்லாட்சியில் எதிர்பாராத வேகம், கதையின் காட்சியில் அப்பட்டமான நிதர்சனம் போன்றவை அவரவர் கையாளும் கலைத்திறனுக்கேற்ப அமைகிறது. அனுபவத்தின் இருண்ட பகுதிகளைப் படம்பிடித்துக் காட்டும் திறனும் கதையாசிரியர்க்கு உண்டு.

அவ்வகையில் சிறுகதைத் தொடக்கம், முடிவு, தலைப்புப் பொருத்தம், உரையாடல், மொழிநடை, உத்திகள் ஆகிய கூறுகள் எழுத்தாளரின் தனித்தன்மையை வெளிப்படுத்துவனவாகும். இவற்றை விக்கிரமன், சிறுகதைகளில் அமைத்துள்ள பாங்கை ஆய்ந்து வெளிப்படுத்துவது இவ்வியலின் நோக்கமாகும்.

**கதைத்தொடக்கம்**

சிறுகதையின் தொடக்கம் வாயில்போன்றது. கதையில் நுழைவோரை அது ஈர்க்கும்படியாக அமையவேண்டும். ஆர்வத்தைத் தூண்டுதல் என்ற நிலையில் மட்டுமல்லாமல் கதையின் கருப்பொருளை, சிக்கலை, கதையின் நோக்கத்தை அறிமுகப்படுத்துவதாக அமைவதே சிறப்பான தொடக்கம் ஆகும்.

"சிறுகதையை இப்படித்தான் தொடங்கவேண்டும் என்ற நியதி ஏதும் கிடையாது. அப்படி வரையறுக்கவும் முடியாது. ஒவ்வொரு கதைக்கேற்ற தொடக்கம் ஒவ்வொரு விதமாக இருக்கும். படைப்பு நோக்கம், கதைப்பொருள், கலைஞன் அதில் கையாள விரும்பும் கதை உத்திகள் இவற்றிற்கேற்பவே தொடக்கம் அமையும்."[1]

"கதைப்பொருளுக்கும் கதைக்கருவிற்கும் ஏற்ற தொடக்கங்கள் அமையும்போதே சிறுகதைகள் வெற்றி பெறுகின்றன."[2] ஒரு கதையைப் படைக்கின்ற ஆசிரியனே அது தொடர்பான அனைத்தையும் அறிந்தவன் ஆவான். வாசகன் என்பவன் ஏதும் அறியாதவன். அத்தகு வாசகனைத் தனது கதைகளிலே மூழ்கிவிடும் படியாகச் செய்பவனே படைப்பாளன். அத்தகு படைப்புகளைப் படைக்கும் கலைஞன் காலத்தால் போற்றப்படுவான். கதையின் முதல் வரியைப் படிக்கும் வாசகரின் விழியையும், மனதையும் தனது கதையோடு இழுத்துச் செல்லும் வண்ணமாய்த் தொடக்கம் அமையவேண்டும்.

"குதிரைப் பந்தயம் போல் சுவைமிக்கதாய்த் தொடக்கம் அமையவேண்டும்"[3] என்கிறார் செட்ஜ்விக். "சுருங்கச் சொன்னால் கதை நடுவிலே, கருவிலே தொடங்க வேண்டும்"[4] என்பார் மீனாட்சி முருகரெத்தினம். அவ்வகையில் விக்கிரமனின் சிறுகதைத் தொடக்கங்களை,

1. உரையாடல் தொடக்கம்

2. அறிமுகத் தொடக்கம்

3. நிகழ்ச்சித் தொடக்கம்

4. வருணனைத் தொடக்கம்

5. சூழல் தொடக்கம்

6. ஆர்வத் தொடக்கம்

7. நேரடித் தொடக்கம்

என ஏழு வகையாகப் பகுத்துக் காணமுடியும்.

**உரையாடல் தொடக்கம்**

விக்கிரமனின் சிறுகதைகளில் பெரும்பான்மையான உரையாடல்கள் நாடகத்தன்மை சார்ந்ததாகும். அவர் தம் கதைகளுள் பெரும்பாலானவை, உரையாடல் தொடக்கத்தைக் கொண்டு அமைந்துள்ளன. சிறுகதையுள் படைப்பாளரின் சிந்தனையை ஆழப்பதியவைக்கும் அளவும், சமுதாய நிலையைப் புலப்படுத்தும் வகையிலும் ஆர்வத்தன்மையைத் தூண்டும் வகையிலும் ஆபத்துக் காட்சியை சித்திரிக்கும் நிலையிலும், கதையின் முடிவைச் சுட்டும் சூழலிலும் இத்தொடக்கத்தை அமைத்துள்ளார். கதையின் மையத் தளத்தைச் சுட்டும் வகையில் அமைந்த உரையாடல் தொடக்கம் சிறுகதை வாசகரின் சிந்தனையைத் தூண்டும் வண்ணம் அமைந்துள்ளது.

விக்கிரமனின் ‘கதையும், கல்யாணமும்’ என்ற சிறுகதையில், “ஆமாம் மாரி... நீ நல்லாப் பேசறே... நீ கூட... இந்தியாவிலேர்ந்து வந்தவன் தானா... நான் என்ன நெனைச்சிருந்தேன் தெரியுமா? பர்மாவிலே பொறந்து பர்மாவிலேயே வளர்ந்த நீயே பர்மாவை விட்டு வரும்போது நான் மட்டும் வர்றதிலே ஒண்ணும் ஆச்சரியமில்லைன்னு எண்ணினேன். நீயும் பக்கத்திலேர்ந்து போனவன்தானா? என்றான் வடிவேலு”[5] என்று உரையாடல்

தொடக்கம் உள்ளது. இவ்வாறு மீண்ட நாதம், பூங்கோதையின் கணவன், கல்யாணத்திருட்டு, இன்பத்தின்விலை போன்ற சிறுகதைகளிலும் உரையாடல் தொடக்கம் அமைந்துள்ளது.

### அறிமுகத் தொடக்கம்

விக்கிரமன் தன் கதைப்பொருளுக்கான மாந்தரின் தோற்றம், பண்பு, நிகழ்ச்சி ஆகியவற்றை அறிமுகப்படுத்தும் முறையில் இவ்வகைத் தொடக்கத்தினை அமைத்துள்ளார்.

### கதைமாந்தர் தோற்றம்

'வந்த சுவடு' கதையில் "அழுக்கடைந்த கோட்டும், தோளில் ஒரு பையும், மற்றொரு கரத்தில் ஒரு சிறு தோல் பையுமாக நின்றிருப்பவர் அங்கிருந்து பார்க்கும் போதே தெளிவாகத் தெரிந்தார்"[6] என்பதிலிருந்து தோற்ற அறிமுகம் புலனாகும். இதுபோன்று 'பூச்சாண்டி' கதையிலும் "அடர்த்தியான வளர்ந்த தலைமுடி. முகமெல்லாம் காய் காயாக உருண்டையான வடுக்கள். ஒரு கண்ணில் பூ விழுந்திருந்தது. உதட்டையும் மீறி முன்பற்கள் இரண்டு வெளியே நீட்டியிருந்தன"[7] எனப் பாத்திரத்தின் தோற்ற அறிமுகம் காணப்படுகிறது. இதேபோல நரசிங்கராவ், மலைவீடு, கற்பெனும் கனல், பழைய ராஜகோபாலன், ஓ ஆகிய கதைகளிலும் அறிமுகத் தொடக்கமாகக் கதைமாந்தரின் தோற்றம் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### பண்பு

கதைமாந்தர்களை அறிமுகப்படுத்தும்போது அவர்களின் பண்புநலன்களை மையமாகக் கொண்டு கதையின் முக்கிய நிகழ்ச்சிக்குக் காரணமாக அமையும் பண்பு பற்றிய விளக்கமே கதையின் தொடக்கமாக அமைவதுண்டு. இத்தகைய தொடக்கத்தின்வழி, கதைப்போக்கிற்கும்,

கதைமாந்தரின் பண்பு நலன்களுக்குமிடையே காணப்படும் இயைபினை வாசகன் உணர்ந்துகொள்ள வாய்ப்பு ஏற்படுகின்றது.

விக்கிரமனின் 'சேது' கதையில் "சேது எப்போ ரிடையர் ஆகப் போகிறான்? ரிஜிஸ்டரைப் பார்த்தாயா? எவ்வளவு வயது என்று எஸ்டாபிளிஷ்மெண்ட் கிளார்க்கைக் கேட்பான் கிட்டு. சேது எப்போது ஒழிவான் என்பதைத் தான் 'ரிடையர்' என்ற பாஷையில் சொல்வான். சேது விலகினால்தான் கிட்டுவிற்குப் பதவி உயர்வு கிடைக்கும்"[8] என்பதிலிருந்து கிட்டுவின் பொறாமைக் குணத்தை வெளிப்படுத்தும் விதத்தில் பண்புத் தொடக்கமாக அமைகிறது.

'அழுக்கு' கதையில் "நல்லதோற்றம், பேச்சில் நளினம், இலேசான நகைச்சுவையுடன் அழுத்தமான ஆழ்ந்த சிந்தனைகளை இரண்டு மணி, மூன்றுமணி நேரம் போவதே தெரியாமல் சபையைக் கட்டுண்ட நாகமாகச் செய்தல் போன்ற அவர் ஆற்றலுக்குப் பல பட்டங்கள்"[9] எனக் கதைமாந்தர் முருகவேளின் நற்பண்புகளைக் கூறிக் கதையைத் தொடங்குவதாக படைத்துள்ளார் விக்கிரமன். 'அழுக்கு' என்னும் கதைத் தலைப்பிற்கு முரணாகப் பாத்திரத்தின் நற்பண்புகளைச் சுட்டித் தொடங்குவது வாசகரின் ஆர்வத்தைத் தூண்டுவதாக அமைகிறது.

"கந்தப்பன் தீயினுள் பாய்ந்தான். 'கந்தப்பா, கந்தப்பா' என்று ஏகக் கூக்குரல். குடிசையின் முற்றத்தில் ஏகப்புகை. கண்ணே தெரியவில்லை. வினாடிக்கு வினாடி தீ அதிகமாகிக் கொண்டே வந்துவிட்டது. கந்தப்பன் காளையின் இருப்பிடத்தைப் பிடித்துவிட்டான். அப்பொழுதிருந்த வேகத்தில் பலமாகத் தும்பை இழுத்தறுத்து, காளையையும் இழுத்துக்கொண்டு வெளியே வந்துவிட்டான்"[10] என்பது 'கந்தப்பன் காளை'

சிறுகதையில் கந்தப்பன் அஃறிணை உயிர்களிடத்துக் காட்டும் இரக்கப் பண்பைச் சுட்டுவதாக அமைந்துள்ளது. விக்கிரமனின் சிறுகதைகளில் தங்கவளையல், மனிதநேயம், ஒற்றைக் குருவி, ஊர்வசி ஆகிய கதைகள் இரக்கப் பண்பையும் வளர்த்தமான் கதையில் சபலப்புத்தி, கயமை ஆகிய பண்புகளையும் தொடக்கமாகக் கொண்டு அமைந்துள்ளன.

**நிகழ்ச்சித்தொடக்கம்**

வாசகர்களை ஆரம்பத்திலேயே கதைக்குள் மூழ்கடிக்கச் செய்யக் கதாசிரியர்கள் நிகழ்ச்சிகளைத் தொடக்கமாக அமைப்பதுண்டு. இவ்வாறு நிகழ்ச்சிகள் தொடக்கமாக அமைகின்ற கதைகளை வாசகர்கள் ஆர்வத்தோடு தொடர்ந்து படித்துவிடுவர்.

'மனிதநேயம்' சிறுகதையில் "மனிதகுல மேம்பாட்டிற்கு உதவும் சங்கத்தின் வெள்ளி விழாவில் தன் கணவருக்குப் பெரும் பாராட்டும் விருதும் அளிக்கப்போவதை அறிய, திருமதி தேவசேனைக்கு அளவுகடந்த மகிழ்ச்சி. அன்று அவருக்கு மனிதநேய மாமணி என்ற விருது அளித்துப் பாராட்டப் போகிறார்கள்"[11] என்பது நிகழ்ச்சித் தொடக்கமாக உள்ளது.

"குரோம்பேட்டை ஸ்டேஷனை விட்டு மின்சார ரயில் கிளம்பிவிட்டது. ராமா ராவ் ஜன்னல் வழியாக ஒருமுறை ஸ்டேஷனைப் பார்த்துவிட்டு கையிலேயிருந்த தினசரியைப் படிப்பதில் ஆழ்ந்தார்"[12] என்ற நிகழ்ச்சியைச் 'சுதந்தரப் பறவை' என்ற சிறுகதையின் தொடக்கமாக அமைத்துள்ளார் விக்கிரமன்.

'நரசிங்கராவ்' சிறுகதையில் "தெருக்கோடியில் இருந்த ஆஞ்சனேயர் கோவிலுக்குச் சென்று ஒரு பிரதட்சணம் செய்துவிட்டு மண்டபத்தில் அரைமணிநேரத்திற்கு மேல் தூணில் சாய்ந்து கொண்டு தியானம்

செய்துவிட்டு, துளசி தீர்த்தம் பெற்று, பிரசாத துளசி தளத்தில் சிறிது கிள்ளி வாயில் போட்டான்"[13] என்று நிகழ்ச்சித் தொடக்கம் அமைந்துள்ளது. இவ்வாறே 'பாதுகாப்பு வளையம்,' 'குலதனம்,' 'நந்து' முதலான கதைகளும் நிகழ்ச்சியைத் தொடக்கமாகக் கொண்டு அமைந்துள்ளன.

## வருணனைத் தொடக்கம்

வருணனைத் தொடக்கமாக அமைந்த கதைகளைக் காட்சி வருணனை, பாத்திர வருணனை, சூழல் வருணனை எனப் பாகுபடுத்தி அறிய இயலும்.

### காட்சி வருணனை

விக்கிரமனின் 'ஓ' கதையில் "மெல்ல நகர்ந்தது அந்தப் பாசஞ்சர் ரயில். அந்த வண்டியை விட்டால் பிறகு காலையில்தான். அதனால் கூட்டம் பொங்கிப் புளித்த மாவைப்போல்"[14] என்பதின் மூலம் காட்சி வருணனை, தொடக்கமாக அமைந்தது புலப்படும்.

"மெல்ல இளங்காற்று தவழ்ந்து வீசும் போது அந்தப் பால்நிலவு எதிரேயுள்ள தென்னையின் பசும் ஓலைக் கீற்றுகளில் தவழ்ந்து விவரிக்கமுடியாத எழிலை ஊட்டிக்கொண்டிருக்கும்போது யாருக்குத்தான் தூக்கம் வரும்"[15] என, 'சந்திரமதி பொன்னையா' கதையில் காட்சி வருணனைத் தொடக்கம் காணப்படுகிறது.

'கதையும் கல்யாணமும்' கதையில் "கடலலைகளைத் தொட்டுத் தவழ்ந்த மெல்லிய காற்று இவர்களையும் தொட்டுத் தழுவிச் சென்றவண்ணம் அவர்களுடைய பழைய சிந்தனைகளைக் கிளறிவிட்டுக் கொண்டிருந்தது"[16] என்பதும் காட்சி வருணனைத் தொடக்கத்தைப் புலப்படுத்தும்.

## பாத்திர வருணனை

'செல்லி சிரித்தாள்' எனும் சிறுகதையில் செல்லியின் கணவன் செயல்பாடுகளை "வீட்டுக்குள்ளே நண்பர்களுடன் பகலெல்லாம் சீட்டுக் கச்சேரி. சீட்டாட்டத்தின் போது பேச்சு பலதிசைகளில் செல்லும். பெண்களைப் பற்றியும் இருக்கும். பச்சையாகவே பேச்சு இருக்கும். செல்லியைப் பற்றியும் கிண்டலும் கேலியும் இருக்கும்"[17] என வருணிப்பார் விக்கிரமன். இதில் செல்லியின் கணவன் இராமனின் செயல் மூலம் அவன் இயல்புகளையும், தோற்றத்தையும் காணமுடிகிறது.

'பழைய ராஜகோபாலன்' கதையிலும் "அவர் தன் நடை உடை பாவனையை மாற்றிக் கொள்ளவில்லை. அதே குடுமி, அதே டெஸ்பாட்ச் செக்ஷன். வேலை மாற்றத்தை விரும்பவில்லை"[18] எனும்போது, பழங்காலப் பழக்கவழக்கத்தை மாற்றிக் கொள்ளாத நிலையுடைய மனிதனைக் காட்டுவதோடு இன்று வளர்ந்துள்ள அறிவியல் முன்னேற்றத்திலும் பழைமை விரும்பிகள் தங்களை மாற்றிக்கொள்ளாது திகழ்கிறார்கள் என்ற இயல்பு, பாத்திர வருணனைத் தொடக்கமாகக் காணப்படுகிறது.

"சீற்றமிகுந்த கொடிய நாகம்போல் சீறினாள் மல்லிகா"[19] என்பதில் தலைமைப் பாத்திரமான மல்லிகாவின் குணம் புலப்படுவதோடு பெண்களின் கோபம், கொடுமையான விளைவுகளை ஏற்படுத்தும் என்ற பொருளும் விளங்குகிறது. 'குழலோசை' கதையில் மல்லிகாவின் கோபம் அவளுக்கே ஒரு படிப்பினையாய் அமைந்து ஆடம்பரம் இல்லாத வாழ்க்கைக்குத் துணையாய் நின்றது என்பதை விளக்கும் வகையில் பாத்திர வருணனைத் தொடக்கமாய் அமைகிறது.

வாணக்காரன், பூங்கோதையின் கணவன், வேலு, குலதனம் ஆகிய சிறுகதைகளும் பாத்திர வருணனையைத் தொடக்கமாகக் கொண்டு அமைந்துள்ளன.

### சூழல் தொடக்கம்

கதை நிகழும் இடம், காலம் ஆகியவற்றுக்கேற்ப வெவ்வேறு சூழல்களை அமைத்து, கதைகளைத் தொடங்குவது ஓர் உத்தியாகும். அவ்வகையில் விக்கிரமன் சிறுகதைகளில் அலுவலகம், குடும்பம், இயற்கை ஆகிய சூழல்கள் வருணனைத் தொடக்கமாக அமைந்துள்ளன.

### அலுவலகச் சூழல் தொடக்கம்

'அச்சாபீஸ் ஆறுமுகம்' கதையில் "தடக் ; தடக் என்று அச்சியந்திரம் எழுப்பிய சப்தம் இரவு பத்துமணி வேளையில் தெளிவாகக் கேட்டது. அந்த ஓசைக்கு ஏற்றாற்போல் 'டிக்டிக்' என்று சுவரில் மாட்டப்பட்டுள்ள கடிகாரம் ஒலித்துக் கொண்டிருந்தது"[20] எனக் கதை நிகழும் களமான அச்சகச் சூழல் வருணிக்கப்பட்டுள்ளது.

'சேது' கதையில் "சேதுவின் மேஜை மீதிருந்த ஏதாவது காணாமல் போய்க் கொண்டே இருக்கும். முக்கியமான ஃபைலை எடுத்து ஒளித்துவைத்துவிடுவான், கிட்டு"[21] என்று சேது வேலை பார்க்கும் அலுவலகச் சூழல் இடம்பெற்றுள்ளது.

'அரைவயிறு' கதையில் "அலுவலக ஃபைலிங் குமாஸ்தா பதிக்குச் சம்பளம் குறைவு. தேவை அதிகம். நாள்தோறும் விதவிதமான உடை அணிந்துவரும் எங்கள் எதிரே, நாள்தோறும் தோய்த்து உடுத்தி வரும் பதியிடம் அனுதாபம் உண்டு"[22] எனப் பதி என்னும் மாந்தர் வேலை செய்யும் அலுவலகச் சூழல் குறிப்பிடப்பட்டுள்ளது.

### குடும்பச் சூழல் தொடக்கம்

'விளையாட்டுக் கல்யாணம்' கதையில் "கங்காணி மகாபிகுவுடன் "ஓ! உன் புருஷனா? அவன் ஓடி வரும்போது கப்பலிலிருந்து கடலில் வீழ்ந்து மாண்டான்"[23] என்று கணவன் இறந்த செய்தி குடும்பச் சூழலாக இடம்பெற்றுள்ளது. 'கஸ்தூரியின் கடிதம்' கதையில் "அக்கா! அப்பாவும், அம்மாவும் எனக்குக் கல்யாணம் செய்யப் பெண் பார்த்து வைத்திருக்கிறார்கள். இரண்டாயிரம் ரூபாய் வரதட்சிணையாம்"[24] எனத் திருமணம் நிச்சயிக்கப்பட்ட நிலையில் வரதட்சிணை கொடுப்பதற்குச் சிரமப்படுவதைச் சுட்டிக்காட்டும் குடும்பச் சூழல் தொடக்கமாக அமைந்துள்ளது. குடும்ப வறுமையைக் குறிக்கும் விதமாக 'நிம்மதி' கதையில் "வீட்டிற்குள் நுழையும்போது மணி எட்டு. வெளிச்சமின்றி இருளோ என்றிருந்தது. வழக்கமாக சுவாமி மாடத்துக்கருகே எரியும் குத்துவிளக்கில் கூடத்திரி எரிந்துபோய்விட்டது"[25] எனத் தொடக்கம் உள்ளது. இவ்வாறு விக்கிரமன், குடும்பச் சூழலைத் தொடக்கமாகக் கொள்வதை உத்தியாகக் கொண்டுள்ளார்.

### இயற்கைச் சூழல் தொடக்கம்

'கதையும் கல்யாணமும்' கதையில் "வானத்தே பிறைச் சந்திரன் கம்பீரமாகக் காட்சியளித்தான். 'மினுக்மினுக்'கென்று மின்னும் நட்சத்திரங்களை அண்ணார்ந்து பார்த்த வண்ணமாகப் படுத்திருந்தான்"[26] என இயற்கைச் சூழல் வருணனைத் தொடக்கம் காணப்படுகிறது.

'சந்திரமதி பொன்னையா' கதையில் "நிலா நன்றாகக் காய்ந்து கொண்டிருந்தது. தைல மரங்களின் மீது அந்த வெண்ணிலவு விழுந்தது. உயர உயரமாக வளர்ந்துள்ள ஊசி இலை மரங்களின் மீது விழுந்தது"[27] எனவும், 'புதுவெள்ளம்' கதையில் "வானத்தில் வட்ட முழுமதி வெள்ளியைக் காய்ச்சி

உருக்கி வார்த்து வாரி இறைத்துக் கொண்டிருந்தது"[28] என்றும் இயற்கைச் சூழல் தொடக்கமாக அமைந்துள்ளன.

இயற்கை வருணனை பாத்திரத்தின் மனநிலையை உணர்த்துவதற்கும் எழுத்தாளரின் ஐம்புல உணர்வுத் திறனைக் காட்டுவதற்கும் துணை செய்யும். அவ்வகையில் கதைக்கருவிற்கேற்ப இயற்கையை வருணித்துத் தொடங்கும் போக்கு விக்கிரமன் சிறுகதைகளில் காணப்படுகிறது.

**ஆர்வத் தொடக்கம்**

வாசகரைக் கதையில் ஈடுபடச் செய்யும் வகையில் அமையும் தொடக்கம், ஆர்வத் தொடக்கமாகும். "கதையின் விளைவைச்சுட்டி விளைவுக்கான நிகழ்ச்சியைச் சித்திரிக்கும் வண்ணம் அமையும் கதைகளில் இத்தகைய ஆர்வத் தொடக்கம் அமையும்."[29] இத்தகைய தொடக்கங்கள் விறுவிறுப்பான போக்கையும், உணர்ச்சி வேகத்தையும், பரபரப்புச் சூழலையும், படிப்பாளரின் சிந்தனையையும் வெளிப்படுத்தும் வண்ணம் அமையும்.

'பிஞ்சு நெஞ்சம்' கதையில் "கிரீச்... கிரீச்... தடக். வெகு வேகமாக வந்துகொண்டிருந்த அந்தக் கார் தடார் எனப் 'பிரேக்' போட்டு நின்றது. சாலையிலே சென்றுகொண்டிருந்தவர்களின் இதயம் ஒருகணம் துடிக்க என்ன என்று வீடடிற்குள்ளும், கடைகளுக்குள்ளும் இருந்தவர்கள் ஓடிவந்து பார்க்க அந்த இடம் பரபரப்பு மிகுந்து காட்சியளித்தது"[30] என்பதால் கதையின் ஆர்வத் தொடக்கத்தை அறியமுடிகிறது.

'வேலு' கதையில் "வேலுவிடமிருந்து கடிதம் வந்திருந்தது. வீட்டிலுள்ளவர்கள் கடிதத்தைப் பிரிக்கும் முன்பே நடுங்கினர். கடிதத்தில் என்ன இருக்குமோ என்ற கவலை"[31] என ஆர்வத்தொடக்கம் அமைந்துள்ளது.

இவ்வாறே 'தங்கவளையல்,' 'தர்மமூர்த்தியின் தயவு' முதலான விக்கிரமன் கதைகளும் ஆர்வத்தொடக்கமாக அமைந்து படிப்போரை ஈர்க்கும் வண்ணம் அமைந்துள்ளன.

**நேரடித் தொடக்கம்**

விக்கிரமன் மையத்தளத்தையும், சிக்கலையும், பாத்திரங்களின் போக்கையும், கருவையும், கதைப்பொருளையும் சுட்டும் வகையில் நேரடித் தொடக்கங்களைச் சிறுகதைகளில் அமைத்துள்ளார். கதையாசிரியர் வாசகருக்கு முன்பே அறிமுகமானவர் போல் பாத்திரங்களின் செயல்களையும், கதையின் கருவையும், வெளிப்படுத்துவதை இத்தகைய தொடக்கங்களில் காணமுடிகிறது. 'செவ்வந்திப்பூ சிங்காரி' என்னும் கதையில் "பாலூர் வட்டத்தில் கிடைக்கும் வேலை, வயிறு வளர்க்கும் அளவுக்கு ஊதியம் அளிக்கவில்லை. சிங்காரியும் துறுதுறு என வளர்ந்துவிட்டாள். பதினேழு வயதுப் பருவம் அவளைப் பெயருக்கேற்றபடி ஆக்கிவிட்டது. இரண்டு முழு ஜீவன்கள் வாழவேண்டியதோடு, மகளுக்குக் கல்யாணம் செய்விக்க வேண்டிய மகத்தான பொறுப்பும் வேறு"[32] எனக் கதைக்கருவை நேரடியாகச் சுட்டிக் காட்டுவதாக அமைந்துள்ளது.

அரைவயிறு என்னும் கதையில் "பதி, உங்கள் அண்ணா என்னையும், குழந்தைகளையும் நிர்க்கதியாக விட்டுவிட்டுச் சென்ற பிறகு நீங்கள் மட்டும் காப்பாற்ற முன்வராமலிருந்தால் நானும் என் குழந்தைகளும் செத்த இடம் புல் முளைத்திருக்கும்"[33] என்று தம்பியின் நல்ல எண்ணத்தையும், அண்ணி மற்றும் குழந்தைகளுக்காகத் தம்பி படும் பாட்டையும் அழகாக எடுத்துக் காட்டி நேரடித் தொடக்கமாக இக் கதையை அமைத்துள்ளார் விக்கிரமன். இவ்வாறே விஷக்கத்தி, வந்த சுவடு, கந்தப்பன் காளை, அரையணா ஆகிய சிறுகதைகள் நேரடித் தொடக்கமாக உள்ளன.

## கதை முடிவு

சிறுகதை எழுத்தாளனின் படைப்புத்திறனைப் புலப்படுத்தும் கலைநுட்பத்தில் முடிவும் ஒன்றாகும். "கதையின் சிக்கல்கள் அவிழ்க்கப்படுகின்ற நிலையில் இருப்பதும், கதையின் சிக்கல்கள் யாவும் விள்ளப்பட்டு விளக்கம் பெற வேண்டுவதுமே முடிவாகும். இங்கேதான் கதைக்கும் படிப்பாளனுக்கும் உள்ள தொடர்பு யாவும் கலையழகுடன் அறுபடுகின்றன"[34] என்பார் ப.கோதண்டராமன். "துன்பியல் முடிவினாலோ, இன்பியல் முடிவினாலோ கலையழகு பெற்றுவிடாது, கலை அழகிற்கு ஏனைய பல காரணங்கள் உண்டு"[35] என்பார் பெயின்.

கதையின் தொடக்கம் எழுத்தாளனின் கலைநுட்பத்தை வெளிப்படுத்துவதுபோல் முடிவும் படிப்பாளரின் சிந்தனையைக் கிளர்ச்சியுறச் செய்வதாகும். கதையின் தொடக்கம் படைப்பில் ஆர்வத்தைத் தூண்டும். முடிவோ படிப்பாளரைச் சிந்திக்கத் தூண்டும்.

"முடிவானது உருவக முடிவாகவோ, பிறிது மொழிதலாகவோ, வேற்றுப் பொருள் வைப்பாகவோ, கதையின் உணர்வை வெளியிடும் கருத்தாகவோ நோக்கத்தைச் சுட்டுவதாகவோ இருத்தல் சிறப்பு. இவற்றையெல்லாம்விடச் சிறுகதைக்கு ஏற்ற முடிவு கதைக்கருவின் நிகழ்ச்சிகளின் தீர்வே கதையின் முடிவாக இருத்தல் ஆகும் என்பர். அவ்வாறு உருவாகும் முடிவானது படைப்பாளர் தம் சிந்தனையில் தொடர்ச்சி அலைகளை எழுப்பிக் கொண்டே இருக்கக் கூடியது"[36] என்கிறார் புதுமைப்பித்தன்.

## முடிவின் தன்மையும் வகையும்

விக்கிரமனின் சிறுகதைகளுள் அவலமுடிவினைக் கொண்டவை சில. இன்பமுடிவைக் கொண்டவை சில. படிப்பாளரின் சிந்தனையைத்

தூண்டுவன சில. குறிப்பால் பொருள் உணர்த்துவன சில. திருப்பு நிலை உடையன சில, இயல்பான முடிவினைக் கொண்டன சில, கருத்துரை நல்குவனசில. மன உணர்வைப் புலப்படுத்துவன சில.

பொதுவாக விக்கிரமனின் சிறுகதைகளில் முடிவுகள் சமுதாய அவலத்தைச் சுட்டுவனவாகவும், வாசகரை உட்படுத்துவனவாகவும் அமைந்தனவாகும். விக்கிரமன் சிறுகதைகளில் அமைத்துள்ள முடிவுகளை,

1. தொடக்க இயைபு முடிவு
2. தொடக்க முரண் முடிவு
3. சிக்கல் தீர்வு முடிவு
4. சூழ்ச்சி முடிவு
5. சிந்தனையைத் தூண்டும் முடிவு

என்ற வகையில் பகுத்துக் காண இயலும்.

**தொடக்க இயைபு முடிவு**

கதைத் தொடக்கத்தினை நினைவுகூறும் வகையில் தொடர்களையோ, நிகழ்ச்சிகளையோ, முடிவில் இயைபுற அமைப்பது தொடக்க இயைபு முடிவு எனப்படும். விக்கிரமன் இத்தகைய இயைபுத் தன்மை அமையுமாறு 'கந்தப்பன் காளை' சிறுகதையில் ஜல், ஜல் எனத் தொடங்கும் கதையின் முதல் வரியே மிகப்பெரிய ஒரு கிராமக்காட்சியாகக் காளைமாட்டின் கம்பீரத்தையும், கந்தப்பனின் தொழிலையும் விவரித்து, இறுதியில்,

"மாலையோ மயங்குதடா?
மருக்கொழுந்தும் வாடிடுமே
சாலையோ தொலைவிலையே வீரா
சடுதியாய் எடு ஓட்டம்"[37]

என்ற தொடக்க இயைபு முடிவை அமைத்துள்ளார். அஃறிணை உயிராக

இருந்தாலும் அதன் மீது பாசத்தோடு பழகி அதன் உயிருக்கு ஆபத்து வரும்போது தன் உயிரை மாய்த்துக்கொண்டாவது காளையின் உயிரைக் காக்க நினைக்கும் மனிதத் தன்மையை அழகாக எடுத்துக் காட்டியுள்ளார்.

'குழலோசை' கதையிலும் "கைவிடமாட்டாரென் றூதுசங்கே!

கனக சபையாரென் றூதுசங்கே"[38]

என்ற குமாரவேலுவின் குழலூதும் திறமையால் மல்லிகா நடனமாடி மகிழ்வதும் இறுதியில் குமரவேலு, மல்லிகாவின் ஆடம்பரப் பேச்சால் விலகிச் சென்றாலும் மனம் திருந்தி மீண்டும் அவ்வரிகளையே குழலூதச் செய்து மல்லிகா நடனம் ஆடுவதும் தொடக்க இயைபு முடிவுக்கு எடுத்துக்காட்டாகும். இத் தொடக்க இயைபு முடிவால் பாத்திரத்தின் பண்புகள் முதலிலும் முடிவிலும் ஒரு தன்மையுடையதாக அமைதலை உணரமுடிகிறது.

## தொடக்க முரண் முடிவு

கதாபாத்திரம் தொடக்கநிலையில் கொண்டிருந்த மனநிலைக்கும், செயல் போக்கிற்கும் முரணாகும் வகையில் முடிவினை அமைப்பதே தொடக்க முரண் முடிவாகும். தன் மனநிலை, கொண்ட கருத்து, செயல் இவற்றில் தானே தவறு என்று உணருகின்ற அளவுக்கு மாற்றத்தைக் கொண்டதும் ஒரு வகையில் புரட்சிக்கு விளக்கம் காண்பது போன்ற முடிவினைக் கொண்டு விளங்குவதும் தொடக்க முரணாகும். விக்கிரமனின் 'வளர்த்தமான்,' 'நல்லதோர் வீணை' முதலான கதைகள் தொடக்க முரண் முடிவாக விளங்குகின்றன.

அன்பானந்தர், தன் ஆதரவற்றவர்ககான இல்லத்திற்கு வந்து சேர்ந்த கண் இழந்த கயல்விழியைப் பார்த்து மனதில் சபலம் கொண்டு அவளைப்

பல வழிகளில் அடைய எண்ணித் தான் வளர்த்த அருமை மானினாலேயே குத்துப்பட்டு இறக்கும் தருவாயில் தாம் செய்தது தவறான ஒரு செயல் என்பதை உணர்ந்து "டாக்டர்! என் விழிகளை அவளுக்குப் பொருத்திவிடுங்கள்"[39] என்று கூறுவதன் மூலம் தொடக்கமுரண் முடிவு புலப்படும். 'வளர்த்தமான்' கதையில் இவ்வாறு இம்முடிவு எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

'நல்லதோர் வீணை' கதையிலும் கேசவராம் தன்னிடம் வீணை கற்றுக்கொள்ள வந்த வாணியிடம் தவறாக நடக்க எண்ணுகிறார். வாணியோ தன் தந்தைபோல் என்னைப் பார்த்துக்கொள்கிறீர்கள் என்று கூறத் தான் நினைத்த செயலைத் தவறு எனத் தன் மனதை மாற்றிக் கொண்டு அவளை அணைக்க நினைத்த கையைத் தீயால் சுட்டுக் கொள்கிறார் என்பதிலிருந்து தொடக்க முரண் முடிவு தெளிவாகிறது. "தேவி! இருந்தாலும் இந்த விரல்கள் பாவம் செய்துவிட்டன, புனிதமிழந்த செயல் செய்துவிட்டேன். இதற்குத் தண்டனை வேண்டும். என் தண்டனையை ஏற்றுக்கொள் சிவசக்தி"[40] என்பதிலிருந்து மனிதன் வாழ்வில் வழிதவறித் தவறான பாதையில் செல்வதும், பின் திருந்தி நல்வழிப்படுதலும் இயல்பு என்று காட்டுவதாக இச்சிறுகதை அமைந்துள்ளது.

### சிக்கல் தீர்வு முடிவு

கதைப் படைப்பில் பல முறைகள் உண்டு. கதையின் சிக்கலையும் காரணத்தையும் சுட்டிச் சிறுகதை அமைப்பதுண்டு. முடிவினைச் சுட்டிப் பின்னோக்கு முறையில் காரணம் காட்டுவதும் உண்டு. சிக்கலைக்காட்டி, அதற்கான அடித்தளத்தைப் புலப்படுத்தித் தீர்வுகாணாமல் இடையே நிறுத்திவிடுவதுமுண்டு. கதையின் சிக்கலைச் சுட்டி, சிக்கலுக்கான நிகழ்ச்சித்

தளத்தைக் காட்டி, முடிவில் தீர்வுகாணும் வகையிலும் சிறுகதைகளைப் படைப்பதுண்டு.

இவற்றுள் விக்கிரமன் சிக்கலுக்கான தீர்வுகளைச் சுட்டும் கதை முடிவுகளையே தம் கதைகளில் பெரும்பாலும் அமைத்துள்ளார்.

'கல்யாணத்திருட்டு' கதையில் ஜோதிமுத்து பாரிஜாதத்தைக் காதலித்துவந்தான். பல நேரங்களில் திருட்டுத்தொழில் செய்து பிழைத்துவந்தான். ஒருநாள் ஜோதிமுத்துவின் மாமா என்று தெரியாமலேயே அவர் வைத்திருந்த தாலியைத் திருடிவிடுகிறான். அதைக் கொண்டு ஜோதிமுத்துவிற்குத் தாலிகட்டிவிடலாம் என அவள் வீட்டிற்குச் செல்லும்போது பெரிய சிக்கலில் மாட்டிக் கொள்கிறான்.

அங்கு நடந்த நிகழ்ச்சியைப் பார்த்துத் தான் திருடியது பாரிசாதத்தின் மாமாவுடையது என்பதையறிந்து "மாமா... என்று அலறி அவர் காலில் விழுந்தான். தன் மடியில் வைத்திருந்த அந்தப் பர்ஸை அவர் காலடியில் எடுத்து வைத்தான்."[41] மாமாவோ விபரம் தெரிந்து இருவருக்கும் திருமணம் முடித்து வைக்கிறார் என்பதன் மூலம் சிக்கல் தீர்வு முடிவு புலப்படும். இதுபோன்று நந்து, குலதனம், தர்மமூர்த்தியின் தயவு, ஜாங்கிரி, செவ்வந்திப்பூ சிங்காரி போன்ற கதைகள் சிக்கல் தீர்வு முடிவுகளைக் கொண்டு விளங்குகின்றன.

விக்கிரமன் தம் கதைகளில் நல்ல சமூகமான முடிவுகளையே தந்துள்ளார். தீயவர்கள் தவறை உணர்ந்து திருந்துபவர்களாகவும் தீய குணமுடையவர்கள் நற்குணம் கொண்டவர்களாக மாறுவதுமாக விக்கிரமன் சிறுகதை முடிவுகள் அமைந்துள்ளன.

## சூழ்ச்சி முடிவு

வியப்பான முடிவினைச் 'சூழ்ச்சி முடிவு' என்பர். மாறுபடு முடிவு எனவும் வழங்குவதுண்டு. எதிர்பாராத நிகழ்ச்சிகளைக் கொண்டும், கதையின் வளர்ச்சி நிலைக்கு ஏற்ற வண்ணம் கதையின் உச்சநிலையில் சூழ்ச்சிப் போக்குகளைக் கொண்டும் அமையுமானால் அது சூழ்ச்சி முடிவுச் சிறுகதை எனப்படும்.

'சேது' கதையில் சேது வேலைபார்க்கும் அலுவலகத்தில் அவன்மீது பொறாமை கொண்ட கிட்டு முக்கியமான கோப்புகளைச் சேதுவிற்குத் தெரியாமல் மறைத்துவிட முதலாளி சேதுவைக் கண்டபடி ஏசுகிறார். இறுதியில் அலுவலகத்தில் சோதனை நடைபெறுகிறது. அந்தக் கோப்பு மறைக்கப்பட்டிருந்ததால் அலுவலகத்தின் ஊழல் மறைக்கப்பட்டு சேதுவிற்கு நல்ல பேர் கிட்டியது என்பதால் சூழ்ச்சி முடிவு புலனாகிறது. அலுவலகத்தில் உள்ள பிரச்சினைகள் மற்றும் நடைமுறைகளை எடுத்துக்காட்டியதோடு வினை விதைத்தவன் வினையறுப்பான் என்பதைச் சமுதாயத்திற்குக் காட்டியுள்ளார் விக்கிரமன்.

இவ்வாறே நரசிங்கராவ், சந்திரமதி பொன்னையா ஆகிய கதைகளும் சூழ்ச்சி முடிவு கொண்ட கதைகளாகப் படைக்கப்பட்டுள்ளன.

## சிந்தனையைத் தூண்டும் முடிவு

படைப்பாளன் தன் கதையுள் சிக்கலை எடுத்துக்காட்டி, முடிவினைப் படிப்பாளனின் சிந்தனைக்கு விடுவது சிந்தனையைத் தூண்டும் முடிவு எனப்படும். விக்கிரமனின் 'அச்சாபீஸ் ஆறுமுகம்' கதையில் எழுத்துத்துறை அவலங்களைச் சுட்டும் நகைச்சுவைக் கருத்தும், அச்சுத்தொழில் பற்றிய தெளிவான விவரணையும் காட்டப்பட்டுள்ளன. நாலணாவுக்கு மேலாளர்

வாங்கச் சொல்லும் பொருள் பட்டியல் அப்போதைய விலைவாசியைக் காட்டுகிறது.

"அதோ! அச்சாபீஸ் ஆறுமுகம் 'ஜோதிடச் செய்தி' பத்திரிகையின் பாரத்தை முடுக்கிவிட்டு குனிந்து 'கரெக்ஷன்' பார்த்துக் கொண்டிருக்கிறார். ஊர் உலகத்துக்கெல்லாம் வருங்காலத்தைக் கூறும் அந்தப் பத்திரிகையில் தன் வருங்காலத்தைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் வேலை செய்கிறார்"[42] என்பதில் சிந்தனையைத் தூண்டும் முடிவு புலப்படுகிறது.

ஏழை வர்க்கத்து மக்களிடம் உழைப்பைச் சுரண்டி அதற்கேற்ற வருமானம் கொடுக்காமல் ஏமாற்றும் அவலங்களையும் அலுவலக நடைமுறைகளை மக்கள் தெரிந்து கொள்ளும் நோக்கத்திலும் விக்கிரமன் எழுதியுள்ளார்.

இவ்வாறு படிப்போர்க்குப் பாத்திரத்தின் செயல் போக்கையும், மனஉணர்வையும் அலுவலகச் சூழல்களையும் சமுதாயத்தில் ஏழைகள் சந்திக்கும் அவலங்களையும் சுட்டும் போக்கில் விக்கிரமன் சிறுகதை முடிவுகள் அமைந்துள்ளன.

**கதைத் தலைப்புகள்**

சிறுகதைத் தலைப்பு ஆசிரியரின் கலைநுட்ப வெளிப்பாட்டின் ஒரு கூறாகும். அது ஒரு படைப்பினை எழுத்தாளன் எந்தப் பார்வையிலிருந்து வெளிப்படுத்தக் கருதுகின்றான் என்பதைச் சுட்டக் கூடியது. கதையின் தலைமைப் பண்பைச் சுட்டும் வகையில் தலைப்பு அமையுமானால் அது படைப்பின் தரத்தை உயர்த்துவதோடு, படிப்பாளனின் சிந்தனையையும் தொட்டு நிற்கும். அவ்வாறு இடம்பெறும் தலைப்பு கதையின் தலைமைப் பண்பை ஒட்டி, பாத்திரத்தின் பெயரையோ கதை நிகழ்ச்சியினையோ, கதை

நிகழிடத்தையோ சுட்டுவதாக அமையும். உருவகமாகவும், குறியீடாகவும், முரணாகவும் அமையும். படிப்போரின் எண்ணத்தைப் பிணைக்கும் வகையிலும் கதையின் மையத் தன்மையையொட்டியும் தலைப்பு இருத்தல் சிறப்பிற்குரியதாகும்.

"சிறுகதைத் தலைப்பு ஒரு பெரிய கோட்டையின் சிறிய வாயில் போன்றும் அழகிய மங்கையின் இனிய முகம் போன்றும், விடியற்காலை இருளைப் பழிக்கும் கதிர் எழுச்சி போன்றும் அமைந்து கதையின் முழு அமைப்பின் நிழல்வடிவில் காட்டக்கூடிய ஆற்றல் பெற்றுத் திகழ வேண்டும்"[43] என்றும் "இலக்கியத்தின் நுதல் என்று சிறுகதையைக் கொண்டால் அதன் தலைப்பை 'அப்பிறை நுதலின் தரித்த நறுந்திலகம் எனக் கொள்ளலாம்"[44] என்றும் கூறுவர் சாலை இளந்திரையன்.

விக்கிரமனின் சிறுகதைத் தலைப்புகள் எளிய வார்த்தைகளால் ஆனவை ; செறிவு நிறைந்தவை ; உட்பொருள் கொண்டவை ; ஆர்வம் ஊட்டக்கூடியவை ; புதிய பார்வை உடையவை. எள்ளல் சுவையும், அங்கதச் சுவையும், நகைச்சுவையும், உருவகத் தன்மையும், ஒப்பீட்டுப் பார்வையும் நேரடிப் புலப்பாடும் கொண்டவை.

விக்கிரமன் சிறுகதைத் தலைப்புகளை அவை அமைந்திருக்கும் தன்மை அடிப்படையில் பின்வருமாறு பாகுபடுத்தி விளக்க இயலும். அவையாவன,

1. பாத்திரங்களின் பெயர்களைச் சுட்டும் தலைப்புகள்
2. வாக்கியத் தொடர்த் தலைப்புகள்
3. பொருள் உணர்த்தும் தலைப்புகள்
4. உத்தியைச் சுட்டும் தலைப்புகள்
5. குறியீட்டுத் தலைப்புகள்.

## பாத்திரப் பெயர்களைச் சுட்டும் தலைப்புகள்

"சிறுகதை, புதினங்களில் வரும் பாத்திரப் பெயர்கள், அவற்றின் தலைப்புகளாக அமைவது உலக இலக்கியங்கள் அனைத்திலுமே காணப்படும் தன்மையாகும்."[45] அவ்வகையில் விக்கிரமன் கருப்பொருளை விளக்க, சிறந்த பாத்திரங்களின் பெயர்களைத் தம் சிறுகதைகளுக்குத் தலைப்பாக அமைத்துள்ளார். அவ்வகையில் அப்பெயர்களை,

1. ஆண் பாத்திரப் பெயர்கள்
2. பெண் பாத்திரப் பெயர்கள்
3. அடைமொழி தாங்கிய பெயர்கள்

என்ற வகையில் பகுத்தறிய இயலும்.

## ஆண் பாத்திரப் பெயர்கள்

ஆண் தலைமைப் பாத்திரங்களின் பெயர்களையே தலைப்பாகக் கொண்டு விக்கிரமன் சிறுகதைகள் படைத்துள்ளார். அவ்வகையில் 'வேலு,' 'சேது', 'நந்து,' 'நரசிங்கராவ்' ஆகிய கதைத் தலைப்புகள் குறிப்பிடத்தக்கனவாகும்.

'வேலு' கதையில் "வேலு பள்ளிப்படிப்பைத் தவிர மற்ற கல்வியில் அதிக ஈடுபாடு கொண்டான். வீட்டில் திடீரெனப் பொருட்கள் மறைந்துவிடும். கேட்ட பொழுதெல்லாம் பணம் வேண்டும் என்று அடம்பிடிப்பான். ஒருவாரம் வீட்டின் பக்கமே வரமாட்டான்"[46] என்று வேலுவின் செயல்பாடுகளையே கதை முழுவதும் சொல்வதால் இப்பெயரைக் கதைக்குச் சூட்டியுள்ளார் விக்கிரமன்.

## பெண் பாத்திரப் பெயர்கள்

பெண்களின் பண்பு, செயல் அடிப்படையில் பெண்களின் பெயர்களைச் சிறுகதைக்குத் தலைப்பாக இடுவது விக்கிரமன் இயல்பாக

உள்ளது. அவ்வகையில் ஊர்வசி, செல்லி சிரித்தாள், தெய்வத்தாய், செவ்வந்திப்பூ சிங்காரி, பூங்கோதையின் கணவன், மாற்றாந்தாய் ஆகிய கதைத் தலைப்புகள் அமைந்துள்ளன.

ஊர்வசி கதையில் வறுமையின் காரணமாகத் தன் உடம்பைப் பிறருக்கு விற்கிறாள் ஊர்வசி. இது "இப்படி ரயில் நிலையங்களில் ஆடவர் மயங்கும் வகையில் அலைவதில் தூண்டிலில் சரியான மீன் சிக்கும். அது அவளுக்குப் பல சமயங்களில் ஒருமாத வருமானமாகவும் ஆகிடும்"[47] என்பதிலிருந்து புலப்படும். தன் வயிற்றுப் பிழைப்புக்காகவும், குடும்பத்தைக் காக்கவேண்டும் என்ற எண்ணத்திலும் பெண்கள் சமூகத்தில் நடந்துகொள்ளும் நிலையை 'ஊர்வசி' உணர்த்துவதால் அவள் பெயரையே கதைத் தலைப்பாக வைத்துள்ளமை விளங்கும்.

**அடைமொழி தாங்கிய பெயர்கள்**

விக்கிரமனின் சிறுகதைகளில் சந்திரமதி பொன்னையா, பழைய ராஜகோபாலன், அச்சாபீஸ் ஆறுமுகம் ஆகிய கதைத் தலைப்புகள் அடைமொழி தாங்கி சிறுகதைத் தலைப்புகளாக அமைந்துள்ளன.

சந்திரமதி பொன்னையா சிறுகதையில் "பொன்னையா அன்று சந்திரமதி வேஷம் பூண்டிருந்தார். வார்த்தைகள் உருக்கமாக இருந்தன. அர்த்த புஷ்டியோடு இருந்தன. சோகம் கலந்து காணப்பட்டது. நம்மை விம்மி விம்மி அழச்செய்தன"[48] என்பதிலிருந்து பொன்னையா சந்திரமதி வேடம் அணிந்து அதற்கேற்ற பாவனைகளுடன் நடித்ததால் அவர் அப்பெயர் பெற்றிருக்கிறார் என்பதும் அதையே ஆசிரியர் கதைத் தலைப்பாக அமைத்துள்ளார் என்பதும் புலப்படும்.

## வாக்கியத் தொடர்த் தலைப்புகள்

வாக்கிய வடிவில் தலைப்புகள் அமைப்பது இவ்வகையில் அடங்கும். 'நண்பா மறந்துவிட்டாயா?' 'கதையும் கல்யாணமும்,' 'கதை சொன்ன கதை,' சத்தியமான சத்தியம்,' 'கண்ணன் மீண்டும் வருகிறான்' என்ற கதைத் தலைப்புகள் வாக்கியத் தொடர்த் தலைப்புகளாக அமைந்துள்ளன.

'நண்பா மறந்துவிட்டாயா' கதையில் "நட்பு என்பது உயர் உள்ளத்துப் பண்பிற்கு அடையாளம். அந்த நட்பின் நிலை மாறும்போது அதனால் பாதிக்கப்பட்ட சங்கரனுக்கு, 'இப்படியும் ஒரு நண்பனா?' என்ற வேதனை ஏற்படுகிறது. "நட்பை மறத்தல்... என்ன உலகம்?..., நண்பா மறந்துவிட்டாயா?"[49] என்ற உணர்வு ஏற்படுவதைக் காட்டுகிறது. இதில் வரும் தொடரையே சிறுகதைத் தலைப்பாக விக்கிரமன் கொடுத்துள்ளார்.

குடும்பங்களின் தாம்பத்ய வாழ்வில் தாய்மை நிலையடைந்த பெண்மையின் உள்ளத் தூய்மையை, உணர்வின் இயல்பை எடுத்தியம்புகின்ற கதையாக 'கண்ணன் மீண்டும் வருகிறான்' விளங்குகிறது. முதல் குழந்தை இறந்த துக்கத்திலிருந்து மீளாத மகாதேவன், சீதா தம்பதியருக்கு மீண்டும் ஒரு கண்ணன் உதயமாகிவிட்டான் என்ற உறுதிப்பாடு தெரிந்தது. "மகாதேவன் சீதாவை அப்படியே தாவி அணைத்துக் கொண்டான். அவன் பரபரப்புடன் எங்கோ ஓடினான். சிறிது நேரம் கழித்து அவன் வரும்போது அவன் கையில் 'அகர்வால் அல்வா' பெட்டி இருந்தது. குழந்தைக் கண்ணன் மீண்டும் அந்த வீட்டிற்கு வரப்போகிறான்"[50] எனத் தலைப்புப் பொருத்தம் சிறுகதையில் அமைந்துள்ளது.

## பொருளை உணர்த்தும் தலைப்பு

கதையின் தலைப்பு, கதையின் சிக்கலை ஒருவாறு உணர்த்துவதாக அமைந்துவிடும். அவ்வகையில் விக்கிரமன் 'புவனாவுக்காக' என்னும்

தலைப்பில் தன் அக்காள் மகளைத் திருமணம் செய்வதற்காக வெளிநாடு சென்று பெரும் பொருள் ஈட்டி எல்லாம் என் 'புவனாவுக்காக' என்று கூறுவதை விளக்கும் வகையில் கதைத்தலைப்பை அமைத்துள்ளார்.

'நேர்மைக்குப் பரிசு' கதையில் ரிக்ஷாவண்டி ஓட்டும் சோமு மனைவியின் பேறுகாலச் செலவுக்குப் பணம் தேடி அலைகிறான். அநியாய வழியில் கிடைக்கவிருந்த பணத்தை அவனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அப்பாவித் தனமாக நேர்மையான வழியில் செயல்படுகிறான். ஆனால் அவனை அறியாமலேயே புகழும், பணமும் நேர்மை காரணமாக அவனுக்கு வந்தடைகிறது என்பதை விளக்கும் விதமாக இத்தலைப்பு அமைந்துள்ளது.

வேலைக்கார மூர்த்தி பூனையையும் அதன் குட்டிகளையும் ஆபத்துக்காலத்தில் அரவணைத்து வளர்த்துவருகிறான். அம் மனிதநேயத்தைப் பாராட்டி அவனுக்கு முதலாளி கருணாகரன் மனம் இரங்கிப் பொன்னாடை போர்த்திப் பாராட்டுவதற்கு விக்கிரமன் 'மனிதநேயம்' என்ற தலைப்பிட்டுள்ளமை பொருத்தமானதாகும்.

குருவி சேர்ப்பதுபோல சேர்த்த பணத்தை, சோதனையான நேரத்தில் மகனிடமே கொடுக்கும் தாயைப் பார்த்து மருமகளே தெய்வத்தாயாக ஏற்றுக்கொள்ளும் பொருளை உள்ளீடாக வைத்துத் 'தெய்வத் தாய்' என்பதைக் கதைத் தலைப்பாக இட்டுள்ளார் விக்கிரமன்.

இவ்வாறு தலைப்பைப் பார்த்த நிலையிலேயே கதைப்பொருளை உணர்ந்துகொள்ளும் வகையில் பொருளை உணர்த்தும் தலைப்புகளை விக்கிரமன் தம் சிறுகதைகளில் அமைத்துள்ளார்.

## உத்தியைச் சுட்டும் தலைப்புகள்

கதையின் இயக்கத்திற்கு அடித்தளமாக நிற்கும் வெளிப்பாட்டு உத்திகளுள் ஒன்றான கடித உத்தியினைத் தம் கதைகளில் கையாண்டுள்ள விக்கிரமன் அக்கடித உத்தியையே கதையின் தலைப்பாகவும் ஆக்கியுள்ளார். 'கஸ்தூரியின் கடிதம்' என்ற கதையில் "இருக்கட்டும் இன்னும் ஒரு வாரத்தில் நிலைமை சரியாகிவிடும் என்று நம்புகிறோம். உள்ளூர் ஆளில்லாமல் அறுவடை எப்படி முடியும் பார்க்கலாம். வேறு ஊர் ஆள் காலை வைக்கமுடியுமா? அடிக்கடி கடிதம் எழுதாதற்கு இந்த வேலைகளே காரணம். என்னை மன்னித்துவிடுங்கள். அன்புள்ள, கஸ்தூரி"[51] எனக் கடித உத்தி பயன்படுத்தப்பட்டுள்ளது.

உள்ளூர் நிகழ்வுகளை வெளியூர்களில் இருப்பவர்களுக்குத் தெரிவிப்பதற்காக இவ்வுத்தி கையாளப்படுவதோடு காலதாமதமாகக் கிடைத்த கடிதத்தால் ஓர் உயிர்போன செய்தி தெரியாமல் போய்விடுகிற கருத்தைக் 'கஸ்தூரியின் கடிதம்' கதையில் விக்கிரமன் எடுத்துக் காட்டியுள்ளார்.

## குறியீட்டுத் தலைப்பு

தற்கால இலக்கியங்களில் கருத்தினை வெளிப்படுத்தும் கருவிகளுள் குறியீடு சிறப்பிடம் பெறுகின்றது. குறியீடானது பாத்திரமாகவோ, கருப்பொருளாகவோ அமைதல் உண்டு.

"கலைஞன் தான் சொல்ல நினைத்த ஒரு பொருளின் உண்மைத் தன்மையை நேரடியாகச் சொல்லாமல் அதனையொத்த இன்னொரு பொருளின் துணைகொண்டு விளக்குதலே குறியீட்டு உத்தி எனப்படுகிறது."[52] அவ்வகையில் விக்கிரமன் குறியீட்டு உத்தியைப் பயன்படுத்திச் சிறுகதைத்

தலைப்புகளை அமைத்துள்ளார். இவரது 'அரையணா,' 'பொல்லாத மனசு,' 'கல் நெஞ்சம்,' 'ஒற்றைக் குருவி' ஆகிய கதைகள் இவ்வகையில் அடங்கும்.

'அரையணா' என்னும் தலைப்பில் பிச்சை எடுக்கும் தொழிலில் போட்டி, பொறாமைகளை மறைமுகமாக விளக்கியுள்ளார். அரையணாவுக்கு ஏற்பட்ட போட்டிக்காகச் செல்லாயி விட்டுக்கொடுத்து ஓரணாவை அவளிடம் கொடுக்கும் மனப்பாங்கை இங்கு விக்கிரமன் காட்டுகிறார்.

'தொழிலில் போட்டி, பொறாமை என்பது மேல்மட்டத்தில் மட்டுமன்று, தெருவில் பிச்சை எடுப்பவர்களிடமும் உள்ளது என்பதை எடுத்துரைப்பதாக இக்கதை விளங்குவதோடு இந்தியாவில் அளவை முறைகள் படிப்படியாக மாறுவதற்கு முன் 'அரையணா' என்பது ஏறக்குறைய ஆறு பைசாவிற்குச் சமமாக இருந்த சமுதாய வரலாற்றுப் பதிவும் இச்சிறுகதையில் இடம்பெற்றுள்ளது. அரையணாக் காசிற்காக ஓரணாவைப் போட்டு "பயப்படாதே! இதோ எடுத்துக்கொள்! உனக்கு வேண்டியது அரையணாத்தானே? இந்தா ஓராணாவாக எடுத்துக்கொள்"[53] என்றாள் செல்லாயி என்பதன் மூலம் இத்தலைப்பு குறியீட்டுத்தன்மை கொண்டதாக விளங்குவது புலனாகும்.

காதலால் சாதாரண மனசு பொல்லாத மனசாகிப் பல நல்ல வசதிகளைத் துறப்பதில் அரசனும், ஆண்டியும் ஒன்றே என்ற உயர்ந்த தத்துவத்தைப் 'பொல்லாத மனசு' கதையில் வெளிக்காட்டியுள்ளார்.

'காதல்' என்பது இரு மனமும் ஒன்றுபட்டு வருவது. அக்காதலில் வெற்றி காண்பதற்குத் தன் வேலை, வருமானம், வசதிகள் முதலானவற்றையும் துறக்க நேர்ந்தாலும் பரவாயில்லை என்ற நோக்கோடு காதலனும், காதலியும்

திகழ்வதை விளக்கும் விதமாக அவர்கள் மனசைப் 'பொல்லாத மனசு' எனக் குறியீட்டுத் தலைப்பாக அமைத்துள்ளார்.

'கல்நெஞ்சம்' கதையில் காதலைக் கண்ட இடத்திலெல்லாம் குறுக்கிட்டு வெறுத்த பாஸ்கரராவ் தன் மகள் விரும்பும் முத்தையனை எப்படியாவது தீர்த்துக்கட்ட வேண்டும் என்று நினைத்து மகளிடம் அவன் இறந்துவிட்டதாகக் கூறுகிறார். பாஸ்கரராவின் நெஞ்சம் கல்போன்று கடினமானது என்பதை உணர்த்தும் வகையில் விக்கிரமன் 'கல்நெஞ்சம்' எனத் தலைப்பை அமைத்துள்ளார்.

பெற்றோருக்கு ஒரு மகளாய்ப் பிறந்து இளம் வயதிலேயே வாழ்க்கையில் வக்கற்றவனுக்கு வாழ்க்கைப்பட்டு அவனால் வஞ்சிக்கப்பட்டு, தனிமையான வாழ்க்கை நடத்தும் பூரணியின் வாழ்க்கையை விக்கிரமன் 'ஒற்றைக் குருவி' என்ற தலைப்பில் குறிப்பிடுகிறார்.

குருவிகள் கூட்டமாகச் சேர்ந்து வாழ்தலே இயல்பு. இவ்வியல்புக்கு மாறாக ஒரு குருவி மட்டும் தனித்து இருந்தால் அது எத்தகைய துன்பத்தை அனுபவிக்குமோ அது போல சேர்ந்து வாழ வேண்டிய பெண் தனித்து வாழும் இயல்பை விளக்கும் வகையில் இத்தலைப்பு குறியீட்டுத் தன்மை கொண்டதாக விளங்குகிறது.

## மொழிநடை

"ஒருவன் மொழியைக் கொண்டு தன் உள்ளத்தில் உண்டான உணர்ச்சிகளைப் பிறர் உள்ளத்திலும் உண்டாகுமாறு செய்விக்கும் நூல் இலக்கியமாகும். அவன் தன் அனுபவத்தைக் கற்பனை மூலம் எண்ணிப் பார்த்து, செய்யுள் நடையிலோ, உரைநடையிலோ பிறர் உள்ளத்திலும் எழுமாறு அழகுபடச் செய்வதே இலக்கியமாகும்."[54]

"நடை என்பது மூன்றுவிதமான பொருளைக் குறிக்கிறது.

1. எழுத்தாளன் சிந்திக்கும் முறை

2. வெளிப்படுத்தும் திறன்

3. இலக்கியத்தில் ஈடு இணையற்ற சாதனை என்பன"[55]

என்கிறார் மர்ரே. நடை என்பது எழுத்தாளன் உரைநடை அல்லது கவிதை வடிவத்தில் தான் சொல்ல விளையும் கருத்தை எவ்வகையில் சிந்தித்து, எவ்வண்ணம் மொழிவழி வெளிப்படுத்துகின்றான் என்பனவற்றைச் சுட்டுவதேயாகும். எழுத்தாளனின் தனித்தன்மையை உணர்த்துவதோடு அல்லாமல் புலமையையும், உள்ளத்தெளிவையும், கலையுணர்வின் ஆழத்தையும் புலப்படுத்தவல்லது நடையாகும்.

"ஒரு படைப்பின் நடைத் தன்மையை அடிப்படையில் பயன்படுத்தப்படும் செஞ்சொற்கள், தொடரமைப்புகள், ஒலிநயப் போக்குகள், பிறவெளிப்பாட்டுத் திறன்கள் ஆகியவற்றைக் கொண்டே அறியமுடிகிறது"[56] இவற்றோடு இலக்கியக் கூறுகளைக் கொண்டும் நடையின் தனித்தன்மைகளைக் காணமுடிகிறது.

விக்கிரமனின் சிறுகதைகளில் மொழிநடை பின்வருமாறு பாகுபடுத்தப் பெறுகிறது. அவையாவன,

1. எளிய நடை

2. வருணனை நடை

3. உவமை நடை

4. வினாவிடை நடை

5. ஆங்கிலக் கலப்பு நடை.

**எளிய நடை**

வாசகர் படித்தவுடன் புரியும் வண்ணம் எளிய சொற்களால் சின்னஞ்சிறு தொடர்களால் அமையும் நடை எளிய நடை எனப்படும். விக்கிரமனின் கதைகளில் 'வளர்த்தமான்' கதை எளிய நடையில் அமைந்துள்ளது.

"மகாபாரத்தில் ஏதோ சந்தேகமாம், தெளிவுபெற உங்களிடம் கேட்கவேண்டுமாம் என்றார் கணபதி. அய்யா கணபதி! புலவர் செல்வராசிடம் போய்க் கேட்கச் சொல்லி அனுப்புங்கள்"[57] என்பதும், 'சுதந்தரப் பறவை' கதையில் "உன் பெயர் என்னடா? என்று கேட்டார் ராமராவ். நாக சர்ப்பத்தால் கட்டுண்டவன்போல் நாகராஜன் ஏனோ அங்கே நின்றுகொண்டிருந்தான். நாகராஜன் மெல்லிய குரலில் அவன் கூறினான்"[58] என்பதும் எளிய நடையில் எந்தவித மிகை உணர்ச்சியுமின்றி, எதார்த்தமான சூழலில் இயல்பாக உரையாடல் நடைபெறுவதாக அமைந்துள்ளன. இவ்வாறு படிப்போர்க்கு எளிதில் புரியும் வண்ணம் இயல்பான நடையில் எழுதுவது விக்கிரமன் மொழிநடை இயல்பாக உள்ளது.

**வருணனை நடை**

"முருகியல் உணர்ச்சி மனிதனின்கண் எழுவதால் தன்னுடைய விளக்கங்களுக்கு இலக்கியன் அழகிய வடிவங்கள் அமைக்கின்றான். இதனால் இலக்கியம் கலையாகிறது."[59] அவ்வாறு அவன் வெளிப்படுத்தும் இலக்கியத்தன்மைகளிலே ஒன்று வருணனைத் தன்மையாகும். "புலன்களால் உணர்ந்தவற்றை அல்லது புலன்களின் வாயிலாக உணரும் புறக்காட்சிகளைச் சொற்களில் மொழிபெயர்த்துக் காட்டுவதே வருணனையாகும்."[60] விக்கிரமனின் சிறுகதைகளை,

1. பாத்திரத் தோற்ற வருணனை

2. பாத்திரச் செயல் வருணனை

என்ற வகையில் பகுத்தறிய இயலும்.

**பாத்திரத் தோற்ற வருணனை**

சிறுகதையைக் கலையாக மாற்ற வருணனை தேவை. வருணனையே கதை முழுதும் ஆட்சி செய்யுமாறு அமைந்துவிடக் கூடாது. விக்கிரமனின் 'கண்ணன் மீண்டும் வருகிறான்' கதையில் துணைக் கதைமாந்தர் சுரேசின் தோற்றத்தை "சுரேஷின் குறுகுறு நகையும், சுருட்டை முடியும், பளிச்சென்ற கண்களும், செப்புச் சிறுவாயும் இந்த உலகத்தையே மறக்கச் செய்தன"[61] என்பதன் மூலம் பாத்திரத்தோற்ற வருணனை புலனாகும்.

'பூச்சாண்டி' கதையில் "குழந்தை! அழாம இருந்தியா? என்ற குரல் கேட்டு கமலம் திரும்பிப் பார்த்தாள். அதே கரகரப்பான குரல், லுங்கி வேட்டி, முண்டாபனியன், கிருதா தலை, நீண்ட பற்கள், கோரமுகம்"[62] எனப் பூச்சாண்டியின் தோற்ற வருணனை அமைந்துள்ளது.

இயல்பான மனிதத் தோற்றத்திலிருந்து சற்று வேறுபட்டு மிகைத் தோன்றலாகவோ, விகற்பமாகவோ, ஆச்சர்யத்தோற்றமாகவோ காட்டவேண்டிய நிலையில் பாத்திரத் தோற்ற வருணனையை விக்கிரமன் மொழிநடையாகக் கொண்டுள்ளார்.

குழந்தையின் உடல் உறுப்புகளை வருணனைத் தன்மையோடு மிகைப்படுத்தி 'கண்ணன் மீண்டும் வருகிறான்' கதையில் அமைத்துள்ளார். அழும் குழந்தையின் அழுகையை நிறுத்த அதிகம் பார்க்காத கோரவடிவமுள்ளவனைக் காட்டிப் பயத்தால் அழுகையை நிறுத்தும் நிலைக்குப் பாத்திரத் தோற்ற வருணனையைக் கொண்டுள்ளார் விக்கிரமன்.

**பாத்திரச் செயல் வருணனை**

'சந்திரமதி பொன்னையா' சிறுகதையில் நடிகன் பாட்டுப்பாடும் செயலைக் குறிப்பிட "தூரத்தே எங்கோ தெருக்கூத்தில் 'ராஜாதி ராஜன் வந்தேனே' என்ற பாட்டின் குரல் - அந்த நடிகரின் அடிவயிற்றினின்று உண்டாகும் அலறல் தெளிவாக விழுந்தது. அந்த நிசப்தமான வேளையில் அந்த மெல்லிய ஒலி எத்தனை எத்தனையோ எண்ணச் சூழல்களைக் கொண்டுவந்து என் மனக் கண்முன்னால் நிறுத்தியது"[63] என்பதால் அறியலாம்.

'பட்டாபிராமன் புனர்ஜென்மம்' கதையில் "சதா அவனுடன் சுற்றிக்கொண்டிருக்கும் என்னைப் பார்த்து என் நண்பர்களெல்லாம் 'டேய் நீ அவனுடன் செல்வது எப்படியிருக்கிறது தெரியுமா? ரோஜாப்பூவைச் சுற்றி வண்டு வட்டமிடுவதுபோல் இருக்கிறது"[64] என்று செயல் வருணிக்கப்பட்டுள்ளது.

பாத்திரங்களின் செயலை வருணித்துக் கூறுவதால் சிறுகதை அழகும், சொல்லோவியமும் செறிந்து படிப்போர் இதயத்தில் நன்கு பதிந்து விடுகிறது. அது சிறுகதைக்கு மேலும் அழகூட்டுகிறது.

**உவமை நடை**

உவமை என்பது ஒரு பொருளை விளக்குவதற்கு அதனோடு ஒத்த மற்றொரு பொருளை ஒப்பிட்டுக் காட்டி விளக்குவது ஆகும். செய்தி ஒன்றினைக் கூறிவிட்டு அதுபோல எனப்பிரித்து உரைப்பதை வழக்கில் காணலாம். அதே அமைப்பில் பாத்திர மனநிலையைக் காஞ்சனாவுக்கு அபார்ஷன் என்றதும் "வெறும் மரங்கட்டை போல செயலற்று வருத்தம் பொங்க அவன் திருச்சியை அடைந்தான்"[65] என்றும், செயலின் தன்மையை எடுத்துக் கூறும் போது "கற்பு பாராங்கல்லைப் போன்று கடினமானது.

உறுதியானது. கனலினும் பொசுங்காதது"[66] எனவும் "பக்கத்து வீட்டுக் குப்பைத் தொட்டிக்கருகே பூனைக்குட்டிகளை விட்டுவிட்டு ராஜீவ் வெற்றி வீரனைப்போல் திரும்பினான்"[67] என்றும் "மல்லிகா வண்ணப்பட்டுடை சலசலக்க ஆடுவது தேவலோகத்தில் ஊர்வசி நடனமாடுவது போல் தோன்றியது"[68] எனவும் விக்கிரமன் உவமை நடையில் உரையாடலை அமைத்துள்ளார்.

பாத்திரங்களின் பண்புநலன்களையும், உணர்ச்சிகளையும் உவமிக்கும்போது இந்த உவமைநடை காணப்படுகிறது. இந்நடை படிப்போர்க்கு ஒரு கவர்ச்சியையும், விருப்புத்தன்மையையும் ஏற்படுத்துவதாக அமைந்துள்ளது.

'நண்பர்கள் கற்சிலைபோல உட்கார்ந்திருந்தனர்' எனும்போது நண்பர்கள் பலர் சேர்ந்தால் ஆட்டம், பாட்டம் இருக்கும் நிலையில் கற்சிலைபோல என உவமித்ததால் அவர்கள் அந்நிலையடைவதற்கான காரணத்தைப் படிப்போர் அறியமுயல்வர். இத்தன்மை அடிப்படையில் உவமைநடை விக்கிரமன் சிறுகதைகளில் குறிப்பிடத்தக்கதாக இடம்பெற்றுள்ளது.

**வினா - விடை நடை**

எழுத்தாளன் வாசகர் நெஞ்சில் தான் உணர்த்த விரும்பும் கருத்தைச் சித்திரித்துக் காட்டவும், தன் சிந்தனைவழி வாசகர் சிந்தனையைத் தூண்டவும், தான் வலியுறுத்தும் கருத்திற்கு எதிராக எழும் கருத்துக்களைத் தன்னுள் அடக்கி உண்மை நிலையைச் சுட்டவும், காரணங்களை அடுக்கி உரைத்து விவாதப் போக்கில் வழக்காடுவதற்கும் வினா - விடை உத்தி துணைநிற்கும். இதனால் இதனை வழக்காடு நடை என்றும் உரைப்பர்.

விக்கிரமன் சிறுகதைகளில் பாத்திரங்களின் வாழ்க்கைப் போக்கில் ஏற்பட்ட மாற்றங்களைச் சுட்டும்போதும் சமுதாயச் சிந்தனையைத் தூண்டும்போதும் இத்தகைய நடை காணப்படுகிறது. கஸ்தூரியின் கடிதம் கதையில் "நீங்களே சொல்லுங்கள் அக்கா! உலகமே சம்பள உயர்வு, பஞ்சப்படி கேட்கும்போது, குடியானவர்கள் கேட்பதில் என்ன தப்பு?"[69] என்பதில் வினாவிடை நடை அமைந்துள்ளது.

விக்கிரமன் சிறுகதைகளில் மெய்ப்பாட்டுணர்வைக் குறிக்கும் சூழலில் வினாவிடை நடை அமைந்துள்ளது. 'தெய்வத்தாய்' சிறுகதையில் "என்ன? அட்ஜஸ்ட்மெண்டா? கஞ்சி குடிக்கவும், கந்தல் கட்டவும் சொல்கிறார் உங்கள் அம்மா. என் தந்தை அந்த நிலைக்கு வைக்கவில்லை. உங்கள் பணம் இல்லாவிடினும் எனக்கு என் அப்பா வைத்துவிட்டுப் போன பணம் என் தேவைக்குப் போதும்"[70] என்பதில் இந்நடை அமைந்துள்ளது. எந்த ஒரு செயலிலும் வினா - விடை வருதல் இயல்பு. தெளிவுபெறாத நிலையில் வினாக்கேட்டலும், அதற்குச் சரியான விடை கொடுத்துப் புரியவைத்தலும் ஆகிய பாங்கின் அடிப்படையில் இந்நடை அமைந்துள்ளது.

### ஆங்கிலக் கலப்பு நடை

ஆங்கிலம் தொடர்பு மொழியாக விளங்குவதாலும் ஆங்கிலம் கலந்து பேசுவது மரியாதைக்குரியது என்ற எண்ணம் சமுதாயத்தில் நிலைத்து விட்டதாலும் பாத்திர இயல்புக்கும் கதைச் சூழலுக்கும் ஏற்ப ஆங்கிலம் கலந்த நடையை உரையாடலில் அமைப்பது தவிர்க்க இயலாததாகிவிட்டது. பெரும்பாலான எழுத்தாளர்கள் ஆங்கிலம் கலந்த நடையையே பயன்படுத்துகின்றனர். அவ்வகையில் விக்கிரமனும் தம் சிறுகதைகளில் ஆங்கிலம் கலந்த நடையைப் பயன்படுத்தியுள்ளார்.

விக்கிரமனின் பாதுகாப்பு வளையம், நண்பா மறந்துவிட்டாயா?, அழுக்கு ஆகிய கதைகளில் ஆங்கிலக் கலப்பு நடை இடம்பெற்றுள்ளது.

'பாதுகாப்பு வளையம்' கதையில், "மிஸ் தேவகுஞ்சரி எம்.ஏ.காம்., மற்றும் இத்யாதி புதிய படிப்புகளுக்கான பட்டங்கள் கூறிய அவர் முன்னமே தெரியும் போல் சிரித்தார். தன் 'லெட்டர் ஹெட்டில்' அதிகாரிக்கு எழுதிய கடிதம் இருந்ததை அறியவில்லை"[71] என்று ஆங்கிலக் கலப்பு நடை கையாளப்பட்டுள்ளது.

'நண்பா மறந்துவிட்டாயா? கதையில், "ஓர் உருவம் பரட்டைத் தலையுடன் கிழிந்த உடையுடன். கும்பலில் நெருங்கி அருகில் சென்று மிஸ்டர் மனோஹர்... குட் ஈவினிங்... நீ வருவதைக் குறித்து மிகவும் சந்தோசம் என்றது. அதைச் செவியுற்ற மனோஹர் டாம்... நான்சென்ஸ்! யார் உன்னை இங்கே விட்டது? அந்நோன் பர்ஸன் கெட்அவே... என்றான்"[72] என்பதில் ஆங்கிலக் கலப்பு நடை விளங்கும்.

'அழுக்கு' கதையில் "யார்ரா அது நியூசென்ஸ்... ஏன் ஷவுட் பன்றே? என்று குரல் கொடுத்துக் கொண்டே தட்டுத் தடுமாறிப் படி இறங்கி வந்தார்"[73] என ஆங்கிலக் கலப்பு நடை இடம்பெற்றுள்ளது.

**உத்திகள்**

படைப்பாளன் தான் சொல்லவருகின்ற கருத்தை வாசகர்களுக்கு எளிமையாக விளங்க வைக்கக் கையாளும் சில வழிமுறைகளுள் ஒன்று உத்தியாகும். படைப்பாளி தன் சிறுகதை சிறப்பதற்கும், எளிமையாகக் கையாளுதல் அவசியம். அந்தந்த எழுத்தாளனின் மனப்போக்கையும் பயிற்சியையும் பொருத்து, கதையின் உட்பொருள், கதைக்கரு,

பாத்திரப்படைப்பு நிகழ்ச்சிகள் ஆகியவற்றிற்கு ஏற்ப இயற்கையாகவே அமைந்து வருவது சரியான உத்தியாகும்.

"உயிரில்லாமல் உரிப்பொருள் இல்லையாதல் போல் உத்தியில்லாமல் இலக்கியம் இல்லை. இலக்கியங்களை வளர்ப்பதும் வாழ்விப்பதும் உத்திகளே. உத்திகளை வளர்ப்பதும் வாழ்விப்பதும் இலக்கியங்களே. இந்தச் சிந்தனையோடு கதையாசிரியர்களிடம் வருகையில் அவர்களுடைய படைப்புக் கலையில் ஆற்றலைக்கூட கூர்தீட்டி, ஒளி ஓட்டி வெளிக்கொணர்வது அறிந்தோ அறியாமலோ கையாளும் உத்திகளே பிரிக்க முடியாத இத்தகைய இயைபால் உத்திகளால் படைப்பாளர்களும், படைப்பாளர்களினால் உத்திகளும் சிறப்படைதல் கண்கூடு"[74] என்பர். அவ்வகையில் விக்கிரமனின் சிறுகதைகளில் பின்னோக்கு உத்தி, நனவோடை உத்தி, கடித உத்தி ஆகியன அமைந்துள்ளன.

**பின்னோக்கு உத்தி**

"செய்திச் சுருக்கமும், சொல்முறைச் சுருக்கமும் தேவைப்படும் சிறுகதையில் பனித்துளியில் பாரினையே அடக்கிக் காட்டுதல் போல் ஒன்றைக் கொண்டு ஓராயிரத்தை உணர்த்த வேண்டிய ஒரு கலையில் முறைப்படி நிகழ்ச்சிகளைச் சொல்லுதல் முடியாது. இடையிலோ, முடிவிலோ தொடங்கி முதலைப் பின்னோக்கால் உணர்த்துவது பெரும்பாலோர் கையாளும் முறை"[75] என்பர்.

சிறுகதை இலக்கியத்தில் அமையும் இவ் உத்தியை, "நிகழ்கால நிகழ்ச்சிகளைக் கூறிச் செல்லும் போது, கதையின் இயக்கத்திற்கு ஏற்ற முறையில் கடந்த காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளைப் பின்னோக்கிப் படைக்கிறார் ஆசிரியர்"[76] என்பர். இவ்வுத்தியை விக்கிரமன் தம் கதைகளில்

படைப்பாக்கத்திற்குத் துணையாகக் கொண்டுள்ளார். விக்கிரமனின் ‘கந்தப்பன் காளை,’ ‘ஓ,’ ‘நல்லதோர் வீணை,’ ‘ஞானோதயம்’ ஆகிய கதைகளில் பின்னோக்கு உத்தி அமைந்துள்ளது.

‘கந்தப்பன் காளை’ சிறுகதையில் கந்தப்பனுக்கு மகள் கண்ணம்மாவும் சிறிது நிலபுலன்களும்தான் ஆஸ்தி. போனயுத்தம் ஆரம்பிக்கும் முன்னமேயே சிங்கப்பூரிலிருந்து சிறிதளவு சொத்துடன் தன் மகள் கண்ணம்மமாவுடன் கிளம்பி வந்தவர் அவர். ஊர் நாட்டாண்மைக்காரரிடம் “அந்த முரட்டு மாட்டை எவராலும் பிடித்து அடக்கமுடியாது. நிச்சயம் அப்படி யாராவது பிடித்துவிட்டால் அப்படிப்பட்டவன் பெரும் வீரனாகத்தானிருக்க வேண்டும்”[77] என்று பின்னோக்கு நடையில் மாட்டைப் பரிசாகக் கொடுக்கும் நிகழ்வை விளக்கியுள்ளார்.

தான் வாழ்ந்த காலத்தில் ‘ஓ’ போடும் கைரேகை நிபுணரிடம் நடந்துகொண்ட நிலையை தற்போது ஒரு குழந்தையுடன் கண்ணில்லாத நிலையில் எடுத்துக்கூறும் ‘ஓ’ கதையில் விக்கிரமன் பின்னோக்கு உத்தியைக் கையாண்டுள்ளார். அவரது கதையில், “ஒருநாள் அந்த ரேகை நிபுணரைக் காணவில்லை. மறுநாள் வருவார் என்று எதிர்ப்பார்த்து ஏங்கி நின்ற அவளது ஏக்கத்தையும், பரிதாபநிலையையும் அனுதாபத்துடன் நோக்க ஆளில்லை. வாடகைப் பாக்கிக்காக அந்த அறையிலிருந்த பொருள்களை எடுத்துக்கொண்டு தாட்சண்யமின்றி அவளை வெளியேற்றிவிட்டனர்”[78] என்று தான் முன்பு வாழ்ந்த வாழ்க்கையைப் பின்னோக்கு நிலையில் காட்டியுள்ளார்.

‘நல்லதோர் வீணை’ கதையில் கேசவராம் தன்னிடம் இசை பயிலவரும் வாணியை எப்படியாவது அடைந்துவிட வேண்டும் என்ற ஆசையில்

திரைப்படத்திற்கு அழைத்துச் சென்று தன் விருப்பத்தை எப்படியாவது தெரிவிக்க வேண்டும் என்று நினைக்கும் வேளையில் வாணி தன் கடந்தகாலக் கதையை எடுத்துரைப்பதாக விக்கிரமன் படைத்துள்ளார்.

"என்னைக் கைப்பிடித்தவன் அதிகம் படிக்கவில்லை. வேலையும், நிரந்தரமும் இல்லை. அதனால் தான் வேலைக்குச் சென்றேன்"[79] என்று பின்னோக்கு உத்தியாகக் கதையை அமைத்துள்ளார்.

'ஞானோதயம்' கதையில் தன் கடந்த வாழ்வின் ஆடம்பரத்தால் இப்போது யான் படும்பாடு என முன்வாழ்க்கைநிலையை சோமையா எடுத்துக் கூறுவதாகக் காட்டியுள்ளார். இதனை, "மேலைநாட்டு மதுவுக்கு என்றே என் பணம் கரைந்தது. மதுவின் தோழியான மாது எப்போதும் என் நினைவை விட்டு மாறாதிருப்பாள். என் தொழிலை மறந்தேன். நீலவேணி என்ற நடிகையைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கலாம். அவள் இந்த உலகத்திலேயே இப்போது இல்லை"[80] என்பது உணர்த்தும்.

இதில் கவர்ச்சித் தோற்றமும், மயக்கமன இயல்பும் கொண்ட பாத்திரத்தின் இயல்பைச் சுட்ட, கடந்தகால நிகழ்ச்சியினைக் கதையின் பின்னோக்குப் பாங்கில் விக்கிரமன் உணர்த்தியுள்ளார். சோமையா ஒரு இயக்குநராய் இருந்து மது, மாதுவிற்கு அடிமையாகி உயர்ந்த வாழ்விலிருந்து தாழ்நிலையை அடைவதைக் கூறிப் பிறரைத் திருத்தும் நல்வழிப்பாதையையும் அதை ஏற்றுப் பின்பற்றித் தானும் திருந்தி நல்வழிச் செல்லும் நரசிம்மனையும் இச்சிறுகதையில் சமுதாயத்திற்குக் காட்டியுள்ளார் விக்கிரமன்.

**நனவோடை உத்தி**

காலம், இடம் ஆகியவற்றின் பின்னணியில் நிகழ்ச்சிகளை முறையாகக் கூறாமல், பாத்திரத்தின் உள்மன எண்ணங்களை வெளிப்படுத்துவது நனவோடையாகும். "ஒன்றை நாம் நினைத்தால் சிறிது நேரத்திற்குள் அதை ஒட்டிய பல நினைவுகள் மனதில் தோன்றும். இவ்வாறு உள்ளத்தில் ஒன்றில் இருந்து ஒன்றும் அதிலிருந்து மற்றொன்றும் தொடர்ந்து உள் மனதில் எழும் எண்ணங்களை அமைக்கும் முறையே நனவோடை முறையாகும்"[81] என்பர் தா.ஏ.ஞானமூர்த்தி.

காதலால் சாதாரண மனசு பொல்லாத மனசாகிப் பல நல்ல வசதிகளைத் துறப்பதில் அரசனும், ஆண்டியும் ஒன்றே என்கிற உயர்ந்த தத்துவத்தைப் 'பொல்லாத மனசு' கதையில் "சாமி...! இன்னும் என்னென்ன திட்டமிட்டிருக்கு தெரியுமா... கை சரியான பிறகு ஊருக்குப் போகப் போவதில்லை. திருத்தணி போய் முருகன் சந்நிதியிலே நாங்கள் கடவுள் சாட்சியாகத் தம்பதியாகிடப் போறோம்"[82] என நனவோடையாக அமைந்துள்ளது.

'புத்துயிர்' கதையில் ரகுராமனுக்கு வேலையை இடம் மாற்றி வேறு ஊருக்குப் போட்டவுடன் அவன் பழைய நினைவுகளில் மூழ்கும் நிலையில் நனவோடை உத்தி கையாளப்பட்டுள்ளது. இதனை "நான் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவனல்லன் சேர்ந்தநல்லூர் பண்ணையென்றால் பிரபலமாயிற்றே, பண்ணையார் பாஸ்கர அய்யருடைய சாஷாத் புதல்வன் நான்தான். பணத்தில் மிதந்த நான் நூறு ரூபாய் சம்பளத்துக்காக இப்படி கஷ்டப்படவேண்டி வந்திருக்கிறது"[83] என்பது உணர்த்தும்.

சாதிவிட்டு வேற சாதிப் பெண்ணைத் தான் திருமணம் செய்துகொள்வேன் என்று வாதாடி உயிர் துறந்த பட்டாபி அவன் நண்பனின்

முன் உருவமாக வந்து "என் சபதம் நிறைவேறியதாகவே இருக்கட்டும் நாளைக் காலை நான் கல்கத்தாவுக்கு விமானத்தில் போகிறேன். அங்குபோய் ஜானகியைச் சந்திப்பேன். மறுநாளே அவளை மணந்துகொள்வேன். பிறகு வடக்கே காலங்கழிப்பேன். புதுவாழ்வு வாழ ஆசைப்பட்டேன் கிடைத்துவிட்டது"[84] என்று அடுத்தடுத்துச் செய்யும் செயல்களைச் சொல்வதாக 'பட்டாபி ராமன் புனர்ஜென்மம்' கதையில் நனவோடை உத்தி அமைந்துள்ளது. அச்சிறுகதையில் சாதிவிட்டுச் சாதி திருமணம் செய்யத் துணிந்து அதனால் போராடி இறந்தவன் தன் இறப்பிற்குப்பின்னால் ஆவியாகி நண்பனிடம் தான் காதலித்தவளைக் கரம்பிடித்து, திருமணம் செய்துகொள்வேன் எனக் கூறுவதுபோல் அமைத்திருப்பது சமுதாயத்திற்குக் காதலின் ஆழத்தைக் காட்டுவதாக உள்ளது.

### கடித உத்தி

கடிதங்கள் மூலமாகவே கதை கூறுதல் சிறுகதை இலக்கியத்தில் ஓர் உத்தியாகும். இக்கடிதங்கள் சில நேரங்களில் சிக்கல் காரணமாகவோ, தீர்வாகவோ அமைந்துவிடுவதும் உண்டு. "நீண்ட கால இடைவெளியைச் சொல்லவே இது ஏற்றது எனினும் சிறிது கால இடைவெளியில் நடந்து முடியும் சிறுகதைகளும் ஒரேவழி இவ்வுத்தியில் எழுதப்படுவதுண்டு"[85] என வேலஸ் ஹீல்டிக் என்பார் குறிப்பிடுகிறார்.

சிறுகதையில் கடிதங்கள் உத்தியாகப் பயன்படுவதுடன் மட்டுமல்லாமல் ஒரு முழுச் சிறுகதையே கடித வடிவில் அமைவதுண்டு. சிறுகதையில் கதைமாந்தர் தம் பண்புகளை விளக்குவதாகவும் நிகழ்ச்சிகளை உணர்த்துவதாகவும் கடிதங்கள் பயன்படுவதுண்டு. விக்கிரமனின் 'கஸ்தூரியின் கடிதம்' கதையில் கடித உத்தி அமைந்துள்ளது. இந்த ஒரு கதை மட்டுமே இவ்வுத்தியில் அமைந்துள்ளது. கஸ்தூரி படித்து முடித்துக் கிராம

முன்னேற்றத்திற்காகவும், சீர்திருத்தத்திற்காகவும் பாடுபடும் ஓர் ஆண்மகன். "இருக்கட்டும் ; இன்னும் ஒருவாரத்தில் நிலைமை சரியாகிவிடும் என்று நம்புகிறோம். உள்ளூர் ஆளில்லாமல் அறுவடை எப்படி முடியும் பார்க்கலாம். வேறு ஊர் ஆள காலை வைக்கமுடியுமா? அடிக்கடி கடிதம் எழுதாதற்கு இந்த வேலைகளே காரணம். என்னை மன்னித்து விடுங்கள் 'அன்புள்ள கஸ்தூரி' என்று 'கஸ்தூரியின் கடிதம்' "[86] என்ற கதையில் கடித உத்தி அமைக்கப்பட்டுள்ளது.

ஒருவர் மன எண்ணங்களையும், உணர்வுகளையும், ஊர் நிலவரங்களையும் பிறருக்குத் தெரிவிக்கும் கருவிகளுள் ஒன்றாகக் 'கடிதம்' திகழ்கிறது. அந்தக் கடிதம் மூலம் வெளியூரில் இருக்கும் அக்காவிற்கு ஊர் நிலவரங்களையும், அடிக்கடிக் கடிதம் எழுதாததற்கான காரணத்தையும் தெரிவிக்கும் விதமாகக் கடித உத்தியை விக்கிரமன் தம் சிறுகதையில் பயன்படுத்தியுள்ளார்.

**தொகுப்புரை**

பாத்திரங்களே தத்தம் கதையைக் கூறுவதும், கூறிக்கொண்டே கதையை நகர்த்துவதும் ஓர் உத்தி. அது தமிழ்ச் சிறுகதை உலகிற்குப் புதிதன்று. ஆனால் படிக்கும்போதே கதாபாத்திரமாக வாசகரை மாறச் செய்யும் பாங்கு ஆசிரியரின் கலைத்திறனைப் பொருத்து அமைகிறது.

கதை சொல்வதில் எளிமை, கதை மாந்தரின் உரையாடல்களில் இயல்பான மனித உணர்ச்சிகளை மறைத்து நற்பண்புகளை ஏற்படுத்தும் வகையில் மொழிநடைகளை அமைத்தல் போன்றவை நல்ல கலைத்திறனுக்குச் சான்றாகும்.

விக்கிரமனின் சிறுகதைகளில் தொடக்கம், முடிவு, தலைப்புப் பொருத்தம், உரையாடல், மொழிநடை, உத்திகள் ஆகிய கலைத்திறன்கள் குறிப்பிடத்தக்கனவாக உள்ளன. உரையாடல் தொடக்கம், நிகழ்ச்சித் தொடக்கம், அறிமுகத் தொடக்கம், சூழல் தொடக்கம், வருணனைத் தொடக்கம், ஆர்வத் தொடக்கம், நேரடித் தொடக்கம் என ஏழு வகையான தொடக்கங்களை விக்கிரமன் தம் சிறுகதைகளில் அமைத்துள்ளார்.

சிறுகதை எழுத்தாளனின் படைப்புத் திறனைப் புலப்படுத்தும் கலைநுட்பத்தில் முடிவும் ஒன்றாகும். தொடக்க இயைபு முடிவு, தொடக்க முரண்முடிவு, சிக்கல் தீர்வு முடிவு, சூழ்ச்சி முடிவு ஆகிய முடிவுகளை விக்கிரமன் தம் சிறுகதைகளில் அமைத்துள்ளார். இம்முடிவுகள் படிப்போர்க்குப் பாத்திரத்தின் மன உணர்வுகளையும், அலுவலகச் சூழல்களையும், சமுதாயத்தில் ஏழைகள் சந்திக்கும் அவலங்களையும் உணர்ந்துகொள்வதற்கு ஏதுவாக உள்ளன.

பாத்திரங்களின் பெயர்களைச் சுட்டும் தலைப்புகள், வாக்கியத் தொடர் தலைப்புகள், பொருள் உணர்த்தும் தலைப்புகள், உத்தியைச் சுட்டும் தலைப்புகள், குறியீட்டுத் தலைப்புகள் என்ற அடிப்படையில் விக்கிரமன் சிறுகதைகளில் தலைப்புகள் அமைந்துள்ளன.

நடை என்பது எழுத்தாளன் உரைநடை அல்லது கவிதை வடிவத்தில் தான் சொல்ல விழையும் கருத்தை எவ்வகையில் சிந்தித்து எவ்வண்ணம் மொழிவழி வெளிப்படுத்துகின்றான் என்பதைக் குறிக்கும். விக்கிரமன் சிறுகதைகள் வாசகர் படித்தவுடன் புரியும் வண்ணம் எளிய சொற்களால் சின்னஞ் சிறு தொடர்களால் எளிய நடையில் அமைக்கப்பட்டுள்ளன. உரையாடல்கள் எதார்த்தமான சூழலில் இயல்பாக உள்ளன.

பாத்திரத் தோற்ற வருணனையும், பாத்திரச் செயல் வருணனையும் விக்கிரமன் சிறுகதைகளில் அமைந்துள்ளன. பாத்திரங்களின் செயலை வருணிப்பதன் மூலம் சிறுகதை அழகும், சொல்லோவியமும் செறிந்து படிப்போர் இதயத்தில் பதிந்து சிறுகதைக்கு மேலும் அழகூட்டுகிறது.

உவமை என்பது ஒரு பொருளை விளக்குவதற்கு அதனோடு ஒத்த மற்றொரு பொருளை ஒப்பிட்டுக் காட்டி விளக்குவது ஆகும். செய்தி ஒன்றினைக் கூறிவிட்டு அதுபோல எனப்பிரித்து உரைப்பதை வழக்கில் காணலாம். இவ்வுத்தியையும் தம் சிறுகதையுள் உள்ளடக்கி ஒப்பிட்டுக் காட்டிக் கதையினை எளிதில் புரியும் வண்ணம் அமைத்துள்ளார் விக்கிரமன். அதோடு வினா-விடை நடையில் தான் வலியுறுத்தும் கருத்திற்கு எதிராக எழும் கருத்துக்களைத் தன்னுள் அடக்கி உண்மை நிலையைச் சுட்டியும், காரணங்களை அடுக்கி உரைத்து விவாதப் போக்கில் வழக்காடும் நெறியிலும் பல கதைகளை எழுதியுள்ளார்.

ஆங்கிலம் கலந்து பேசுதல் மரியாதைக்குரியது என்ற எண்ணம் சமுதாயத்தில் நிலைத்துவிட்டதாலும், பாத்திர இயல்புக்கும் கதைச் சூழலுக்கும் ஏற்ப ஆங்கிலம் கலந்த நடையை உரையாடலில் அமைப்பது தவிர்க்க இயலாததாகிவிட்டது. பெரும்பாலான எழுத்தாளர்கள் ஆங்கிலம் கலந்து பயன்படுத்துகின்றனர். விக்கிரமன் சிறுகதைகளில் மிஸ்டர், நான்சென்ஸ், அந்நோன்பர்ஸன், நியூசென்ஸ், அவுட் போன்ற பல வார்த்தைகள் ஆங்கில வார்த்தைகளாக அமைந்துள்ளன.

படைப்பாளன் தான் சொல்லவருகின்ற கருத்தை வாசகர்களுக்கு எளிமையாக விளங்க வைக்கக் கையாளும் சில வழிமுறைகளுள் ஒன்று உத்தியாகும். இவரது கதைகளில் பின்னோக்கு உத்தி, நனவோடை உத்தி, கடித உத்தி போன்ற உத்திமுறைகள் கையாளப்பட்டுள்ளன.

கதையின் முன்னால் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் படைப்பிலக்கியத்தின் இடையில் புகுத்துவது பின்னோக்கு உத்தியாகும். கைரேகை நிபுணரிடம் நடந்துகொண்ட நிலையைத் தற்போது ஒரு குழந்தையுடன் கண்ணில்லாத நிலையில் ஒருதாய் தன் கடந்தகால வாழ்க்கையைக் கூற விக்கிரமன் இவ்வுத்தியைப் பயன்படுத்தியுள்ளார்.

காதலால் சாதாரண மனசு பொல்லாத மனசாகிப் பல நல்ல வசதிகளைத் துறப்பதில் அரசனும், ஆண்டியும் ஒன்றே என்கிற உயர்ந்த தத்துவத்தை நனவோடை உத்திமூலம் எடுத்துக்காட்டியுள்ளார். 'அன்புள்ள கஸ்தூரி' என்ற கடித உத்தி மூலம், தம் சிறுகதைக் கருத்தைச் சமுதாயத்திற்குக் காட்டியுள்ளார்.

பொதுவாக விக்கிரமன் தமிழர் சமுதாயத்தில் குடும்பம் அமைப்பு சார்ந்த பிரச்சினைகளையும் பொருளாதார நெருக்கடியால் ஏற்படும் பிரச்சினைகளையும் தனிமனிதப் பிரச்சினைகளையும் அடிப்படையாகக் கொண்டு சிறுகதைகள் படைத்துத் தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் தனியிடம் பெறுகிறார்.

## சான்றெண் விளக்கம்

1. மீனாட்சி முருகரெத்தினம், கல்கியின் சிறுகதைக்கலை, ப.221

2. இரா.தண்டாயுதம், தமிழ்ச்சிறுகதை முன்னோடிகள், ப.179

3. Sedgewich, Novel and short stories, P.16

4. மீனாட்சி முருகரெத்தினம், கல்கியின் சிறுகதைக் கலை, ப.220

5. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.104

6. மேலது, ப.528

7. மேலது, ப.461

8. மேலது, ப.621

9. மேலது, ப.718

10. மேலது, ப.101

11. மேலது, ப.668

12. மேலது, ப.418

13. மேலது, ப.571

14. மேலது, ப.494

15. மேலது, ப.168

16. மேலது, ப.103

17. மேலது, ப.595

18. மேலது, ப.634

19. மேலது, ப.211

20. மேலது, ப.273

21. மேலது, ப.621

22. மேலது, ப.603

23. மேலது, ப.4

24. மேலது, ப.34

25. மேலது, ப.77

26. மேலது, ப.103

27. மேலது, ப.176

28. மேலது, ப.67

29. பா.உதயகுமார், அண்ணாவின் சிறுகதைத் திறன், ப.240

30. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.197

31. மேலது, ப.486

32. மேலது, ப.85

33. மேலது, ப.607

34. ப.கோதண்டராமன், சிறுகதை ஒரு கலை, ப.80

35. அ.சிதம்பரநாதன், தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப.64

36. புதுமைப்பித்தன், புதுமைப்பித்தன் கட்டுரைகள், ப.35

37. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.101

38. மேலது, ப.206

39. மேலது, ப.618

40. மேலது, ப.559

41. மேலது, ப.143

42. மேலது, ப.286

43. சாலை இளந்திரையன், தமிழில் சிறுகதைகள், ப.96

44. மேலது, ப.98

45. பா.உதயகுமார், அண்ணாவின் சிறுகதைத் திறன், ப.207

46. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.487

47. மேலது, ப.453

48. மேலது, ப.171

49. மேலது, ப.9

50. மேலது, ப.516

51. மேலது, ப.38

52. இரா.குணசேகரன், வைரமுத்து கவிதைகளில் உத்திகள், ப.213

53. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.165

54. பெரியசாமித்தூரன், கலைக்களஞ்சியம், தொகுதி இரண்டு, ப.101

55. J.Middeton Murray, The Problem of Style, P.8

56. M.H.Abrams, A. Clossory of Literary terms, P.165

57. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.614

58. மேலது, ப.421

59. பா.உதயகுமார், அண்ணாவின் சிறுகதைத் திறன், ப.340

60. மேலது, ப.341

61. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.508

62. மேலது, ப.463

63. மேலது, ப.168

64. மேலது, ப.121

65. மேலது, ப.117

66. மேலது, ப.369

67. மேலது, ப.674

68. மேலது, ப.213

69. மேலது, ப.38

70. மேலது, ப.337

71. மேலது, ப.700

72. மேலது, ப.9

73. மேலது, ப.723

74. இரா.சண்முகவேலன், கதாசிரியர்களும் உத்திகளும், ப.285

75. மீனாட்சி முருகரெத்தினம், கல்கியின் சிறுகதைக் கலை, ப.216

76. Dietrich R.E.Sundel Roger, The Art of Fiction, P.49

77. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.99

78. மேலது, ப.501

79. மேலது, ப.552

80. மேலது, ப.325

81. இராம.கண்ணபிரான், வாடைக்காற்று, ப.64

82. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.56

83. மேலது, ப.59

84. மேலது, ப.124

85. Wallack hildick, Thirteen types of Narrative, P.77

86. விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம், ப.38.

# முடிவுரை

- இயற்கை வாழ்வின் ஒரு கூற்றை, யாரேனும் ஒருவரின் பண்பை அல்லது செயலை ஏதேனும் ஒன்றன் இயக்கத்தை அல்லது செயல்பாட்டை எங்கோ ஒரு மூலையில் மறைந்து கிடக்கும் ஓர் இரகசியத்தைக் கலைச்சுவை சிறிதும் குன்றாவண்ணம் வெளிப்படுத்துவதே சிறுகதையின் குறிக்கோள் ஆகும்.

- அறப்பண்பு, நீதிபோதனை, தத்துவ விளக்கம், சிந்தனைப்புரட்சி, சமுதாயச் சீர்திருத்தம் முதலியனவும் சிறுகதைக்குரிய குறிக்கோளாக அமையும். சிறுகதைக் கலைத்திறன்களோடு வெளிப்படவேண்டும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

- கருவானது கதையின் முழுப்பொருளாகும். முரண், எதிர்பார்ப்பு நிலை ஆகியவை தவிர ஒவ்வொரு சிறுகதையும் கருவினைக் கொண்டிருத்தல் வேண்டும். கருவே கதையின் கருத்து அல்லது செயல் நோக்கத்தைத் தருகின்றது.

- உண்மைக் காதலின் வெற்றி, தாயன்பின் புனிதத்தன்மை, நாட்டுப்பற்று, துன்ப நிலையிலும் மனந்தளராமை, குடும்பத்தில் பொருளாதார நெருக்கடி, வறுமையின் நிலை, தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்தல், விடாமுயற்சியினால் வெற்றி பெறுதல் போன்றவை விக்கிரமன் சிறுகதைகளின் கதைக்கருக்களாகும்.

- காதல் மிகவும் மென்மையானது. நுட்பமானது. வியத்தகு ஆற்றல்களையும், செயல்களையும் உள்ளடக்கியது. அதிலும் நேரிய தூய காதல் வயப்பட்ட உள்ளங்கள் ஒன்றுக்கொன்று தமக்குள் ஒன்றுவது புனிதமானது.

- ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே மென்மையான இணைப்பை ஏற்படுத்தி வாழ்விற்கும், வளமைக்கும் அடிப்படையாகக் காதல் அமைகிறது.

- உண்மைக் காதலில் ஏழையும் அதிகவிலையில் பரிசு கொடுக்கமுடியும் என்ற கருவை விளக்குவதாக ஆசிரியர் 'இன்பத்தின் விலை' என்ற கதையை எழுதியுள்ளார்.

- நிறைவேறும் காதலில் 'செவ்வந்திப்பூ சிங்காரி,' 'கற்பெனும்கனல்' என்ற சிறுகதைகளையும், ஊடல் நீக்கும் காதலில் 'குழலோசை' என்னும் கதையையும் போலிக்காதலில் 'ஜாங்கிரி' என்னும் கதையையும் விக்கிரமன் படைத்துள்ளார்.

- ஒருவர் உலகில் உள்ள எந்தப் பொருளின் மீதும் ஆசை கொள்ளலாம். முடிந்தால் அதை விலைகொடுத்தும் வாங்கலாம். ஆனால் ஒரு காதலனை நினைத்திருக்கும் காதலிமீது இன்னொருவன் கொள்ளும் ஒருதலைக் காதலையும் அதனால் ஏற்படும் இன்னல்களையும் 'சந்திரமதி பொன்னையா' கதையால் அறியமுடிகிறது.

- ஒரே கூரையின் கீழ் பாதுகாக்கப்பட்ட இதயங்களின் இணைப்பு ஒரு குடும்பமாகும். அன்பு, பரிவு, பாதுகாப்புணர்வு ஒன்றுபட்டு வாழ்வது, சகிப்புத்தன்மை ஆகியவற்றின் உறைவிடம் குடும்பம் எனப்படும். பல்வேறு குடும்பங்கள் ஒன்றுசேர்ந்தது ஒரு சமுதாயம் ஆகும்.

- மனிதனுக்குள் உள்ள அரும்பெரும் திறமைகளெல்லாம் நன்கு உணர்ந்து உலகுக்குப் பயன்பட வேண்டுமானால் மனிதனுக்கு அதற்கு வேண்டிய நல்ல சூழ்நிலை இருக்கவேண்டும். அத்தகு சிறந்த சூழ்நிலையைக் குடும்பங்கள் தான் கொடுக்கமுடியும்.

♦ இல்வாழ்க்கை என்பது குடும்ப வாழ்க்கை; இல்வாழ்வான், இல்லாள் என்பவர் குடும்பத்தில் நடத்துநர், ஆளுநர் ஆவார். இவர்களின் கூட்டுப் பொறுப்பில் இல்வாழ்க்கையாகிய குடும்பம் திகழும். நன்மக்கட்பேறு குடும்பத்தில் நிறைவுப்பகுதி. குடும்பம் கூட்டாட்டுத்தத்துவத்தில் கொடிகட்டிப் பறக்கும் கம்பம்.

♦ எந்தவொரு உண்மைநிலையையும் அறியாது காதலால் கேட்பதையறிந்தோ, பிறர் கூறுவதைக் கேட்டோ பழிபோடுவதாலும், சந்தேகத்தால் பிறர் மீது பழி கூறுவதாலும் தவறு செய்யாதவர்கள் உயிர்விடும் நிலைகூட ஏற்படும் என்பதைச் 'சத்தியமான சத்தியம்' கதை அழகாக எடுத்துக்காட்டுகிறது.

♦ 'தினை விதைத்தால் தினை விளையும் என்றபடி நல்லவனுக்கு நல்லதே நடக்கும்' என்ற நம்பிக்கைக்கேற்பப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டாலும் தன் எண்ணத்தைத் தீய வழியில் செல்லவிடாது நேர்மையாய் நடந்துகொண்ட சோமுவையும், அதனால் அவனைத் தேடிவரும் பொருளையும் 'நேர்மைக்குப் பரிசு' என்னும் கதை காட்டுகிறது.

♦ தனி மனிதன் மீது சமுதாயம் செலுத்தும் ஆதிக்கங்களை எதிர்க்க அவர்கள் கையில் எடுக்கும் ஓர் ஆயுதம் நம்பிக்கை. இக்கருவை மையப்படுத்திக் 'கஸ்தூரியின் கடிதம்,' 'செல்லிசிரித்தாள்,' 'பாதுகாப்பு வளையம்' முதலான கதைகளை விக்கிரமன் எழுதியுள்ளார்.

♦ கடைசிக்காலம்வரை வைத்துக் காப்பாற்ற வேண்டிய மகன் தன்னைவிட்டுப் பிரிந்து சென்றாலும், அவன் கண்ணில் கண்ணீர்வரச்

சம்மதிக்காத தாயின் உள்ளத்தையும், ஒன்றாய்ச் சேர்ந்து வாழும்போது குடும்பத்தில் ஏற்படும் மகிழ்வையும் 'தெய்வத்தாய்' கதை காட்டுகிறது.

♦ ஒவ்வொரு குடும்பத்தின் சாராம்சம் குழந்தைகள்தான். பிள்ளையில்லா வீடு பேய்வீடு என்பார்கள். வாழ்வின் அர்த்தமே இந்தக் குழந்தைகள்தான். இன்று எத்தனையோ குழந்தைகள் குடும்ப வறுமையின் காரணமாக வேலைக்குச் செல்லும் நிலைமையைக் காணமுடிகிறது. குழந்தைகள் அவர்கள் வாழும் சமூகத்தைப் பொறுத்து நல்லவர்களாகவும், தீயவர்களாகவும் மாறுகின்றனர்.

♦ குழந்தைகள் தாயன்பைப் பெறுவதற்கு ஏங்குவர். 'நந்து' கதையில் தாயை இழந்து சித்தியின் பிடியில் வாழும் ரகு சித்தியின் கொடுமையால் சிக்கித் தவித்து நண்பன் பரசுவுடன் வீட்டில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வெளிக்கிளம்புகின்றனர். கையில் இருந்த பணம் தீர்ந்துவிடவே சாப்பாட்டிற்கு வழியில்லாதுபோக நந்து சித்தியின் அன்பை நினைத்து மீண்டும் வீட்டிற்குத் திரும்பும் நிலையைக் காணமுடிகிறது.

♦ நட்பு என்பது உயர்ந்த உள்ளத்துப் பண்பிற்கு அடையாளமாகும். அது தடம்புரளும்போது அதனால் பாதிக்கப்பட்ட சங்கரன் படும் உணர்ச்சி நிறைந்த எண்ணங்களை 'நண்பா மறந்துவிட்டாயா?' கதையால் அறியமுடிகிறது.

♦ இயலாதார்க்கும், முயலாதார்க்கும் தனக்குத் தானே சூட்டிய பெயர்தான் வறுமை. எளியவரை வலியார் அடிப்பதால் தனக்கு உண்டான துன்பத்தையும், பட்டினி கிடப்பாரையும் பார்க்கமாட்டார்கள் என்கிறார்.

♦ குழந்தைகளைப் பொருளாதாரக்குறைவால் பள்ளிப்படிப்புக்கு அனுப்பமுடியாமல் குழந்தைத் தொழிலாளர்களாக்குகின்றனர்.

வறுமையால் எத்தனையோ உயிரிழப்புக்களும் ஏற்படுகின்றன. திருட்டு, பிச்சையெடுத்தல், கொலை போன்ற தீய செயல்கள் நடப்பதற்கு வறுமை அடித்தளமாகிறது. இதனைக் கருவாகக் கொண்டு விக்கிரமன் நீலரிப்பன், வாணக்காரன், கௌரவம், பிழைத்த இதயம், குலதனம் ஆகிய கதைகளைப் படைத்துள்ளார்.

♦ மனிதநேயம் என்பது மனிதருக்கு இருக்கவேண்டிய தொடர்புறவு பற்றிய ஒருவிதமான மனநிலை. இத்தகைய மனிதநேயத்தை அடிப்படையாகக் கொண்டு 'கந்தப்பன் காளை,' 'மனிதநேயம்' என்னும் சிறுகதைகள் படைக்கப் பட்டுள்ளன.

♦ சிறுகதையில் கதைமாந்தர்களைச் சுவையுடையவராகப் படைப்பது நுட்பமான கலையாகும். வாழ்க்கையில் உயிரோடு இயங்குவதைத் தம் கதைகளுக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்துக்கொண்டு பாத்திரங்களைப் படைக்கின்றனர்.

♦ சிறுகதை எழுத்தாளர் பாத்திரப்படைப்புக்குப் பல செயல்முறைகளை மேற்கொள்வர். ஒரு பாத்திரத்தின் ஏனைய பண்புகளை விடுத்துக் குறிப்பிட்ட ஒரே பண்பின்கண் தம் கவனத்தைச் செலுத்தி விளக்குவர்.

♦ விக்கிரமனின் சிறுகதையில் வரும் பாத்திரங்களை, முதன்மைப்பாத்திரம், துணைமைப்பாத்திரம், எதிர்த்தலைமைப் பாத்திரம், சார்புப் பாத்திரம் எனப் பாகுபடுத்தி அறியமுடிகிறது.

♦ முதன்மைப் பாத்திரம் சிறுகதை முழுவதும் நிறைந்து நிற்பதாக இருக்கிறது. அறிமுகப்படுத்தும் நிலையிலிருந்து வளர்ச்சிபெற்று முழுநிலை அடைதல் காணப்படுகிறது.

♦ முதன்மை ஆண்பாத்திரங்கள் செயல்பாட்டு அடிப்படையில் தியாக வாழ்க்கை, மறவாநட்பு, நட்பிற்கு முக்கியத்துவம் கொடுத்தல், அஞ்சாத காதல், சமுதாயக் கொல்லி பிறர் குழந்தையைத் தன் குழந்தையாய் வளர்த்தல் ஆகிய பண்புடையவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

♦ குழந்தையின் மன இயல்பை மனிதநேயத்தோடு புரிந்து செயல்படும் பொன்னுச்சாமியையும், அண்ணனின் உயிரைக் காப்பாற்றிய வேலுவையும், ஆதரவற்ற அண்ணன் குழந்தைகளுக்காகத் தன்னையே அர்ப்பணித்த பதியையும் ஆண் முதன்மைப்பாத்திரத்தில் விக்கிரமன் சிறப்பாகப் படைத்துள்ளார்.

♦ விக்கிரமனின் சிறுகதைகளில் பெண் தலைமைப் பாத்திரங்களாக சிங்காரி, பார்வதி, சீதா, சாந்தலெட்சுமி, நீலாம்பிகை, தேவகுஞ்சரி, மஞ்சுளா, செல்லி, வேதா, ஊர்வசி, பூரணி, புவனா போன்றோர் இடம்பெற்று, கௌரவத்தை விட்டுக்கொடுக்காதிருத்தல், தாய்மையுணர்வு, தனித்து வாழும் எண்ணப்போக்கு, பாதுகாப்புணர்வு, பிறர் துன்பத்துக்கு வருந்துதல், வறுமையிலும் சொத்தைக் காத்தல், விருந்தினரை வரவேற்றல், தவறை உணர்ந்து திருந்துதல், அன்பு, துணிவு மனப்பான்மை ஆகிய பண்புகள் உடையவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

♦ மனைவியை இழந்த ஒருவன் தன் குழந்தைகளுக்காகத் தாய்மைப் பண்பினை ஏற்ற நிலையினை 'மாற்றாந்தாய்' கதையில் வரும் துணைமைப் பாத்திரத்தால் அறியமுடிகிறது.

♦ காலங்கள் பல கடந்தாலும் அந்த நினைவுகளும் உணர்வுகளும் மீண்டும் தோன்றுவதையும் மனத்தால் களங்கம் இல்லாமல் புத்துயிர் பெற்ற பழைய

நட்பை எண்ணி ஆனந்தப்படும் நிலையினையும் 'புத்துயிர்' கதையில் இடம்பெறும் துணைமைப் பாத்திரம் நன்கு வெளிப்படுத்துகிறது.

- ♦ விக்கிரமனின் சிறுகதைகளில், வாழ்க்கைக்குத் தேவையான இன்றியமையாததாகப் பொருளும் பணமும் வலியுறுத்தப் பட்டுள்ளன. பிறர் தன்னை நாடிவருவதற்கும் தன்னை நேசிப்பதற்கும் தன் குடும்பக் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்கும் முழுமுதற் காரணமாகத் திகழ்வது பணம். அத்தகைய பணத்தால் தன் குடும்பத்திற்கு இழுக்கு நேரா வகையில் தான் சிறுகச்சிறுகச் சேமித்த பணத்தைக் கொண்டு தன் தங்கைக்கு ரிப்பன் வாங்கிக் கொடுத்துத் தன் குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றும் பெண்ணாகப் பார்வதி திகழ்வதை அறியமுடிகிறது.

- ♦ தலைமைப் பாத்திரத்தின் செயல்களுக்கு எதிர்முனையில் இருப்பவர்களே எதிர்த்தலைமைப் பாத்திரங்களாவர். இப்பாத்திரம் தன்னுடைய வலிமையில்லாத கொள்கைப் பிடிப்பினைக் கொண்டு தீச்செயல்களைப் புரிபவர்களாகவே இருப்பர். இவ்வகைப் பாத்திரங்களும் அறிமுகப்படுத்தப்பட்டுப் பல நிலைகளில் வளர்ச்சிபெற்று இறுதியில் முழுமை பெறுவார்கள்.

- ♦ விக்கிரமன் சிறுகதைகளில் ஆண் எதிர்த்தலைமைப் பாத்திரங்கள் பிறன்மனைவியை அடைதல், பழிவாங்கத் திட்டமிடல் ஆகிய இயல்புகள் கொண்டவர்களாகவும், பெண் எதிர்த் தலைமைப்பாத்திரங்கள் அறிவுரையை ஏற்காமை, வெறுப்புணர்வு மனப்பான்மை போன்ற இயல்புகள் உடையவர்களாகவும் திகழ்கின்றனர்.

- ♦ தொழிலில் நட்டம் ஏற்படும்போது எந்த ஒரு குடும்பமும் நடத்துவது எளிதான காரியமல்ல. அதனால் உடலும், மனமும் சோர்ந்துவிடுகின்றது

என்ற கருத்தைச் செல்லி என்ற சார்புப்பாத்திரம் மூலம் விக்கிரமன் புலப்படுத்தியுள்ளார்.

♦ சமுதாயம் என்பது பகுத்தறிவு படைத்த மக்களினத்தோடு பிணைக்கப்பட்ட ஓர் அமைப்பு. 'Social' என்ற ஆங்கிலச் சொல் சமூகம் அல்லது சமுதாயத்தைக் குறிக்கும் Society என்ற சொல்லோடு நெருங்கிய தொடர்புடையது.

♦ எந்த ஓர் எழுத்தாளனும் சமுதாயத்தைச் சாராமல் தனது படைப்புகளைப் படைப்பது என்பது எளிதானது அல்ல. இந்தச் சமூகத்தில் நிலவும் ஏதோ ஒருவிதத்தில் முரண்பாடுகளை அவன் காணநேரிடுகிறது. தனி ஒரு மனிதனாய் அதைத் தவிர்க்க முடியாத சூழலில் தனது படைப்புகள் மூலம் அந்த முரண்பாடுகளைக் கூறி முடிவும் கூறிவிடுகிறான் படைப்பாளன்.

♦ சமுதாயச் சிந்தனைகளாகக் காதல், குடும்பம், குடும்பச்சிக்கல்கள், பாலியல் சிக்கல்கள், நட்பு, மனிதநேயம், மூட நம்பிக்கை, சாதியச் சிக்கல்கள், உழைப்பு, நாட்டுப்பற்று என்பன விக்கிரமனின் சிறுகதைகளில் இடம்பெற்றுள்ளன.

♦ பெண்ணியம் என்பது பெண்களின் கொடுமைகளைக் களையவும், அவர்களின் தாழ்நிலையை ஆராய்ந்து அதை மாற்றவும் மேற்கொள்ளப்படும் வழிமுறைகளை உருவாக்க ஏற்பட்ட ஒன்றாகும்.

♦ பெண் சமுதாயத்தில் காணப்படும் சிக்கல்களைக் களைவதன் மூலம் அரசியல், பண்பாடு, பொருளாதாரம், ஆன்மீகம் போன்ற துறைகளில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்த முடியும்.

- தாராளப் பெண்ணியம், சமதர்மப் பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம் என மூன்று வகையில் பெண்ணியம் அமைந்துள்ளது.

- பெண்கள் பிறந்த வீட்டில் சுதந்திரமாக இருந்தாலும் திருமணம் செய்துகொண்டபின் அவர்களது சுதந்திரம் தடைப்பட்டு அடங்கி வாழவேண்டிய நிலை உருவாகி விடுகிறது. பெண்விடுதலை பற்றிப் பேசுபவர்களும்கூட இதற்கு விதிவிலக்கல்ல.

- விக்கிரமன் சிறுகதைகளுள் பெண்ணிய நோக்கில் பொல்லாத மனசு, இன்பத்தின் விலை, செல்லி சிரித்தாள், விஷக்கத்தி, குழலோசை போன்ற கதைகளும் பெண் சுதந்திரத்தை வலியுறுத்துவனவாக ஒற்றைக்குருவி, நீலரிப்பன் போன்ற கதைகளும் சமுதாயத்தில் பெண்களின் மதிப்பை நிலைநிறுத்துவதாக ஊர்வசி, கண்ணன் மீண்டும் வருகிறான் என்ற சிறுகதைகளும், பெண்கள் எதிர்கொள்ளும் பாலியல் சிக்கல்களை வெளிப்படுத்துவனவாக வந்த சுவடு, பாதுகாப்பு வளையம், அழகின் நிறம், வளர்த்தமான், 'ஓ,' நல்லதோர் வீணை முதலான கதைகளும் திகழ்கின்றன.

- சிக்கலில்லாமல், தெளிந்த நீரோடை போல் செல்லும் கதைப்போக்கு ஏராளமான சம்பவங்களை உள்ளடக்கியிருந்த போதும் குழப்பமில்லாமல் செல்லும் பாங்கு எழுத்தாளரின் கலைத்திறமைக்கு நல்லதொரு எடுத்துக்காட்டாக விளங்கும்.

- சிறுகதைத் தொடக்கம், முடிவு, தலைப்புப் பொருத்தம், உரையாடல், மொழிநடை, உத்திகள் ஆகிய கூறுகள் எழுத்தாளரின் தனித்தன்மையை வெளிப்படுத்துவனவாகும்.

♦ கற்பனை வளத்தோடு சிறுகதைகளை அழகுபட எடுத்துச் செல்வதும் நல்ல ஓர் உத்தியாகும்.

♦ விக்கிரமனின் சிறுகதைகள், உரையாடல் தொடக்கம், அறிமுகத் தொடக்கம், நிகழ்ச்சித்தொடக்கம், வருணனைத் தொடக்கம், சூழல் தொடக்கம், ஆர்வத் தொடக்கம், நேரடித் தொடக்கம் ஆகிய வகையில் எழுதப்பட்டுள்ளன.

♦ கதையின் தொடக்கம் எழுத்தாளனின் கலைநுட்பத்தை வெளிப்படுத்துவதுபோல் முடிவும் படிப்பாளரின் சிந்தனையைக் கிளர்ச்சியுறச் செய்வதாகும்.

♦ விக்கிரமன் சிறுகதைகளின் முடிவுகள் சில இன்பமுடிவுகளையும் சில அவலமுடிவுகளையும் கொண்டுள்ளன.

♦ கதையின் தலைமைப் பண்பைச் சுட்டும் வகையில் தலைப்பு அமையுமானால் அது படைப்பின் தரத்தை உயர்த்துவதோடு, படிப்பாளனின் சிந்தனையையும் தொட்டு நிற்பதாய் அமையும்.

♦ விக்கிரமனின் சிறுகதைத் தலைப்புகள் எளிய வார்த்தைகளால் ஆனவை, செறிவு நிறைந்தவை, உட்பொருள் கொண்டவை, ஆர்வம் ஊட்டக்கூடியவை, புதிய பார்வை உடையவை எள்ளல் சுவையும், அங்கதச் சுவையும் ஒப்பீட்டுப் பார்வையும் கொண்டவை.

♦ ஆண் தலைமைப் பாத்திரங்களின் பெயர்களையே தலைப்பாகக் கொண்டு விக்கிரமன் சிறுகதைகளைப் படைத்துள்ளார். அவ்வகையில் 'வேலு' 'சேது' 'நந்து' 'நரசிங்கராவ்' ஆகிய கதைத் தலைப்புகள் குறிப்பிடத்தக்கனவாகும்.

♦ விக்கிரமனின் சிறுகதைப் பெயர்கள் அடைமொழி தாங்கிய பெயர்களாகவும் வாக்கியத் தொடர்த் தலைப்புகளாகவும் உத்தியைச் சுட்டும் தலைப்புகளாகவும், குறியீட்டுத் தலைப்புகளாகவும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

♦ ஒரு படைப்பின் நடைத்தன்மையை அதில் பயன்படுத்தப்படும் செஞ்சொற்கள், தொடரமைப்புகள், ஒலிநயப்போக்குகள், பிறவெளிப்பாட்டுத் திறன்கள் ஆகியவற்றைக் கொண்டே அறியமுடிகிறது. இவற்றோடு இலக்கியக் கூறுகளைக் கொண்டும் நடையின் தனித்தன்மை அமையும்.

♦ படைப்பாளன் தான் சொல்லவருகின்ற கருத்தை வாசகர்களுக்கு எளிமையாக விளங்க வைக்கக் கையாளும் சில வழிமுறைகளுள் ஒன்று உத்தியாகும். இவரது சிறுகதைகளில் பின்னோக்கு உத்தி, நனவோடை உத்தி, கடித உத்தி போன்றவை கையாளப்பட்டுச் சிறுகதைக்கு மேலும் மெருகூட்டுவனவாக அமைந்துள்ளன.

இவ்ஆய்வினை மேற்கொள்ளும் காலத்து விக்கிரமனின் சிறுகதைகள் தொடர்பாக மேலும் ஆய்வு செய்வதற்கு இடமுண்டு. அந்நிலையில் ;

1. உளவியல் நோக்கில் விக்கிரமன் சிறுகதைகள்

2. விக்கிரமன் சிறுகதைகளில் சமகால எழுத்தாளர்கள்

3. விக்கிரமனின் வரலாற்றுச் சிறுகதைகள்

என்பன மேலாய்வுக் களங்களாகத் திகழ்கின்றன.

# துணைநூற்பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரம்:**


1. விக்கிரமன் (ப.அ.) — விக்கிரமனின் சிறுகதைக் களஞ்சியம்,
விக்கிரமன் பதிப்பகம்,
சென்னை.
1942-2002 (தொகுப்பு).


**துணைமைச் சான்றாதாரங்கள்:**

<u>*திறனாய்வு நூல்கள்:*</u>


1. அகிலன் — கதைக்கலை,
பாரி புத்தகப்பண்ணை,
சென்னை,
1972.

2. அலெக்சிடால்ஸ்டாய் — எழுதும் கலை,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
1978.

3. அறவாணன் க.ப. — தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள்,
தமிழ்க் கோட்டம்,
சென்னை,
1994.

4. இரத்தின சண்முகனார் — வாழ்க்கையில் உயர்வுபெற வழிகள்,
20, ஜானிஜான்கான் ரோடு,
சென்னை.

5. இராசம்மாள் — குடும்பக்கலை,
அம்சா பதிப்பகம்,
சென்னை,
2000.

6. இராமலிங்கம் மா. — 'நாவல் இலக்கியம்'
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை,
1974.

7. இராமலிங்கம் மா. — அகிலனின் கலையும் கருத்தும்,
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை,
1974.

8. இராமலிங்கம் மா. — விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதை,
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை,
1997.

9. இலக்குமித்திரன் சோ. — நமது சமூகம்,
தேமா பதிப்பகம்,
சென்னை,
1993.

10. உதயகுமார் பா. — அறிஞர் அண்ணாவின் சிறுகதைத் திறன்,
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை,
1989.

11. கண்ணபிரான் இராம. வாடைக்காற்று,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
1981.

12. கதிர் மகாதேவன்
மோகன் இரா. (ப.ஆ.) பெண்ணியம்,
இந்தியப் பல்கலைக்கழகத்
தமிழாசிரியர் மன்றம்,
வெள்ளிவிழாக் கருத்தரங்கு,
மதுரை,
1994.

13. கல்பகம் இரா. சமூகவியல்,
தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
1973.

14. கோதண்டராமன் ப. சிறுகதைக்கலை,
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை,
1958.

15. சண்முகவேலன் இரா. கதாசிரியர்களும் உத்திகளும்,
தமிழ்ப் பொழில்,
கரந்தை வெளியீடு,
1988.

16. சாலை இளந்திரையன் தமிழில் சிறுகதை,
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை,
1966.

17. சாலினி இளந்திரையன் — சங்கத்தமிழரின் மனிதநேய நெறிகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.

18. சிதம்பரநாதன் அ. — தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்,
பிலோமினா பதிப்பகம்,
சென்னை,
1977.

19. சிவத்தம்பி கா. — தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்,
சர்வோதயா இலக்கியப் பண்ணை,
மதுரை,
1976.

20. சின்னச்சாமி கு. — தமிழர் சமுதாய வரலாறு,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
1993.

21. சுப்பிரமணியபாரதி சி. — பாரதி நூல்கள்,
நான்காம் பதிப்பு,
சென்னை,
1968.

22. சுதாகரன் செ. — அழகிரிசாமியின் சிறுகதை ஒரு திறனாய்வு,
ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்,
நாகர்கோவில்,
1974.

23. செல்லப்பா சி.சு. தற்காலத் தமிழ் இலக்கியம்,
எழுத்துப் பிரசுரம்,
சென்னை,
1959.

24. தண்டாயுதம் இரா. தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
1972.

25. திருமலை ம. தமிழ் மலையாள நாவல் ஒப்பாய்வு,
பதிப்புத்துறை,
மதுரை,
2000.

26. பரமசிவானந்தம் அ.மு. சமுதாயமும் பண்பாடும்,
தமிழ்க் கலைப்பதிப்பகம்,
சென்னை,
1962.

27. பன்னீர்ச்செல்வம் பிரபஞ்சன் படைப்புகளில் சமூகம் ஓர் ஆய்வு,
எழுத்துப் பிரசுரவெளியீடு,
முதற்பதிப்பு,
1998.

28. பிரேமா இரா. (ப.ஆ.) பெண்ணியம்,
இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர்
மன்றம்,
வெள்ளிவிழாக் கருத்தரங்கு,
மதுரை,
1994.

29. மேலது பெண் மரபியலும் இலக்கியமும்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
1994.

30. புதுமைப்பித்தன் புதுமைப்பித்தன் கட்டுரைகள்,
ஸ்டார் பிரசுரம்,
சென்னை,
1956.

31. மங்கள முருகேசன் ந. இந்திய சமுதாய வரலாறு,
தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்,
சென்னை,
1975.

32. மணிமாறன் த. இலக்கியக்கலை,
மணிவாசகர் நூலகம்,
சென்னை,
1980.

33. மீனாக்குமாரி — ந.பிச்சமூர்த்தி படைப்பு ஓர் ஆய்வு,
மருவரசி வெளியீடு,
தென்காசி,
1990.

34. மீனாட்சிசுந்தரம் கா. — சிலம்பில் துணைப் பாத்திரம்,
பாரிநிலையம்,
சென்னை,
1998.

35. மீனாட்சி முருகரெத்தினம் — கல்கியின் சிறுகதைக் கலை,
சர்வோதயா இலக்கியப் பண்ணை,
மதுரை,
1976.

36. முத்தையா கரு. — ஜெயக்காந்தன் நாவல்களில்
பாத்திரப்படைப்பு,
முத்துமீனாள் பதிப்பகம்,
தேவகோட்டை,
1980.

<u>கலைக்களஞ்சியம் :</u>

37. கருப்பையன் வீ. (கட்.ஆ.) — கலைக்களஞ்சியம்,
தொகுதி - 4,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சாந்தி பிரஸ்,
சென்னை,
1961.

38. நடராசன் சி.என். (கட்.ஆ.) வாழ்வியல் களஞ்சியம் தொகுதி 7,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

39. பக்தவச்சலம் சி.மா. (கட்.ஆ.) உலக அறிஞர் கருத்துக் களஞ்சியம்,
தொகுதி - 1,
சென்னை,
1965.

40. பெரியசாமித்தூரன் (கட்.ஆ.) கலைக்களஞ்சியம், தொகுதி - 2,
தமிழ்வளர்ச்சிக் கழகம்,
சென்னை,
1955.

<u>இதழ்கள் :</u>

41. பிச்சமூர்த்தி ந. மாதர் மறுமணம்,
இதழ் - 2,
1956.

<u>ஆய்வுக் கோவைகள் :</u>

42. அருள்ஜோதி செ. (கட்.ஆ.) நாட்டுப்புறக் காதல் பாடல்களில்
ஏக்கங்களும் எதிர்ப்பார்ப்புகளும்,
முப்பத்தி எட்டாவது கருத்தரங்கு,
தமிழ் ஆய்வுக்கோவை - 1,
இந்தியப் பல்கலைக்கழக தமிழாசிரியர்
மன்றம்,
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை,
2007.

43. குணசேகரன் இரா. வைரமுத்து கவிதைகளில் உத்திகள்,
மதுரைக்காமராசர் பல்கலை,
முப்பத்தி எட்டாவது கருத்தரங்கு,
தமிழ் ஆய்வுக்கோவை - IV.
இந்தியப் பல்கலைக்கழக தமிழாசிரியர்
மன்றம்,
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை,
2007.

44. குழந்தைச்சாமி பா. (கட்.ஆ.) குடும்பம்,
இரண்டாவது கருத்தரங்கு,
தமிழ் ஆய்வுக்கோவை,
தொகுதி - II,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
அண்ணாமலை நகர்.

45. மைக்கேல் சரோஜினிபாய் (ப.ஆ.) வளர்தமிழ் ஆய்வு,
வளர்தமிழ் ஆய்வு மன்றம்,
திண்டுக்கல்.

<u>ஆங்கில நூல்கள் :</u>

46. Alfred Alwood Socialogy and its Psychological Aspect,
Newyork,
1976.

47. Abrams M.H. Glossary of Literary terms,
Third Edition,
Macmillan Company of India Ltd.,
Madras.

48. Bates H.E. — The Modern short story,
Boston,
1961.

49. Betrand Russel — Marriage and Morals George Allan,
Sunwin London,
1976.

50. Dietrich R.E & Roger H. Sundell — The Art of fiction Holt,
Second edition,
Newyork,
1974.

51. Harris CC. — The family studies in sociology,
Macmillan press,
1983.

52. Hudson W.H. — An Introduction to the Study of Literature,
George G.Harrap & Co Ltd.,
London,
1957.

53. Rees R.J. — English Literature,
Macmillan Education Ltd.,
London,
1973.

54. Middietion Murry J. — The Problem of Style,
Oxford University press,
London,
1967.

55. Sobert Liddell — The treatise of English Novel,
Boston,
1972.

| | |
|---|---|
| 56. Sedgewick | Novel and short story,<br>Boston,<br>1961. |
| 57. Ronal W. Smith | Sociology and Introduction,<br>St. Martin's Press,<br>175, Fifth Avenue,<br>Newyork,<br>1967. |
| 58. Wallack Hildick | Thirteen types of narrative,<br>Macmillan press,<br>London,<br>1966. |

## பின்னிணைப்பு - 1

## ஆய்விற்கு எடுத்துக்கொண்ட எழுபது சிறுகதைகளில் இடம்பெற்றுள்ள ஆண்பாத்திரப் பெயர்கள் பெண் பாத்திரப்பெயர்கள், சிறுகதையின் பெயர் மற்றும் வெளிவந்த ஆண்டு விபரம்.

| வ. எண். | ஆண் பாத்திரப் பெயர்கள் | பெண் பாத்திரப் பெயர்கள் | சிறுகதையின் பெயர் | வெளிவந்த ஆண்டு |
|---|---|---|---|---|
| 1. | முருகன், கந்தன் | சின்னாயி | விளையாட்டுக் கல்யாணம் | 1942 |
| 2. | மனோகர், சங்கரன் | --- | நண்பா மறந்து விட்டாயா? | 1943 |
| 3. | முதலியார், மணி | மல்லிகா | காய்ந்த மல்லிகை | 1944 |
| 4. | விநாயகம், தர்மலிங்கம் | இளம்பூர்ணம் | வாணக்காரன் | 1945 |
| 5. | கஸ்தூரி | கமலா | கஸ்தூரியின் கடிதம் | 1946 |
| 6. | வெள்ளைக்கார துரை | --- | மலைவீடு | 1946 |
| 7. | சின்னக்கவுண்டன் | பழனியம்மாள் | பொல்லாத மனசு | 1946 |
| 8. | ரகுராமன் | தங்கம் | புத்துயிர் | 1947 |
| 9. | பாஸ்கரன் | பாரிசாதம் | புதுவெள்ளம் | 1948 |
| 10. | நரசிம்மன் | மீனா | நிம்மதி | 1949 |
| 11. | சுந்தரமூர்த்தி | சிங்காரி | செவ்வந்திப்பூ சிங்காரி | 1949 |
| 12. | ஆனந்தராமன் | கமலா | அன்பும் ஆசையும் | 1949 |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | கந்தப்பன் | கண்ணம்மா | கந்தப்பன் காளை | 1949 |
| 14. | முத்தையன், மாரிச்சாமி | நல்லம்மா | கதையும், கல்யாணமும் | 1949 |
| 15. | கேசவமூர்த்தி | புஷ்பா | மீண்டநாதம் | 1949 |
| 16. | பட்டாபிராமன் | --- | பட்டாபிராமன் புனர்ஜென்மம் | 1950 |
| 17 | சுந்தரமூர்த்தி | பூங்கோதை | பூங்கோதையின் கணவன் | 1951 |
| 18. | ஜோதிமுத்து | பாரிஜாதம் | கல்யாணத்திருட்டு | 1951 |
| 19. | வேதாச்சலம் | மரகதம் | இன்பத்தின் விலை | 1951 |
| 20. | சடையப்பன் | செல்லாயி | அரையணா | 1951 |
| 21. | பொன்னையா | சந்திரமதி | சந்திரமதி பொன்னையா | 1951 |
| 22. | கேசவலு | பட்டு | பிழைத்த இதயம் | 1951 |
| 23. | மூர்த்தி | வேதா | ஒருநாள் நிம்மதி | 1954 |
| 24. | பொன்னுச்சாமி | ஆயா | பிஞ்சு நெஞ்சம் | 1954 |
| 25. | குமாரவேலு | மல்லிகா | குழலோசை | 1954 |
| 26. | கேசவன் | செல்லம் | கௌரவம் | 1954 |
| 27. | கேசவன் | பார்வதி | நீல ரிப்பன் | 1955 |
| 28. | கதையப்பன் | கல்யாணி | கதை சொன்னகதை | 1956 |

| | | | | |
|---|---|---|---|---|
| 29. | ரங்கசாமி | செல்லம் | சோதனை | 1956 |
| 30. | நாராயணன், ரகு | காமு | குழந்தைக்கு | 1956 |
| 31. | நாராயணன் | சீதா | மாற்றாந்தாய் | 1956 |
| 32. | ஆறுமுகம் | --- | அச்சாபீஸ் ஆறுமுகம் | 1956 |
| 33. | பாஸ்கரராவ், பாக்யநாதன் | பிரியதரிஷிணி | கல்நெஞ்சம் | 1956 |
| 34. | பரமசிவம், கண்ணாயிரம் | முத்தம்மாள் | பாலக்காவல் | 1959 |
| 35. | ஈஸ்வரன் | விமலா, சாந்தலெட்சுமி | தெய்வத்தாய் | 1961 |
| 36. | சோமையா | --- | ஞானோதயம் | 1961 |
| 37. | பொன்னுச்சாமி | வீரம்மாள் | புலியின் புன்னகை | 1962 |
| 38. | குமார் | சாந்தா | கற்பெனும் கனல் | 1963 |
| 39. | சந்துரு, குமாரசாமி | ஞானம் | அழகின் நிறம் | 1964 |
| 40. | வேலாயுதம் | பூங்காவனம் | அரசனூர் பாலம் | 1964 |
| 41. | சோமு | கண்ணம்மா | நேர்மைக்குப்பரிசு | 1968 |
| 42. | ராமராவ், நாகராஜ் | எஜமானியம்மா | சுதந்தரப்பறவை | 1968 |
| 43. | கந்தநாதன் | தேவகி, மரகதம் | சத்தியமான சத்தியம் | 1971 |
| 44. | ரங்கோத்தமன் | ஊர்வசி | ஊர்வசி | 1972 |

| | | | | |
|---|---|---|---|---|
| 45. | பூச்சாண்டி | கமலம் | பூச்சாண்டி | 1974 |
| 46. | அனந்து | செல்வி | ஓவர் டைடம் | 1977 |
| 47. | தங்கராசு | அன்னம் | ஜாங்கிரி | 1978 |
| 48. | வேலு | கல்யாணி | வேலு | 1982 |
| 49. | பிச்சைக்காரப்பையா | மகாராணி | ‘ஓ’ | 1982 |
| 50. | மகாதேவன் | சுரேஷ் | கண்ணன் மீண்டும் வருகிறான் | 1983 |
| 51. | சந்திரன் | பூரணி | ஒற்றைக்குருவி | 1983 |
| 52. | கேசவன் | நீலாம்பிகை | வந்த சுவடு | 1984 |
| 53. | கேசவராம் | வாணி | நல்லதோர் வீணை | 1984 |
| 54. | சங்கரன் | சுதா, ரமா | உயிருக்கு மேல் | 1984 |
| 55. | நரசிங்கராவ், செல்லத்துரை | செல்லத்துரையின் மனைவி | நரசிங்கராவ் | 1985 |
| 56. | நந்து, பரசு | சித்தி | நந்து | 1989 |
| 57. | ராமன் | செல்லி | செல்லிசிரித்தாள் | 1990 |
| 58. | பதி | கமலம் | அரைவயிறு | 1991 |
| 59. | அன்பானந்தர் | கயல்வழி | வளர்த்தமான் | 1992 |
| 60. | சேது | --- | சேது | 1992 |

| | | | | |
|---|---|---|---|---|
| 61. | ராஜகோபாலன் | கனகம் | பழைய ராஜகோபாலன் | 1993 |
| 62. | முத்து | செண்பகம் | காக்கைகருவி எங்கள்சாதி | 1994 |
| 63. | அம்பலவாணர், முத்துவேல் | பொற்கொடி | விஷக்கத்தி | 1994 |
| 64. | கருணாகரன், மூர்த்தி | தேவசேனை | மனிதநேயம் | 1998 |
| 65. | சோமு | புவனா | புவனாவுக்காக | 1998 |
| 66. | மனோகரசாமி பீம்சிங் | தேவகுஞ்சரி | பாதுகாப்புவளையம் | 1999 |
| 67. | முருகவேள் | மங்கையற்கரசி | அழுக்கு | 2000 |
| 68. | பாலகிருஷ்ண லாலா | லாலாவின் மனைவி | குலதனம் | 2001 |
| 69. | ரகுராமன் | மஞ்சுளா, சாவித்ரி | தங்கவளையல் | 2002 |
| 70. | தர்மமூர்த்தி, கபாலி, மீரான் | கபாலியின் மனைவி | தர்மமூர்த்தியின் தயவு | 2002 |

பின்னிணைப்பு - 2

## ஆய்வுக்குட்பட்ட எழுபது சிறுகதைகளில் இடம்பெறும் எழுத்தாளர்கள் கதைக்கருக்கள்

| வ. எண். | சிறுகதையின் பெயர் | எழுத்தாளர் | கதைக்கரு |
|---|---|---|---|
| 1. | விளையாட்டுக் கல்யாணம் | நவீனன் | விட்டுக்கொடுத்தல் |
| 2. | நண்பா, மறந்துவிட்டாயா? | நவீனன் | நட்பு |
| 3. | காய்ந்த மல்லிகை | கங்கா, ராமமூர்த்தி | காதல் |
| 4. | வாணக்காரன் | மகரிஷி | குடிகுடியைக் கெடுக்கும் |
| 5. | கஸ்தூரியின் கடிதம் | கௌதமநீலாம்பரன் | சமுதாயத் தொண்டு |
| 6. | மலைவீடு | தாமரைக்கண்ணன் | மூடநம்பிக்கை |
| 7. | பொல்லாத மனசு | டாக்டர் பூவண்ணன் | காதல் |
| 8. | புத்துயிர் | நா.ராமச்சந்திரன் | காதலுக்கு எதிர்ப்பு |
| 9. | புதுவெள்ளம் | மேகலா சித்ரவேல் | காதல் |
| 10. | நிம்மதி | மாயூரன் | குடும்பநிலை |
| 11. | செவ்வந்திப்பூ சிங்காரி | பூவை.எஸ்.சண்முகம் | நிறைவேறும் காதல் |
| 12. | அன்பும் ஆசையும் | ஜெயரதன் | கிராமத்துக்காதல் |
| 13. | கந்தப்பன் காளை | நாகராஜகுமார் | அஃறிணை உயிரிடத்து அன்புசெலுத்துதல் |

| வ. எண். | சிறுகதையின் பெயர் | எழுத்தாளர் | கதைக்கரு |
|---|---|---|---|
| 14. | கதையும் கல்யாணமும் | டாக்டர் வாசன் | குடும்பநிலை |
| 15. | மீண்டநாதம் | ஏ.நடராசன் | தங்கையின் பாசம் |
| 16. | பட்டாபிராமன் புனர்ஜன்மம் | ஜெயா வெங்கட்ராமன் | நட்பு |
| 17. | பூங்கோதையின் கணவன் | அரசு மணிமேகலை | சமுதாயக்கொடுமை |
| 18. | கல்யாணத்திருட்டு | பி.எஸ்.மணி | குடும்ப வறுமை |
| 19. | இன்பத்தின் விலை | இந்திரா சௌந்தரராஜன் | காதல் |
| 20. | அரையணா | பின்னலூர் மு.விவேகானந்தன் | மறுமலர்ச்சி |
| 21. | சந்திரமதி பொன்னையா | அய்க்கண் | காதலில் இடையூறு |
| 22. | பிழைத்த இதயம் | கு.சண்முகசுந்தரம் | குடும்பநிலை உணர்த்தல் |
| 23. | ஒருநாள் நிம்மதி | க.பஞ்சாபகேசன் | கூட்டுக்குடும்பநிலை |
| 24. | பிஞ்சுநெஞ்சம் | கே.பி.நீலமணி | குழந்தையின் மனமறிதல் |
| 25. | குழலோசை | தமிழினியன் | ஊடல் நீக்கும் காதல் |
| 26. | கௌரவம் | ஜோதிர்லதா கிரிஜா | குடும்பவறுமை |
| 27. | நீலரிப்பன் | சுப்ரஜா | வறுமை |
| 28. | கதைசொன்னகதை | பி.வி.ஆர் | பெண்ணியச்சிந்தனை |

| வ. எண். | சிறுகதையின் பெயர் | எழுத்தாளர் | கதைக்கரு |
|---|---|---|---|
| 29. | சோதனை | மாயாவி | மறுமலர்ச்சி |
| 30. | குழந்தைக்கு | பரத் | சுட்டிக்குழந்தையின் செயல் |
| 31. | மாற்றாந்தாய் | டி.எஸ்.கோதண்டராமன் | பெண்ணியச்சிந்தனை |
| 32. | அச்சாபீஸ் ஆறுமுகம் | ஆர்னிகாநாசர் | அலுவலகச் சூழல் |
| 33. | கல்நெஞ்சம் | டி.ஆர்.கணேசன் | காதலுக்கு எதிர்ப்பு |
| 34. | பாலக்காவல் | ராஜேந்திரகுமார் | சமுதாயப்பணி |
| 35. | ஞானோதயம் | சு.சமுத்திரம் | திருந்தி வாழ்தல் |
| 36. | தெய்வத்தாய் | மன்னார்குடி விசுவநாதன் | தாயின் பாசம் |
| 37. | புலியின்புன்னகை | ரா.வேங்கடசாமி | சாதி வேற்றுமை |
| 38. | கற்பெனும்கனல் | கோபுலு | உண்மைக்காதல் |
| 39. | அழகின்நிறம் | பாவைசந்திரன் | குடும்பக்கதை |
| 40. | அரசனூர்பாலம் | நெய்வேலி பாரதிக்குமார் | காதல் |
| 41. | நேர்மைக்குப் பரிசு | சரயு | நேர்மை |
| 42. | சுந்தரப்பறவை | பால்யூ | குழந்தையின் செயல் |
| 43. | சத்தியமான சத்தியம் | பட்டுக்கோட்டை பிரபாகர் | சராசரி மனிதனின் இயல்பு |

| வ. எண். | சிறுகதையின் பெயர் | எழுத்தாளர் | கதைக்கரு |
|---|---|---|---|
| 44. | ஊர்வசி | கீழாம்பூர் | விலைமாதர் திருந்துதல் |
| 45. | பூச்சாண்டி | அமுதவன் | குழந்தைக்கதை |
| 46. | ஜாங்கிரி | பிரதிபா ராஜகோபாலன் | போலிக்காதல் |
| 47. | ஓவர்டைடம் | ஏர்வாடி இராதாகிருஷ்ணன் | பொய்வாழ்வின் நிலை |
| 48. | வேலு | அனுராதாரமணன் | அண்ணன் உயிரைக்காத்தல் |
| 49. | ஓ...! | பா.சத்தியமோகன் | தீயவனாயினும் கணவனைக் காட்டிக்கொடுக்காதிருத்தல் |
| 50. | கண்ணன் மீண்டும் வருகிறான் | குன்றக்குடி பெரியபெருமாள் | மனிதமன இயல்பு |
| 51. | ஒற்றைக் குருவி | பரமன் | பெண்ணியச்சிந்தனை |
| 52. | வந்த சுவடு | வித்யா சுப்ரமண்யம் | பெண்ணின் உறுதி |
| 53. | நல்லதோர் வீணை | அபர்ணாநாயுடு | பாலியல் தொந்தரவு |
| 54. | உயிருக்குமேல் | ராஜேஸ்குமார் | காதலியை மறத்தல் |
| 55. | நந்து | டாக்டர் நீலவன் | குழந்தையின் ஏக்கம் |
| 56. | நரசிங்கராவ் | திலகவதி ஐ.பி.எஸ். | அறம்வெல்லும் பாவம் தோற்கும் |
| 57. | நந்து | டாக்டர் நீலன் | குழந்தையின் இயல்பு |

| வ. எண். | சிறுகதையின் பெயர் | எழுத்தாளர் | கதைக்கரு |
|---|---|---|---|
| 58. | செல்லி சிரித்தாள் | பி.எஸ்.ரங்கநாதன் | பெண்ணின் உறுதி |
| 59. | அரைவயிறு | வேதா கோபாலன் | விட்டுக் கொடுத்தல் |
| 60. | சேது | புஷ்பா தங்கதுரை | பொறாமையின் விளைவு |
| 61. | பழைய ராஜகோபாலன் | நளினி சாஸ்திரி | பழைமையைப் போற்றல் |
| 62. | காக்கை குருவி எங்கள்ஜாதி | பா.ராகவன் | சாதி வேற்றுமை |
| 63. | விஷக்கத்தி | விக்கிரமன் (என்னுரை) | காதலுக்கு எதிர்ப்பு |
| 64. | மனிதநேயம் | எஸ்.பி.ராஜா | மனிதநேய உணர்வு |
| 65. | புவனாவுக்காக | பிரபாகரபாபு | வறுமை |
| 66. | பாதுகாப்புவளையம் | சுடர் முருகையா | பெண்ணின் கற்பைக் காத்தல் |
| 67. | அழுக்கு | புனர்வசு | மொழிப்பற்று |
| 68. | குலதனம் | அமுதா பி.பாலகிருஷ்ணன் | வறுமை |
| 69. | தங்கவளையல் | மாலா உத்தண்டராமன் | நட்பின் பெருமை |
| 70. | தர்மமூர்த்தியின் தயவு | டாக்டர் எஸ்.குலசேகரன் | கபாலியின் பெருந்தன்மை |

*பின்னிணைப்பு - 3*

## விக்கிரமன் படைப்புகள்

### சிறுகதைகள் தொகுப்பு

| | |
|---|---|
| *1. குழலோசை* | ***1956*** |
| *2. சோமதேவனின் உயிர்* | ***1962*** |
| *3. கடமையும் கணிடவிழியும்* | ***1963*** |
| *4. தங்க விக்கிரம்* | ***1967*** |
| *5. அழகின் நிறம்* | ***1982*** |
| *6. விக்கிரமன் கதைகள்* | ***1986*** |
| *7. 'ஓ' முதலிய சிறுகதைகள்* | ***1991*** |
| *8. பொன்விழா ஆண்டுச் சிறுகதைகள் (70)* | ***1994*** |
| *9. சங்குத்தேவன் புனர்ஜனனம்* | ***1999*** |
| *10. சிறுகதைக்களஞ்சியம் (தொகுப்பு 4)* | ***1999*** |
| *11. சிறுகதைக் களஞ்சியம் (தொகுப்பு 5)* | ***2004*** |
| *12. அபிமானவல்லி (வரலாற்றுச் சிறுகதைகள் தொகுப்பு)* | ***2007*** |

### வரலாற்று நாவல்கள்

| | |
|---|---|
| *1. உதய சந்திரன்* | ***1960*** |
| *2. பரிவாதினி* | ***1960*** |
| *3. பாண்டிய மகுடம்* | ***1961*** |
| *4. நந்திபுரத்துநாயகி* | ***1964*** |
| *5. காஞ்சி சுந்தரி* | ***1964*** |
| *6. வல்லத்து இளவரசி* | ***1965*** |
| *7. சித்திரவல்லி* | ***1974*** |
| *8. குலோத்துங்கன் சபதம்* | ***1974*** |
| *9. மாறவர்மன் காதலி* | ***1978*** |

10. இராஜாதித்தன் சபதம் 1978

11. மங்கலத்தேவன் மகள் 1979

12. யாழ்நங்கை 1979

13. தெற்கு வாசல் மோகினி 1997

14. தியாக வல்லவன் 1979

15. கடல் மல்லைக் காதலி 1979

16. இரத்தின ஹாரம் 1979

17. சோழ இளவரசன் கனவு 1980

18. பகைவனின் காதலி 1981

19. கோவூர் கூனன் 1982

20. கொன்றைமலர்க்குமரி 1982

21. சோழமகுடம் 1983

22. வஞ்சிநகர் வஞ்சி 1985

23. நாச்சியார் மகள் 1985

24. வந்தியத்தேவன் வாள் 1986

25. கள்ளிக்கோட்டை இளவரசி 1988

26. இராசராசன் சபதம் 1988

27. மதுரை மகுடம் 1988

28. ஒருவாள் ஒருமகுடம் இருவிழிகள் 1992

29. மாணிக்க வீணை 1992

30. கங்காபுரிக் காவலன் 1996

31. ஆலவாய் அரசி 2001

32. பராந்தகன் மகன் 2002

33. செம்பியன் மாதேவி 2003

34. தெற்குவாசல் மோகினி 2003

**சமூக நாவல்கள்**

1. அழகு ராணி 1957
2. திருவிளக்கு 1963
3. நல்லமனிதர்கள் 1967
4. இதய பீடம் 1979
5. சந்திரமதி 1998

**நாடகம்**

1. சொல் காத்த சேதுபதி 1989

**கவிதைத் தொகுப்பு**

1. வீரத்தாய் 1942
2. என்றும் இன்பநாள் 2000

**இதழ்**

1. ஒப்பிலக்கியப் பீடம் 2001

**கட்டுரைத் தொகுதி**

1. காஞ்சிக் காவலர் கதை 1960
2. பொற்காலத்தின் கதை 1960
3. வாதாவி விஜயம் 1979
4. சிற்பம், சித்திரம், கோபுரம், கோயில் 1987
5. எப்போ வருவாரோ 2000
6. நினைத்துப் பார்க்கிறேன் 2004

**ஆங்கில நூல்**

1. தமிழ்நாட்டில் தெலுங்கு மன்னர்கள் 1974

பின்னிணைப்பு - 4

# விக்கிரமனின் தன்விவரக் குறிப்பு

**திரு. விக்கிரமன்**

*3, செயசங்கர் தெரு,*

*மேற்குமாம்பலம்,*

*சென்னை - 600 003.*

| | | |
|---|---|---|
| தொலைபேசி | : | 04423712485 |
| பிறந்த ஊர் | : | திருச்சிராப்பள்ளி |
| பிறந்த நாள் | : | 19.03.1928 |
| இயற்பெயர் | : | சு.வேம்பு |
| புனைபெயர்கள் | : | விக்கிரமன், விசித்தர சித்தன், திரிபுவனன், மாம்பலக்கவிராயர், சானவி, சுயோதனன், சு.வே. |
| பெற்றோர் | : | தந்தை பெயர் சுப்பிரமணிய ஐயர், தாயார் இலட்சுமி அம்மாள், தந்தை அந்தக்காலத்தில் தென்னிந்திய இரயில்வேயில் பணியாற்றினார். பாம்பன் பாலம் கட்டிய குழுவில் இவரது தந்தையும் ஒருவர். இரயில்வே துறையில் சேரும் முன்பாக இவர் தந்தை சிறிதுகாலம் 'சுதேசமித்திரன்' நாளிதழில் பணியாற்றினார். பாரதியார் பணியாற்றிய சமயம் அது. |
| பள்ளிப்பருவம் | : | பள்ளிப் பருவத்திலிருந்தே கையெழுத்து ஏடுகளை நடத்துவதில் ஆர்வம் உடையவர். உயிர்நிலைப்பள்ளியில் படிக்கும்போது |

‘தமிழ்ச்சுடர்’ என்ற கையெழுத்து ஏட்டை நடத்தி ராஜாஜி, கல்கி, ஏ.கே.செட்டியார் போன்றோரின் பாராட்டைப் பெற்றவர்.

பத்திரிகைப்பணி : அமரர் சின்ன அண்ணாமலை தொடங்கிய ‘வெள்ளிமணி’ வாரப்பதிப்பில் 1946 ஆம் ஆண்டு முதல் 1947 ஆம் ஆண்டு வரை பணி. 1948ல் தமிழ்ப் பண்ணைப் பதிப்பக வெளியீட்டுத் துறையில் பணி. 1949 ஆம் ஆண்டு ‘அமுத சுரபி’ இலக்கிய மாத இதழ் நிறுவனத்தில் சேர்ந்து 1950 ஆம் அண்டு ‘அமுதசுரபி’ ஆசிரியர் ஆனார். 1997 முதல் ‘இலக்கியப்பீடம்’ என்ற இலக்கிய இதழின் ஆசிரியராக இருந்து வெளியிடுகிறார். சிறிது காலம் கீழ்க்கண்ட இதழ்களுக்கு ஆசிரியராகப் பணியாற்றினார்.

‘குருவி’ - குழந்தைகளுக்கான வார இதழ்

‘சுந்தரி’ - மாதம் இருமுறை

‘மங்களம்’ - வார இதழ்

‘தமிழ்அரசி’ - வார இதழ்

‘ஒப்பிலக்கிய பீடம்’ - மாதம் ஒருமுறை

**பரிசுகள்**

1. தமிழக அரசின் தமிழ்வளர்ச்சித்துறை (சோழ இளவரசன் கனவு - சிறந்த நாவல்பரிசு) ரூ.12,000
2. எம்.ஏ.சி.அறக்கட்டளை இராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் விருது (மதுரை மகுடம் வரலாற்றுப் புதினத்திற்காக) ரூ.25,000

3. தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம் - தமிழ் அன்னை விருது ரூ.5000

4. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் காஞ்சிமடத்தில் அமர்ந்த ஐம்பதாவது பொன்விழாவின்போது அளித்த பரிசு - பொற்பதக்கம்.

5. விக்கிரமனின் எழுபத்தைந்து ஆண்டு நிறைவு விழாவின் போது பவளவிழாக் குழுவினரால் வழங்கப்பெற்றது. ரூ.2 லட்சம் பணமுடிப்பு.

6. மன்னார்குடி செங்கமலத்தாயார் அறக்கட்டளை தமிழ்ப் பணி விருது ரூ.50,000

7. பெங்களூரு தமிழ்ச்சங்கம் வரவேற்பு நிகழ்ச்சியில் திரு.ஈஸ்வரமூர்த்தி அவர்களால் 2009ல் 'தமிழ் இலக்கியத்தின் டால்ஸ்டாய்' எனும் விருதினை வழங்கிச் சிறப்பித்தது.

**அயல்நாட்டுப் பயணம்**

மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, பாரீஸ், துபாய், ரோம் முதலிய இடங்களுக்கு இலக்கியக் குழுவுடன் பயணம் மேற்கொண்டார்.

**சமூகப் பணிகள்**

1. நிர்வாக அறங்காவலர், தமிழ் எழுத்தாளர் நவநிதி அறக்கட்டளை.

2. தலைவர், அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை.

3. தமிழ் எழுத்தாளர்களை கல்கத்தா, தில்லி, கன்னியாகுமரி அண்ணாமலை நகர் ஆகிய இடங்களுக்கு அழைத்துச் சென்று கருத்தரங்கு நடத்தியமை.

4. பாரதி விழாவை எட்டயபுரத்தில் ஆண்டுதோறும் நடத்தியமை.

5. அரசு உறுப்பினர் இருமுறை இயல், இசை, நாடக மன்றத்தில் அரசு சார்பு பிரதிநிதியாகப் பணியாற்றி இருமுறை சிறந்த தமிழ்ப் பட்டங்களைத் தேர்ந்தெடுக்கும் குழுவில் பணியாற்றியமை.

6. தமிழ்நாடு அரசு மதுவிலக்குக் குழு உறுப்பினராக செயலாற்றியமை.

**ஆராய்ச்சி**

*1. தமிழ்நாட்டில் தெலுங்கு மன்னர்கள் என்ற ஆராய்ச்சி நூல்.*

*2. ஆயிரம் ஆண்டுகளில் தமிழகம் என்ற நூலில் தமிழ் நாட்டு வரலாற்றை இளைஞர்களுக்கு எழுதிவருதல்.*

**ஒலிநாடா**

*திருக்குறள் 'அறத்துப்பால்' முதல் இரண்டு அதிகாரங்களை எளிய உரையுடன் எழுதியுள்ளமை.*

**நாடகம்**

*இவர் எழுதிய 'பரிவாதினி' இதயபீடம் நாடகங்கள் பலமுறை மேடை நாடகமாக நடிக்கப்பட்டன.*

**தொலைக்காட்சி**

*'நிம்மதி' என்ற நாடகம் தொலைக்காட்சித் தொடராக ஒளிபரப்பாகிறது. சென்னைத் தொலைக்காட்சியிலும், சன் தொலைக்காட்சியிலும் பலமுறை நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டுள்ளார்.*